# உண்மை விளக்கம்

மூலமும் உரையும்





திருவாவடுதுறை ஆதீனம்
1954

திருவாவடுதுறை ஆதீனவெளியீடு 87



உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# உண்மை விளக்கம்

## முதலியன

---

திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறையாதீனத்து
இருபத்தொன்றாவது குருமஹாசந்நிதானம்
**ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணியதேசிகமூர்த்திகள்**
கட்டளையிட்டருளியபடி

திருவாவடுதுறை ஆதீன வித்துவான்
**த. ச. மீனாட்சிசுந்தரம் பிள்ளையால்**
பல பிரதிகளைக்கொண்டு பரிசோதித்துப் பதிப்பிக்கப்பெற்றன.

---

உரிமை பதிவு.

சய-புரட்டாசி

1954

## கலைமகள் விழா மலர்




ஸ்ரீ முருகன் அச்சகம்,
கும்பகோணம்.



இருபத்தொன்றாவது குருமஹாசந்நிதானம்
ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணியதேசிகசுவாமிகள்

## இப்புத்தகத்துள் அடங்கியவை

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# முகவுரை

உண்மை விளக்கம் என்பது உண்மையினது விளக்கம் என விரித்துரைக்கப்படும். ஆறும் வேற்றுமைத்தொகை. இஃது உண்மையை விளக்கிக் கூறும் நூல் எனப்பொருள்படும். உண்மையாவது சிவபெருமான் அருளிச்செய்த சிவாகமங்களிலேயுள்ள பதியின் உண்மையும், பசுவின் உண்மையும், பாசத்தின் உண்மையும் ஆம். அவ்வுண்மைகளை விளக்கிக் காட்டும் நூல் இது எனக் காரணக்குறியாயிற்று: அன்மொழித்தொகை. இதனை அருளிச்செய்தவர்கள் திருவதிகை-மனவாசகங்கடந்த நாயனார். இவர்கள் ஸ்ரீ மெய்கண்டதேவநாயனாருடைய மாணவருள் ஒருவர். இந்நூலில் உள்ள செய்யுட்கள் (காப்பு-1: நூல் 53) 54. தத்துவங்களாவன யாவை? ஆணவமலமாவதுயாது? வினையாவதுயாது? ஆன்மசொரூபமாவது யாது? கடவுள் சொரூபம் யாது? திருநடமாவது யாது? ஸ்ரீ பஞ்சாக்கரத்தின் உண்மை யாது? என மாணவர் வினவியறிதலும், அதற்கு ஆசிரியர் விடையிறுத்தலும் போல இந்நூல் அமையப் பெற்றுளது. ஆன்மதத்துவம், வித்தியாதத்துவம், சிவதத்துவம் என்பனவும் அடைவே கூறப்பட்டுள. ஐம்பெரும் பூதங்களின் வடிவம், நிறம், எழுத்து, குறி, அதிதெய்வம், தொழில், குணம், ஞானேந்திரியங்கள், கன்மேந்திரியங்கள், அந்தக்கரணம் இவைகளும் முறையே 17 செய்யுட்களால் கூறப்படுகின்றன. ஆன்மரூபம், சிவரூபம், பஞ்சாக்கர நடனம், ஐந்தொழில்நடனம், நடனத்தின்உண்மை, அஞ்செழுத்து, அத்துவித முத்தி, முத்தியிலும் மூன்று முதல், குருலிங்க சங்கம வழிபாடு முதலியனவும் இதன்கண் நன்கு தெளிவாக விளக்கப்பட்டுள்ளன.

இனி, வேத சிவாகமங்களிற் கூறப்பட்டுள்ள பதிபசுபாச உண்மைகளைத் திரட்டிப் பெரியோர் பலரும் தனித்தனியே 1. தத்துவ விளக்கம், 2. தத்துவப்பிரகாசிகை, 3. தத்துவசங்கிரகம், 4. தத்துவத்திரய நிர்ணயம், 5. உண்மைவிளக்கம், 6. தத்துவரத்னகரம் முதலிய பலப்பல நூல்களை விரித்தும் தொகுத்தும் அருளிச்செய்திருக்கின்றனர். இவற்றுள், 1. தத்துவவிளக்கம் என்பது திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகளுடைய நன்மாமனுராகிய ஸ்ரீ சம்பந்த சரணலயரால் தமிழில் அருளிச்செய்யப்பட்ட 51 கலித்துறைச் செய்யுள்களை உடையது. 2. தத்துவப்பிரகாசிகை என்பது போஜ தேவரால் வடமொழியிலே 76 சுலோகங்களால் செய்யப்பட்டுள்ளது. தத்துவப்பிரகாசம் என்பது தத்துவங்களின் உண்மையான சொரூபத்தை அறிவிப்பது எனப்பொருள்படும். இதற்கு வடமொழியிலே உரைவகுத்தவர் ஸ்ரீ அகோரசிவாசாரியர். முற்கூறிய தத்துவவிளக்கத்தை ஆதாரமாகக்கொண்டே ஆரியாவிருத்த சுலோகத்தினுல் வடமொழி தமிழ்மொழிகளில் வல்லவராகிய போஜதேவர் தத்துவப்பிரகாசிகையை இயற்றினுர் என்பர் பெரியோர். 3. தத்துவசங்கிரகம் என்பது சத்தியோ ஜோதி சிவாசாரியரால் வடமொழியிலே 58 சுலோகங்களால் செய்தருளப்பெற்றது. மதங்கம் முதலிய மூலாகமங்களில் கூறப்படும் தத்துவ இலக்கணம் மிகவும் விரிவாகவுள்ளமையின் சுருக்கமாக இந்நூல் இயற்றப்பெற்றது என ஆசிரியரே முதல் சுலோகத்தில் அருளியிருக்கின்றுர். இதற்கு ஸ்ரீ நாராயணகண்டர் என்பவரால் விருத்தியுரை யொன்று செய்யப்பட்டது. பின்பு, ஸ்ரீ அகோரசிவாசாரியரால் சிற்றுரை யொன்றும் செய்யப்பட்டுள்ளது. சத்தியோஜோதி சிவாசாரியர் இரௌரவ ஆகமவிருத்தியும் செய்திருக்கின்றனர். சுவிருத்தி, சத்விருத்தி என்பன இரௌரவ ஆகமவிருத்தியின் பெயர்களாம். இரௌரவ ஆகமத்திற் கிடைத்த பொருளின் உண்மையைத் தத்துவ சங்கிரகம் எனப் பெயரிட்டுரைத்தது போலவே, சுவாயம்பு ஆகமத்திற் கிடைத்த பொருளையும் திரட்டி, 4. தத்துவத்திரய நிர்ணயம் எனப் பெயரிட்டு விருத்திகாரராகிய ஸ்ரீ சத்தியோஜோதிசிவாசாரியர் 32 சுலோகங்களால் ஒரு வடமொழி நூல் இயற்றியிருக்கின்றனர்.

இதற்கு ஸ்ரீ ஜன்யை என்னும் வியாக்கியானத்தை அகோரசிவா சாரியரே வடமொழியில் செய்தருளியிருக்கின்றனர்.

இனி, 5. உண்மைவிளக்கம் :—திருவதிகை—மனவாசகங்கடந்தாரால் அருளிச்செய்யப்பட்டது என்பது முன்னே கூறப்பட்டது.

6. தத்துவார்த்தரகாம் என்பது கோகழி அடிகள் என்னும் ஸ்ரீ மறைஞானதேசிகரால் செய்யப்பட்டது. இதன்கண் உள்ள செய்யுட்கள் 1043. இந்நூலில் திரிபதார்த்த இலக்கணங்களும், சமய பேதசங்கற்ப நிராகரணங்களும், அவத்தை பேதங்களும், யோக பேதங்களும், சித்தி பேதங்களும், ஞானத்தின் வகைகளும், முத்தி நிலைகளும் விரிவாகக்கூறப்பட்டுள. இவ்வாசிரியர் திருமூலதேவர் பரம்பரையோடு சம்பந்தமுடையவர் எனத்தோற்றுகிறது. இஃது ஆராய்தற்குரியது.

இனி, இரத்தினத்திரயம் என்னும் வடமொழி நூல் சிவம், சத்தி, விந்து ஆகிய மூன்று இரத்தினங்களை விஷயமாகக்கொண்டு ஸ்ரீ கண்டாசாரியரால் இயற்றப்பெற்றுள்ளது. இது ஸ்ரீ இராம கண்டரால் செய்யப்பட்ட 'ஆலோகம்' என்னும் வியாக்கியானத்தை அநுசரித்துச் செய்யப்பட்டது என்பர். இரத்தினத்திரய நூலுக்கு ஸ்ரீ அகோரசிவாசாரியரால் 'உல்லேகினி' என்னும் வியாக்கியானமும் செய்யப்பட்டுள்ளது. போககாரிகை, நாதகாரிகை, மோட்சகாரிகை, பரமோட்சநிராசகாரிகை முதலியனவும் சைவர்கள் நன்கு கற்றுணர வேண்டியவையே. 'போககாரிகை' சத்தியோஜோதி சிவாசாரியராலும் 'நாதகாரிகை' ஸ்ரீ பட்டராம கண்டராலும் வடமொழியில் இயற்றப்பட்டன. போககாரிகை—146 சுலோகங்கள்; நாதகாரிகை-25 சுலோகங்கள். ஸ்ரீ பட்டராமகண்டர் என்பவர் நாராயணகண்டரின் புதல்வர். நாதகாரிகைக்கு அகோர சிவாசாரியர் செய்த உரை 'பாஜன்யை' என்று சொல்லப்படும். போககாரிகைக்கு உரை செய்தாரும் அவரே. மோட்சகாரிகை—157 சுலோகங்கள். பரமோட்ச நிராசகாரிகை—60 சுலோகங்கள். இவையிரண்டு நூல்களையும் இயற்றினர் ஸ்ரீ சத்

தியோஜோதி சிவாசாரியர். இவ்விரண்டிற்கும் வடமொழியிலேயே உரை வரைந்தார் ஸ்ரீ பட்டராமகண்டர்.

இனி, தத்துவப்பிரகாசிகை முதலிய எட்டு நூல்களும் அட்டபிரகரணம் என்று கூறப்படும். அகோர சிவாசாரியர் சிவசம வாதி யாகலின் சைவர்கள் சித்தாந்தப்பார்வையால் அவ்வுரைகளை நன்கு பயிலவேண்டும். சித்தாந்த சைவர்கள்பால் அவ்வுரைகளைக் கேட்டுத்தெளிக.

துகளறுபோதக்கட்டளை என்னும் நூல் உரைநடையில் உரையாடுதல்போல் அமைந்துள்ளது. சிற்றம்பலநாடிகள் அருளிய துகளறுபோதநூலைப் படித்தற்குப் பெரிதும் இது துணைசெய்வது. குருவணக்கச் செய்யுளை நோக்குமிடத்துச் சிற்றம்பலநாடிகள் சீடரோ? அல்லது சிற்றம்பலநாடிகள்பால் பேரன்புபூண்ட வேறு ஒருவரோ? இதனைச் செய்திருக்கவேண்டும் எனத்தோற்றுகின்றது. எங்ஙனமாயினும், சித்தாந்த சைவநூல்களில் நுழையும் மெய்யன்பர் கட்குப் பெருவிருந்தாகும் இஃதென்பது மறுத்தற்கு ஒண்ணாததாம். குருசீடர் தம்முள் உரையாடி உண்மைப்பொருள் பலவற்றை விளக்கும் முறையிலே 'துகளறுபோதக்கட்டளை' என்னும்பெயர்க் காரணமும் முதலில் நன்கு கூறப்பட்டுளது. பரமேசுவரன், ஆன்மாக்கள், ஆணவமலம், புண்ணியபாவம், தனுகரண புவனபோகங் கள், மகாமாயை, திரோதாயி இவற்றின் உண்மைகளை முதற்கட் கூறிப் படிப்படியாகச சீடனை அநுபவம் வினவிக் கொண்டே சென்று பஞ்சபூதப் பழிப்பு, பொறியறவுணர்தல், அந்தக்கரண சுத்தி, சுத்ததத்துவதூடணம், அருட்கேவலம், பராசத்தி, பரை தரிசனம், பரைவியாத்தம், பரையோகம், சுத்தாவத்தை, பரை யுணர்போகம், சுத்தபரையோகம், முத்திசாக்கிரம், சன்மார்க்க மான ஞானமார்க்கம் முதலியனவும் எளிய இனிய உரைநடையில் இதனுள் விளக்கப்பட்டுள.

இதனடுத்து விளங்குவது 'ஞானமிர்தக்கட்டளை' என்பது. சித்தாந்த சைவநூல்களில் பிரவேசிக்கும் மாணவர்கட்கு இதுவும்

இன்றியமையாத தொன்றும். தூகளறுபோத நூலில் நுழைந்து நுண்பொருளறிய விரும்புவோருக்குத் தூகளறுபோதக்கட்டளை எவ்வாறு நன்கு பயன்தரவல்லதோ? அவ்வாறே, ஞானமிர்தம் ஆகிய நூலில் நுழைந்து நுண்பொருள்களை ஆராய்ந்துணர இந்த ஞானமிர்தக்கட்டளையும் பெருந்துணையாக உள்ளதாம். உமையொரு பாகராகிய சிவபிரான் ஆன்மாக்கள் உய்யும்பொருட்டு அருளிச் செய்த சிவாகமத்தை மத்தாக நாட்டி, அருளே திருமேனியாகக் கொண்டெழுந்தருளிய ஞானசாரியர் பிரசாதித்தருளிய உபதேசம் என்னும் வலியகயிற்றை, மதியாகிய பெரிய கையினால் வரையப் பூட்டி முறுகக்கடைதலால் அஞ்ஞானமாகிய சமுத்திரத்தினின்றும் ஒளிபெருகுமாறு ஞானமாகிய அமுதம் தோன்றியபடியினால் இந்தநூல் ஞானமிர்தம் என்னும் காரணப் பெயருடையதாயிற்று என ஸ்ரீ வாகீசமுனிவர் தாமருளிச் செய்த ஞானமிர்தம் ஆறுவது திருவகவலில் கூறியருளியமை காண்க. கட்டளை-முறை. ஒழுங்கு என்பதும் பொருந்தும். இனி, ஞானமிர்தம் என்னும் நூலைக் கற்கப்புகுவோர் முன்னறிந்து கொள்ளவேண்டிய செய்தி களின் ஒழுங்கு முறையை உணர்த்தும் நூல் இஃது என்பதே இதன் திரண்ட பொருளாம். ஞானமிர்தக்கட்டளை பதியிலக்கணம், பசு இலக்கணம், பாச இலக்கணம் என மூன்று பெரும் பிரிவாக வுள்ளது. சிருட்டிவரலாறு, நால்வகைவாக்கு, சிவதத்துவம், வித்தியா தத்துவம், ஆன்மதத்துவம், கீழாலவத்தை, மத்தியாலவத்தை, சுத்தா வத்தைகள் முதலியன இந்தக்கட்டளைநூலில் விளக்கப்பட்டுள்ளன. 'பாமதத்தை நிராகரியாதிருக்கில் தன் மதம் பிரதிட்டை ஆகாது' என்ற நியாயத்தால் பரமோட்ச நிராகரணமும் இதன்இறுதியில் கூறப்பட்டுள்ளமை காண்க. சிவாநுபவம் கூடுதற்குரிய முறைகளும் இதன்கண் நன்கு பேசப்பட்டுள்ளன.

இனி, இதனையடுத்துவிளங்குவது 'சுத்த சிவப்பிரகாசக் கட்டளை'யாம். இக்கட்டளையில் உண்ணிலைக் கருவிகள் புறநிலைக் கருவிகள் கூறியபின் பூதகாரியம் இருபத்தைந்தையும் பூததத்துவத் துள் அடக்கிப் புறநிலைக்கருவிகள் அறுபது என்பர். தத்துவம் 96, விரிவு 122. இன்னும் மிகுந்து விரியும் என்பர் இவ்வாசிரியர்.

'சுத்தமாயையிலிருந்து சுத்த காலம் முதலிய முப்பத்தொன்றும் தோன்றும் என்பர். ஐவகைக் கோசங்கள், தன் வேதனைக்காட்சி, பிருதிவி தத்துவ முதலியவற்றின் வியாப்பிய வியாபகங்கள், வித்தியா தத்துவம், சிவதத்துவம் முதலியவற்றின் வியாபகங்கள், பொய்தரு சமயம், கயிலாயபரம்பரையில் அநுபவமுடைய தேசிகர்பாற் கேட்டு அநுபவத்தால் அறிதல், மெய்தரு சமயம் ஆறு, சுத்தசைவர், சித்தாந்திகள் முதலியோர், சன்மார்க்கம், முடிந்த பரமுத்திநிலை, கேவல சகல சுத்தாவத்தைகள் முதலியனவும் விளக்கப்பட்டிருக்கின்றன.

இனி, போற்றிப்பஃறொடை, சதமணிக்கோவை, அசிந்திய விசுவசாதாக்கியம், சிவப்பிரகாசம் முதலிய நூல்கள் இதன்கண் எடுத்துக்காட்டப்பட்டிருக்கின்றன. 'துகளறுபோதம், அம்பலவாண தேசிகர், தட்சிணாமூர்த்தி தேசிகர், சுவாமிநாத தேசிகர் அருளிச் செய்த நூல்'களிலும் விரித்தறிக என இந்நூலிறுதியில் இவ்வாசிரியர் கூறியருளினர். ஆகலின், சுத்த சிவப்பிரகாசக்கட்டளையை அருளிய ஆசிரியர் திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறையாதீனத்துப்பெரியோர்களில் ஒருவர் என்பதும், இலக்கணக்கொத்து ஈசான தேசிகருக்குப்பிற்பட்டவர் அவர்என்பதும்விளங்கும். சிவப்பிரகாசக் கட்டளையினும் வேறு என்பது விளக்கவே இது சுத்த சிவப்பிரகாசக்கட்டளை என வழங்கப்பட்டது போலும்.

இதனையடுத்துள்ளது சித்தாந்தப் பிரகாசிகை என்பதாம். அந்நூலின் முகவுரை முன்னுரைகளால் அதன் பெருமை முதலாயின யாவும் விளங்கும். ஆண்டுக்காண்க.

இத்தொகுப்புநூலில் மெய்கண்ட சாத்திரம் பதினான்கனுள் ஆறுவதாக வைத்து எண்ணப்படும் உண்மை விளக்கம் இவ்வாதீனத்துப் பழையவுரையுடன் முதலாவதாக வைக்கப்பட்டுள்ளது. அவ்வுரையை அருளியவர் ஸ்ரீ நமச்சிவாயத் தம்பிரான் சுவாமிகள். உண்மை விளக்கத்தையடுத்து 1. துகளறுபோதக்கட்டளை, 2. ஞானாமிர்தக்கட்டளை, 3. சுத்தசிவப்பிரகாசக்கட்டளை ஆகிய மூன்று

கட்டளை நூல்கள் சேர்த்துவைக்கப்பட்டுள்ளன. இவைகளையடுத்து இவ்வாதீனத்துப் பெரிதும்பயிலும் சித்தாந்தப்பிரகாசிகையையும் சேர்த்துள்ளேன். இவைகளையெல்லாம் முறையாக நல்லாசிரியர் பால் பயின்றாலன்றிச் சித்தாந்த சைவ நூல்களுட்புக இயலாதென் பதை அறிஞர் எவரும் உணர்வர். ஆசிரியர்பால் பயில அவகாச மின்றித் தாமே சித்தாந்தசைவ நுண்பொருள்களை ஆராய முற்படும் மெய்யன்பர்களுக்கு இவைகள் பெரிதுந் துணைசெய்வன என்பதில் ஐயமில்லை. உண்மை விளக்க முதலிய இத்தொகுப்பு நூல்களை யேனும் சித்தாந்த சைவர்கள் நன்கு கற்றுணர்தல் வேண்டும். இக் கட்டளை நூல்களால் இக்காலத்து அன்பர் பலர் 'சித்தாந்த நூல்கள் வசனவடிவில் இல்லை அதனால் எவரும் சித்தாந்த நூல்களைப்பயில வருத்தமுறுகின்றனர்' என்றுகூறும் குற்றம் ஒருவாறு நீங்கும் எனக் கருதுகின்றேன்.

இனி, சித்தாந்த சைவத்துக்குரிய கட்டளைநூல்கள் பலப்பல உள. அவைகளெல்லாம் பலரால் பலமுறை அச்சிடப்பட்டுள்ளன. அதுபோலவே, வேதாந்தநூற்பயிற்சிக்கு இன்றியமையாதகட்டளை களும் பலவுள. விரும்பிக் கற்போருக்கு அவை எளிதில் கிடைப் பனவே. கற்க விருப்பமில்லாருக்கு எவையும் கிடைப்பதரிதே யாம் என்க. ரிப்பன்பிரஸ் பதிப்பு, கட்டளைப்பிரபந்தம் என்னும் தொகுப்பில் பதினொன்கு கட்டளைகள் உள்ளன. அவை 1914-ஆம் ஆண்டிலே அச்சிடப்பட்டுள்ளன. வேதாந்தக்கட்டளைகள் :— நாநாஜீவவாதக்கட்டளை, ஞானக்கட்டளை, தத்துவாமிர்தக்கட்டளை, வேதாந்த தத்துவக்கட்டளை, வேதாந்த தசாவத்தைக்கட்டளைச் சுருக்கம், வேதாந்த தசகாரியக்கட்டளை, உபதேச சித் தாந்தக் கட்டளை, உபதேச வுண்மைக் கட்டளை, பிரமோபதேசக் கட்டளை முதலியனவாம். சித்தாந்தக்கட்டளைகள் :— சிவப்பிர காசக் கட்டளை, திருவாலவாய்க் கட்டளை, சித்தாந்தக் கட்டளை, சித்தாந்த சாதனக்கட்டளை, சித்தாந்த தசகாரியக் கட்டளை முதலி யனவாம். எனினும், வேதாந்தக்கட்டளை சித்தாந்தக்கட்டளைகளின் வேறுபாடு அறியார் கற்றோருள்ளும் பலருளர். ஒருவர் 'நாநா ஜீவ

வாதக் கட்டளை சித்தாந்த நூல் படித்தற்குத் துணைசெய்வது' என வாய் கூசாது கூறினர். என்செய்வது! அவரறிந்தபடி அது. கட்டளைகளின் வேறுபாடேனும் உணருமாறு மேலே அட்டவணை தரப்பட்டுளது.

இனி, இத்தொகுப்பின் முடிவில் உள்ளது இருபா இருபது பழையவுரை. நூலை அருளிச்செய்தவர்கள் ஸ்ரீ அருணந்திதேவநாயனார். உரையாசிரியர் ஸ்ரீ நமச்சிவாயத்தம்பிரான். இந்த உரையின் கண் உரையாசிரியர் எடுத்துக்காட்டும் நூல்களாவன:— ஞானபூசாகரணம், போற்றிப்பஃறொடை, திருவாசகம், சிவப்பிரகாசம், சிவஞானபோதம், சிவஞானசித்தியார், திருக்கடைக்காப்பு, உண்மைநெறிவிளக்கம், திருவிடைமருதூர் மும்மணிக்கோவை, தேவாரம், திருவருட்பயன், திருவள்ளுவப்பயன், திருவெம்பாவை, திருக்காளத்தியந்தாதி, சங்கற்ப நிராகரணம், உண்மைவிளக்கம், தத்துவவிளக்கம் முதலியனவாம். சித்தாந்தசைவ நூலுக்கு உரைவரைய வந்த இவ்வாசிரியர் மெய்கண்ட நூல்களையும், திருமுறைகளையுமே எடுத்துப் போற்றுதல் சிந்திக்கத்தக்கது என்க.

இனி, இந்த நூல்களைப் பரிசோதித்து அச்சிடுதற்குத் துணையாகவுள்ள பிரதிகள் வருமாறு:—

1. காணியம்பாக்கம்-முருகேச முதலியாரால் கி-பி. 1892-ல் சென்னை இந்து தியலாஜிகல் யந்திரசாலையில் பதிப்பிக்கப்பெற்ற அச்சுப்புத்தகம்.

2. திருவாவடுதுறையாதீனத்து 17-வது ஸ்ரீ அம்பலவாணதேசிகசுவாமிகள் கட்டளையிட்டருளியபடி காஞ்சி-நாகலிங்க முதலியாரால் கி-பி. 1897-ல் அச்சிடப்பட்ட மெய்கண்டசாத்திரம் முழுவதும் உரையுடன் உள்ள அச்சுப்புத்தகம்.

3. திருவாவடுதுறையாதீனத்து அடியார்கூட்டத்துள் ஒருவரும் ஷை ஆதீனத்துக் காறுபாறும் ஆகிய ஸ்ரீ சுந்தரலிங்கத்தம்பிரான் சுவாமிகள் (கி-பி. 1892) எழுதிவைத்துள்ள ஆதீனம் சரசுவதிமால் புத்தகசாலைக் காகிதப்பிரதி.

4. *திருவாவடுதுறை ஆதீன வித்துவானும், என் ஆசிரியர் ஸ்ரீ பொன்னோதுவாமூர்த்தியின் ஆசிரியரும், மதுரைத் தமிழ்ச் சங்கத்துச் சைவநூற் பரிசோதகரும் ஆகிய ஸ்ரீ சே. ரா. சுப்பிர மணியக் கவிராயரவர்களால் பரிசோதித்து அச்சிடப்பெற்ற ஞானு மிர்தக்கட்டளை (தமிழ்ச்சங்கத்து 2-ம் பதிப்பு 1923)*

5. *கொரடாச்சேரி சித்தாந்தநிலயம் அதிபர் பஞ்சாக்கரபுரம் ஸ்ரீ-ல-ஸ்ரீ வாலையானந்த சுவாமிகளால் பரிசோதித்து சோல்டன் கம்பெனியில் (கி-பி. 1918) அச்சிடப்பட்ட துகளறுபோதக் கட்டளைப் புத்தகம்.*

*இத் தொகுப்பு நூல்களை ஆராய்ந்து அச்சிடுங்காலத்து உட னிருந்து ஒப்புநோக்குதல், ப்ரூவ் பார்த்துத் திருத்துதல் முதலிய உதவிகளைச் செய்தவர் என் சகோதரரும், சித்தாந்த நூற்பயிற்சி யுடையவரும், தமிழறிஞரும் ஆகிய சிரஞ்சீவி T. S. இராசகோபால பிள்ளையவர்கள்.*

சிவராஜதானியாகச் சிறந்து விளங்கும் இத்திருவாவடு துறை ஆதீனத்திலே இப்பொழுது இருபத்தொன்றுவது குரு மகாசந்நிதானமாக வீற்றிருந்தருளி, உலகமுவப்ப சிவக்ஷேத் திர-குருக்ஷேத்திர பரிபாலனங்களும், செந்தமிழ்ப்பரிபாலனம்-சித்தாந்த சைவசமய பரிபாலனங்களும் தக்க முறையிற் செய்து மட்டில்லாப் புகழும் சிவபுண்ணியமும் தமக்குரியனவாகப் பெற்று, சிவஞானச்செங்கோல் செலுத்தி, மெய்கண்டசாத் திரப்பிரதிஷ்டை செய்தருளும் **ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணிய தேசிக சுவாமிகள்** கட்டளையிட்டருளியபடி என் சிற்றறிவு சென்றவளவில் இவைகளைப் பரிசோதித்து அச்சிட்டுள்ளேன். குற்றமுளதாயின் அறிஞருலகம் பொறுத்தருளுக.

ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நிதானம் திருவடிகள் வாழ்க.

*இங்ஙனம்,*

*சித்தாந்தசைவமணி—*

**த. ச மீனுட்சிசுந்தரம் பிள்ளை,**

*ஆதீனவித்துவான்.*

*திருவாவடுதுறை*

3—10—54.

சிவமயம்

# குருமரபு வாழ்த்து.

திருச்சிற்றம்பலம்

" கயிலாய பரம்பரையிற் சிவஞான போதநெறி
காட்டும் வெண்ணெ
பயில்வாய்மை மெய்கண்டான் சந்ததிக்கோர்
மெய்ஞ்ஞான பாநுவாகிக்
குயிலாரும் பொழிற்றிருவா வடுதுறைவாழ் குருநமச்சி
வாய தேவன்
சயிலாதி மரபுடையோன் றிருமரபு நீடூழி
தழைக மாதோ "

திருச்சிற்றம்பலம்

ஸ்ரீ மாதவச் சிவஞானயோகிகள்.

உ
சிவமயம்.
திருச்சிற்றம்பலம்.

# மெய்கண்ட சாத்திரம்

## 6. உண்மை விளக்கம்.

மூலமும் — பழையவுரையும்.

சு. அ. இராமசாமிப்புலவர்,
கருப்பக்கிளர். (அஞ்சல்)
கோட்டூர் வழி, தஞ்சை மாவட்டம்.

திருவதிகை—
மனவாசகங்கடந்த நாயனார்.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

## திருவதிகை - மனவாசகங்கடந்த நாயனார்

அருளிச்செய்த

# 6. உண்மை விளக்கம்

## மூலமும்—பழையவுரையும்.

### காப்பு

**வண்மைதரும் ஆகமநூல் வைத்த பொருள்வழுவா**
**உண்மை விளக்கம் உரைசெய்யத் - திண்மதம்சேர்**
**அந்திநிறத் தந்திமுகத் தொந்திவயிற் றைங்கரனைப்**
**பந்தமறப் புந்தியுள்வைப் பாம்.**

*(இதன் பொருள்) வண்மை தரும் ஆகம நூல்—வளப்பத்தைத் தராநின்ற ஆகம நூலிலே,— வைத்த பொருள் வழுவா உண்மை விளக்கம் உரை செய்ய—பரமேசுவரன் அருளிச் செய்து வைத்த பதியின் உண்மையும் பசுவின் உண்மையும் பாசத்தின் உண்மையும் வழுவாமல் இந்த நூலிலே விளங்கச் செய்வது பொருட்டாகவும்,— பந்தம் அற—பாச பந்தங்களெல்லாம் நீங்கும் பொருட்டாகவும்,— திண் மதம் சேர்—திண்ணிய மூன்றுமதமும் பொருந்தப்பட்ட,— அந்திநிறம்—செக்கர் வானம் போன்ற சிவந்த திருமேனியையும்,— தந்தி முகம்—யானை முகத்தினையும்,—தொந்தி வயிற்று—பண்டியுண்டான திருவுந்தியினையும்,—ஐங்கரனை—ஐந்து ஸ்ரீ அத்தத்தினையுமுடைய விக்கினேசுவரப் பிள்ளையாரை,— புந்தியுள் வைப்பாம்—அடியேனுடைய மனதிலே வைத்துத் தியானம் பண்ணுகின்றேம் என்க.*

## நூல்

பொய்காட்டிப் பொய்யகற்றிப் போதானந் தப்பொருளாம்
மெய்காட்டும் மெய்கண்டாய்! விண்ணப்பம் - பொய்காட்டா
மெய்யா! திருவெண்ணெய் வித்தகா! சுத்தவினா
ஐயா!நீ தான்கேட் டருள்.

*(இ-ள்) பொய் காட்டி—தேகாதிப் பிரபஞ்சத்தைப் பொய் எனக் காட்டி,— பொய் அகற்றி—பொய்யை நீக்கி,— போதானந்த பொருள் ஆம் மெய் காட்டும் மெய் கண்டாய்—அறிவிலே ஆநந்த சொரூபமாய் இருக்கிற உண்மையைக் காட்டுகிற மெய் கண்ட நாதனே,— பொய் காட்டா மெய்யா-பொய்யைக் காட்டாத மெய்ச் சத்தியத்தை யுடையவனே,— திரு வெண்ணெய் வித்தகா—திரு வெண்ணெய் நல்லூரிலே எழுந்தருளியிருக்கப்பட்ட ஞானாசாரியனே,— ஐயா—ஐயனே,— சுத்த வினா விண்ணப்பம் நீ தான் கேட்டருள்—சுத்தமாகிய வினா விண்ணப்பத்தினைத் தேவரீர் திருச்செவி சாதியருள வேண்டும் என்க.* (1)

ஆறாறு தத்துவமே தாணவமே தன்றேதான்
மாறா வினையேது மற்றிவற்றின் - வேறாகா
நானேது நீயேது நாதன்நடம் அஞ்செழுத்துத்
தானேது தேசிகனே! சாற்று.

*(இ-ள்) ஆறாறு தத்துவம் ஏது—முப்பத்தாறு தத்துவங்களாவது ஏது,— ஆணவம் ஏது-ஆணவமலமாவது ஏது,— அன்றே தான் மாறா வினை ஏது—அநாதியிலே விட்டு நீங்காமல் இருக்கிற வினையாவது ஏது,— மற்று இவற்றின் வேறு ஆகா நான் ஏது—இந்த மலங்களுக்கு வேறாகாமல் ஒன்று பட்டிருக்கிற என்னுடைய சொரூபமாவது ஏது,— நீ ஏது—தேவரீருடைய சொரூபமாவது ஏது,— நாதன் நடம் (ஏது)—பரமேசுவரனுடைய திருநடம் யாது,— அஞ்செழுத்து தான் ஏது—பஞ்சாக்கரத்தின் உண்மையாவது ஏது,— தேசிகனே சாற்று-சுவாமீ! திருவுளம்பற்றியருள வேண்டும் என்க.* (2)

உள்ளபடி இத்தை உரைக்கக்கேள் உன்றனக்கு
வள்ளல்அரு ளால்அன்று வாய்மலர்ந்து - தெள்ளியசீர்
ஆகமங்கள் சொன்ன அடைவிலே ஆனந்த
யோகம் நிகழ்புதல்வா! உற்று.

*(இ—ள்) உள்ளபடி இத்தை உரைக்க கேள் உன் தனக்கு-உண்டானபடியே நீ கேட்ட வினவைச்சொல்லுகிறேம் கேள்,— வள்ளல் அருளால் அன்று வாய் மலர்ந்து—பரமேசுரன் தனது காருண்ணியத்தினலே அநாதியிலே திருவாய்மலர்ந்து,—தெள்ளிய சீர் ஆகமங்கள் சொன்ன அடைவிலே—தெளிவாய் இருக்கிற ஆகமஙகள் சொன்ன முறைமையிலே,—ஆனந்த யோகம் நிகழ் புதல்வா உற்று—ஆனந்த யோகத்திலே அடங்கி நிற்கிற பிள்ளாய்! உற்றுப் பொருந்தி என்க.* (3)

## ஆன்மதத்துவம்

நாற்கோணம் பூமிபுனல் நண்ணுமதி யின்பாதி
ஏற்கும்அனல் முக்கோணம் எப்போதும் - ஆர்க்கும்
அறுகோணம் கால்வட்டம் ஆகாயம் ஆன்மா
உறுகாய மாம்இவற்றல் உற்று.

*(இ—ள்) நாற்கோணம் பூமி—பிருதிவி நாலுகோணமாய் இருக்கும்,—புனல் நண்ணும் மதியின் பாதி- அப்புவானது அர்த்த சந்திரனைப் போன்றதாய் இருக்கும்,—எற்கும் அனல் முக்கோணம்—பொருந்தப்பட்ட தேயுவானது மூன்று கோணமாய் இருக்கும்,—எப்போதும் ஆர்க்கும் அறுகோணம் கால்—பொருந்தப்பட்ட வாயுவானது எந்தக்காலமும் அறுகோணமாய் இருக்கும்,—வட்டம் ஆகாயம்—ஆகாயமானது வட்டமாய் இருக்கும்,—ஆன்மா உறு காயம் ஆம் இவற்றல் உற்று—ஆன்மாவுக்குப் பஞ்சபூதம் பரிணமமாய் இருக்கிற தேகமாய் வந்து பொருந்தும் என்க.* (4)

பொன்பார் புனல்வெண்மை பொங்கும் அனல்சிவப்பு
வன்கால் கருமைவளர் வான்தூமம் - என்பார்
எழுத்து லவரயஅப் பாராதிக் கென்றும்
அழுத்தமதாய் நிற்கும் அது.

(இ—ள்) பொன் பார்—பிருதிவியானது பொன்னிறமாய் இருக்கும்,— புனல் வெண்மை—அப்புவானது வெள்ளை நிறமாய் இருக்கும்.—பொங்கும் அனல் சிவப்பு—மிகுந்து வாராநின்ற தேயு வானது சிவந்த நிறமாய் இருக்கும்,—வன் கால் கருமை —வலி மையைத் தாராநின்ற வாயுவானது கருமை நிறமாய் இருக்கும்,—வளர் வான் தூமம்—மிகுந்த ஆகாசமானது புகைநிறமாய் இருக்கும்,— என்பார்—என்று இப்படிப் பெரியோர்கள் சொல்லுவார்கள்,— எழுத்து லவரய அ பார் ஆதிக்கு என்றும்-பிருதிவிக்கு லகாரமும் அப்புவுக்கு வகாரமும் தேயுவுக்கு ரகாரமும் வாயுவுக்கு யகாரமும் ஆகாயத்துக்கு அகாரமும் எப்போதும்,—அழுத்தம் அது ஆய் நிற்கும அது—இப்படிப்பலமாய்ப் பொருந்தி நிற்கும் என்க. (5)

குறிகுலிசம் கோகனதம் கொள்சுவத்தி குன்ரு
அறுபுள்ளி ஆரமுத விந்துப் - பிறிவின்றி
மண்புனலதீக் கால்வானம் மன்னும் அடைவேயென்
ருெண்புதல்வா! ஆகமம்ஓ தும்.

(இ—ள்) குறி குலிசம் கோகனதம் கொள் சுவத்தி குன்று அறுபுள்ளி ஆர் அமுத விந்து பிறிவு இன்றி மண் புனல் தீ கால் வானம்—பிருதிவிக்கு வச்சிரமும் அப்புவுக்குத் தாமரைப்பூவும் தேயு வுக்குச் சுவத்திகமும் வாயுவுக்கு அறுபுள்ளியும் ஆகாயத்துக்கு அமுதவிந்துவும் விட்டு நீங்காமல்,—மன்னும் அடைவே என்று ஒண் புதல்வா ஆகமம் ஓதும்—இந்த அடையாளங்களிலே நிலைபெற்றிடும் என்று ஒள்ளிய பிள்ளாய்! ஆகமங்களிலே சொல்லும் என்க. (6)

பாராதி ஐந்துக்கும் பன்னும்அதி தெய்வங்கள்
ஆரார் அயனுதி ஐவராம் - ஓரோர்
தொழிலவர்க்குச் சொல்லுங்கால் தோற்றமுதல் ஐந்தும்
பழுதறவே பண்ணுவர்காண் பார்.

(இ—ள்) பார் ஆதி ஐந்துக்கும் பன்னும் அதிதெய்வங்கள் ஆர் ஆர்—பிருதிவி அப்பு தேயு வாயு ஆகாசம் என்னும் ஐந்துக்கும் சொல் லப்பட்ட அதிதேவதைகள் ஆர் ஆர் என்று கேட்கிறாய் ஆனால்,—

*அயன் ஆதி ஐவர் ஆம்–பிருதிவிக்குப் பிரமாவும் அப்புவுக்கு விஷ்ணுவும் தேயுவுக்கு உருத்திரனும் வாயுவுக்கு மகேசுவரரும் ஆகாயத்துக்குச்சதாசிவரும் என ஐந்து பேராம்,–ஓர் ஓர் தொழில் அவர்க்கு சொல்லுங்கால்-ஒவ்வொருத்தர் கிருத்தியங்களைச் சொல்லுமிடத்து,–தோற்றம் முதல் ஐந்தும் பழுது அறவே பண்ணுவர் காண் பார–(அவர்) சிருஷ்டி திதி சங்காரம் திரோபவம் அநுக்கிரகம் ஐந்தும் குற்றமறச் செய்வார்கள் என்று விசாரித்து அறிவாயாக என்க.* (7)

**படைப்பன் அயன்அளிப்பன் பங்கயக்கண் மாயன்**
**துடைப்பன் உருத்திரனும் சொல்லில் - திடப்பெறவே**
**என்றும் திரோபவிப்பர் ஈசர் சதாசிவரும்**
**அன்றே அனுக்கிரக ராம்.**

(இ—ள்) *படைப்பன் அயன்–பிரமா சிருஷ்டிப்பன்,–அளிப்பன் பங்கய கண் மாயன்–செந்தாமரைபோலும் கண்ணையுடைய மகாவிஷ்ணு இரக்ஷிப்பன்,–துடைப்பன் உருத்திரனும் சொல்லில்–சொல்லுமிடத்து உருத்திர மூர்த்தியானவர் சங்கரிப்பர்,–திடப்பெறவே–நிச்சயமாகவே,–என்றும் திரோபவிப்பர் ஈசர்–மகேசுவர மூர்த்தியானவர் எந்தக்காலமும் திரோபவம் பண்ணுவர்,–சதாசிவரும் அன்றே அனுக்கிரகர் ஆம்–சதாசிவ மூர்த்தியானவர் அநாதி தொடங்கி அநுக்கிரகம் பண்ணுவார் என்க.* (8)

**மண்கடின மாய்த்தரிக்கும் வாரிகுளிர்ந் தேபதமாம்**
**ஒண்கனல்சுட் டொன்றுவிக்கும் ஓவாமல் - வண்கால்**
**பரந்துசலித் துத்திரட்டும் பார்க்கில்ஆ காயம்**
**நிரந்தரமாய் நிற்கும் நிறைந்து.**

(இ—ள்) *மண் கடினமாய் தரிக்கும்–பிருதிவியானது விடயங்களிலே கடின குணத்தைக் கொடுத்துக் கொண்டு நிற்கும்,—வாரி குளிர்ந்தே பதம் ஆம்–அப்புவானது விடயங்களிலே நெகிழ்ந்த குணத்தைக் கொடுத்துக்கொண்டு நிற்கும்,–ஒண் கனல் சுட்டு ஒன்றுவிக்கும்–தேயுவானது விடயங்களிலே சுட்டு ஒன்றுதலைப் பண்ணிக் கொண்டு நிற்கும்,—ஓவாமல்–விட்டு நீங்காமல்,—வண் கால் பரந்து*

சலித்து திரட்டும்—வளப்பத்தையுடைய வாயுவானது விடயங்களிலே திரட்டிக் கூட்டா நிற்கும்,—பார்க்கில் ஆகாயம் நிரந்தரம் ஆய் நிற்கும் நிறைந்து—விசாரிக்குமிடத்து ஆகாயம் விடயங்களுக்கெல்லாம் நிரந்தரமாய் இடங்கொடுத்துக்கொண்டு நிற்கும் என்க. (9)

உள்ளபடி மாபூதம் ஓதினோம் உன்றனக்குக்
களளமிகும் ஐம்புலனும் கட்டுரைக்கில் - மெள்ளவே
ஓசை பரிசம் உருவம் சுவைநாற்றம்
ஆசைதரும் ஐம்புலனே யாம்.

(இ—ள்) உள்ளபடி மா பூதம் ஓதினோம் உன்தனக்கு—உண்டானபடியே மகத்தாகிய பஞ்சபூதங்களும் சொன்னோம்,—களளம் மிகும் ஐம்புலனும் கட்டுரைக்கில்—கள்ளம் மிகுந்து வாப்படாநின்ற சத்தாதி விடயங்களைச்சொல்லுமிடத்து,—மெள்ளவே—மையமே,—ஓசை பரிசம் உருவம் சுவை நாற்றம் ஆசை தரும் ஐம்புலனே ஆம்—ஆசையைக்கொடா நின்ற சத்த பரிச ரூப ரச கந்தம் என்று ஐந்துமாம் என அறிவாயாக என்க. (10)

ஞானேந் திரியங்கள் நன்று உரைக்கக்கேள்
ஊன மிகுபூதம் உற்றிடமா – ஈனமாம்
சத்தாதி யைஅறியும் தானம் செவிதோல்கண்
அத்தாலு மூக்கென் றறி.

(இ—ள்) ஞானேந்திரியங்கள் நன்று உரைக்க கேள்—ஞானேந்திரியங்களை நன்றாய்ச் சொல்லுகிறோம் கேள்,—ஊனம் மிகு பூதம் உற்று இடமா—ஊனம் மிகுத்து வாப்படாநின்ற பஞ்சபூதங்களிடமாக, ஈனம் ஆம் சத்தாதியை அறியும் தானம் செவி தோல் கண் அ தாலு மூக்கு என்று அறி—ஈனத்துவமாயிருக்கிற சத்தாதி விடயங்களை அறிகிற இடம் ஏதென்று கேட்கிறாயாகில் சோத்திரம் துவக்கு சட்சு அந்த சிங்குவை ஆக்கிராணம் என்று அறிவாயாக என்க. (11)

வானிடமா நின்றுசெவி மன்னும் ஒலியதனை
ஈனமிகும் தோல்கால் இடமாக - ஊனப்
பரிசம் தனைஅறியும் பார்வையிற்கண் அங்கி
விரவிஉரு வங்காணு மே.

(இ—ள்) *வான் இடம் ஆ நின்று செவி மன்னும் ஒலி அதனை (அறியும்)–ஆகாயத்தினிடமாக நின்று சுரோத்திரம் பொருந்திய சத்தத்தை அறியும்,—ஈனம் மிகும் தோல் கால் இடம் ஆக ஊன பரிசம்தனை அறியும்–வாயுவினிடமாக நின்று ஈனத்துவமாயிருக்கிற துவக்கு பரிசத்தை அறியும்,—பார்வையில் கண் அங்கி விரவி உருவம் காணும் ஏ–தேயுவினிடமாக நின்று சட்சு உருவத்தை அறியும் என்க.* (12)

நன்றாக நீரிடமா நாஇரதம் தான்அறியும்
பொன்றா மணம்மூக்குப் பூவிடமா - நின்றறியும்
என்றோதும் அன்றே இறைஆ கமம்இதனை
வென்றார்சென் றார்இன்ப வீடு.

(இ—ள்) *நன்றாக நீர் இடம் ஆ நா இரதம் தான் அறியும்–நல்ல அப்புவின் இடமாக நின்று சிங்நுவை இரசத்தை அறியும்,—பொன்றா மணம் மூக்கு பூ இடமா நின்று அறியும்–பிருதிவியின் இடமாக நின்று கெடாத ஆக்கிராணம் கந்தத்தை அறியும்,—என்று ஓதும் அன்றே இறை ஆகமம்–பரமேசுவரன் திருவுளம் பற்றி நின்ற வேதாகமங்களிலே அநாதியிலே என்று இப்படிச் சொல்லும்,—இதனை வென்றார் சென்றார் இன்ப வீடு–இந்தப்பஞ்சேந்திரியங்களை நிக்கிரகம் பண்ணின பெயர்களே ஆனந்த வீட்டினை அடைந்தவர்கள் என்க.* (13)

கண்ணுதல்நூல் ஓதியிடும் கன்மேந் திரியங்கள்
எண்ணும்வச ஞாதிக் கிடமாக - நண்ணியிடும்
வாக்குப்பா தம்பாணி மன்னு குதம்உபத்த
மாக்கருதும் நாளு மது.

(இ—ள்) வாக்குக்கு வசனமும், பாதத்துக்குக் கமனமும், பாணிக்குத் தானமும், பாயுருவுக்கு விசர்க்கமும், உபத்தத்துக்கு ஆனந்தமும் நாள்தோறும் இந்த முறைமையிலே பொருந்தியிடும் என்று நெற்றிக்கண்ணையுடைய பரமேசுவரன் அருளிய வேதாகமங்களிலே சொல்லும் என்க. (14)

வாக்காகா யம்மிடமா வந்துவச னிக்குங்கால்
போக்காரும் காற்றிடமாப் புல்கியனல்—ஏற்கும்
இடுங்கை குதம்நீ ரிடமா மலாதி
விடும்பா ரிடம்உபத்தம் விந்து.

(இ—ள்) வாக்கு ஆகாயம் இடம் ஆ வந்து வசனிக்கும்—ஆகாயம் இடமாய் நின்று வாக்கு வசனத்தைச் சொல்லும்,— கால் போக்கு ஆரும் காற்று இடம் ஆ—வாயுவின் இடமாக நின்று பாதம் கமனம் பண்ணும்,—புல்கி அனல் ஏற்கும் இடும் கை—தேயுவின் இடமாக நின்று பாணி இடுதலும் ஏற்றலும் செய்யும்,—குதம் நீர் இடம் ஆ மல ஆதி விடும்—அப்புவினிடமாக நின்று பாயுரு மலசலத்தைப் பிரிவிக்கும்,— பார் இடம் உபத்தம் விந்து— பிருதிவியினிடமாக நின்று உபத்தம் ஆனந்தத்தை விடும் என்க. (15)

அந்தக் கரணம் அடைவே உரைக்கக்கேள்
அந்தமனம் புத்தியுடன் ஆங்காரம் – சிந்தையிவை
பற்றியது நிச்சயித்துப் பல்கால் எழுந்திருந்தங்
குற்றதுசிந் திக்கும் உணர்.

(இ—ள்) அந்தக்கரணம் அடைவே உரைக்க கேள்—அந்தக்கரணங்களுடைய அடைவைச் சொல்லுகிறோம் கேள்,—அந்த மனம் புத்தியுடன் ஆங்காரம் சிந்தை இவை பற்றியது நிச்சயித்துப் பல்கால் எழுந்திருந்து அங்கு உற்றது சிந்திக்கும்—மனம் பற்றும் புத்தி நிச்சயிக்கும் ஆங்காரம் எழுந்திருக்கும் சித்தம் சிந்திக்கும்,—உணர் —அறிவாயாக என்க. (16)

ஓதியிடும் நாலாறும் உற்றுன்ம தத்துவமென்
ருதி அருள்நூல் அறையுங்காண் – தீதறவே
வித்தியா தத்துவங்கள் தம்மை விளம்பக்கேள்
உத்தமனே நன்று உனக்கு.

(இ–ள்) *ஓதியிடும் நாலாறும் உற்று ஆன்மதத்துவம் என்று ஆதி அருள் நூல் அறையும் காண்–சொல்லப்பட்ட இருபத்துநாலும் பொருந்தப்பட்ட ஆன்மதத்துவம் என்று பரமேசுவரனுடைய வேதாகமங்களிலே சொல்லும்,— தீது அறவே–குற்றமறவே,— வித்தியா தத்துவங்கள் தன்னை விளம்ப கேள் உத்தமனே நன்று உனக்கு– உத்தமனாகிய பிள்ளாய்! வித்தியா தத்துவங்கள் எழையும் சொல்லுகிறோம் கேள் என்க.* (17)

## வித்தியா தத்துவம்

காலம் நியதி கருதும் கலைவித்தை
ஏலஅரா கம்புருட னேமாயை - மால்அறவே
சொன்னோம் அடைவாகச் சொன்னஇவை தன்னுண்மை
உன்னி உரைக்கநாம் உற்று.

(இ–ள்) *காலம் நியதி கருதும் கலை வித்தை ஏல அராகம் புருடனே மாயை மால் அறவே–காலம் நியதி கலை வித்தை அராகம் புருடன் மாயை மயக்கம் அறவே,–சொன்னோம் அடைவாக–இந்த முறைமையிலே சொன்னோம்,— சொன்ன இவை தன்உண்மை உன்னி உரைக்க நாம் உற்று–இதனுடைய சுபாவத்தைச் சொல்லுகிறோம் உற்றுப் பொருந்திக்கேள் என்க.* (18)

எல்லை பலம்புதுமை எப்போதும் நிச்சயித்தல்
அல்லல் தருங்கிரியை ஆன்மாவுக்–கொல்லை
அறிவாசை ஐம்புலனும் ஆரவருங் காலம்
குறியா மயக்கென்று கொள்.

(இ–ள்) *எல்லை பலம் புதுமை–காலதத்துவமானது கழிகாலத்து எல்லையும் நிகழ்காலத்துப் பலத்தையும் எதிர்காலத்துப் புது*

மையும் பொருத்துவிக்கும்,—எ போதும் நிச்சயித்தல்—நியதிதத்துவ மானது எந்தக்காலமும் கன்மத்தை இவ்வளவு என்று நிச்சயம் பண்ணி நிறுத்தும்,—அல்லல் தரும் கிரியை—கலையானது ஆணவத்தைச் சிறிது நீக்கி ஆன்மாவுக்குக் கிரியையை எழுப்பும்,— ஆன்மாவுக்கு ஒல்லை அறிவு—வித்தியாதத்துவமானது ஆன்மாவுக்குச் சீக்கிரத்திலே அறிவை எழுப்பும்,—ஆசை—அராக தத்துவமானதுபெற்ற பதார்த்தங்களைச் சிறிதாக்கிப் பெருததிலே இச்சை உண்டாக்கும்,—ஐம்புலனும் ஆர வரும் காலம்—ஆன்மா பஞ்சேந்திரியங்களிடமாகச் சத்தாதிவிடயங்களைப் புசிக்க வருகிற அவதாரத்தில் புருட தத்துவ மானது விடயத்திலே அழுத்துவிக்கும்,—குறியா மயக்கு என்று கொள்—மாயையானது ஒன்றை நினைக்க வொட்டாமல் மயக்கத்தைச்செய்யும் என்று அறிவாயாக என்க. (19)

## சுத்ததத்துவம்.

**வித்தியா தத்துவங்கள் ஏழும் விளம்பினோம்**
**சுத்தமாம் தத்துவங்கள் சொல்லக்கேள்—நித்தமாம்**
**சுத்தவித்தை ஈசுரம்பின் சொல்லும் சதாசிவம்நற்**
**சத்திசிவங் காண்அவைகள் தாம்.**

(இ—ள்) வித்தியாதத்துவங்கள் ஏழும் விளம்பினோம்—வித்தியா தத்துவங்கள் ஏழும் சொன்னோம்,—சுத்தம் ஆம் தத்துவங்கள் சொல்ல கேள்—சுத்தமாய் இருக்கிற சிவதத்துவங்கள் ஐந்தையும் சொல்லுகிறோம் கேள்,—நித்தம் ஆம் சுத்தவித்தை ஈசுரம் பின் சொல்லும் சதாசிவம் நல் சத்தி சிவம் காண் அவைகள் தாம்—நித்தியமாய் இருக்கிற சுத்தவித்தை ஈசுரம் சாதாக்கியம் சத்தி சிவம் என்று அறிவாயாக என்க. (20)

**சுத்தவித்தை ஞானமிகும் தொன்மையாம் ஈசுரந்தான்**
**அத்தன் தொழில்அதிகம் ஆக்கியிடும்—ஒத்தல்இவை**
**சாதாக் கியம்என்றும் சத்தி சிவம்கிரியை**
**ஆதார ஞானஉரு வாம்.**

*(இ–ள்) சுத்தவித்தை ஞானம் மிகும்–சுத்தவித்தை ஞானம் ஏறிக் கிரியை குறைந்திருக்கும்,— தொன்மை ஆம் ஈசுரம் தான் அத்தன் தொழில் அதிகம் ஆக்கியிடும்–பழமையாக வரப்படாநின்ற ஈசுரதத்துவமானது ஞானம் குறைந்து கிரியை ஏறியிருக்கும்,— ஒத்த இவை சாதாக்கியம் என்றும்–சாதாக்கிய தத்துவம் ஞானமும் கிரியையும் ஒத்திருக்கும்,— சத்தி சிவம் கிரியை ஆதார ஞான உரு ஆம்–சத்திதத்துவம் கிரியையாய் இருக்கும் சிவதத்துவம் ஞானமாயிருக்கும் என்க.* (21)

## ஆணவம், கன்மம்.

**ஆருறு தத்துவமும் சொன்னோம் அடைவாக**
**மாரு மலமிரண்டும் வாசொல்லக்—கூறில்**
**அறியாமை ஆணவம்நீ யானசுக துக்கம்**
**குறியா வினையென்று கொள்.**

*(இ–ள்) ஆருறு தத்துவமும் சொன்னோம் அடைவாக–முப்பத்தாறு தத்துவங்களினுடைய முறைமையும் சொன்னோம்,— மாரு மலம் இரண்டும் வா சொல்ல–விட்டு நீங்காமல் இருக்கிற ஆணவ மலத்தையும் கன்மமலத்தையும் சொல்லுகிறோம் கேள்,—கூறில்–சொல்லுமிடத்து,— அறியாமை ஆணவம்–அறியாமையைப் பண்ணிக்கொண்டு நிற்கிறது ஆணவ மலம்,— நீ ஆன சுக துக்கம் குறியா வினை என்று கொள்– சுகதுக்கம் ஒன்றையும் நினையாமல் நீ தானாய் இருக்கிறது தானே கன்ம மலம் என்று அறிவாயாக என்க.* (22)

## ஆன்மரூபம்.

**ஆருறு தத்துவமும் ஆணவமும் வல்வினையும்**
**மாரு அருளால் வகுத்துரைத்தீர்—வேருகா**
**என்னை எனக்கறியக் காட்டீர் இவைகண்டேன்**
**உன்னரிய தேசிகரே! உற்று.**

(இ-ள்) ஆறாறு தத்துவமும் – முப்பத்தாறு தத்துவமும்,— ஆணவமும்—ஆணவமலத்தையும்,— வல் வினையும்—கன்ம மலத்தை யும்,— மாறா அருளால் வகுத்து உரைத்தீர்–விட்டு நீங்காத கிருபை யினாலே பகுத்து அருளிச்செய்தீர்,— வேறு ஆகா என்னை எனக்கு அறிய காட்டீர்–இந்த மலங்களுக்கு வேறாகாமல் ஒன்றுபட்டிருக்கிற என்னுடைய சொரூபத்தையும் அருளிச்செய்ய வேணும்,— இவை கண்டேன்—இந்த மூன்று மலங்களையும் தரிசித்தேன்,— உன்ன அரிய தேசிகனே உற்று–நினைத்தற்கரிதாகிய தேசிகனே உற்றுப் பொருந்தத் தக்கதாக என்க. (23)

நன்று உரைக்கக்கேள் நல்லசித்தின் முன்னசித்திங்
கொன்றாது சித்தசித்தை ஓராது—நின்றிவற்றை
அன்றே பகுத்தறிவ தான்மாவே என்றுமறை
குன்றாமல் ஓதுங் குறித்து.

(இ-ள்) நன்று உரைக்க கேள்—நீ கேட்ட ஆன்மதரிசனத்தை நன்றாகச் சொல்லுகிறோம் கேள்,—நல்ல சித்தின் முன் அசித்து இங்கு ஒன்றாது—நல்ல சித்தாகிய சிவத்தின் முன்னே அசித்தாகிய பாசம் நில்லாது,— சித்து அசித்தை ஓராது—நல்ல சித்தாகிய சிவத்துக்கு அசித்து ஆகிய பாசத்தை அறிய வேண்டுவதில்லை,— நின்று இவற் றை அன்றே பகுத்தறிவது ஆன்மாவே—சித்தாகிய சிவத்தையும் அசித்தாகிய பாசத்தையும் அநாதியிலே பொருந்தி விசாரித்து அறி கிறது ஆன்மாவே,— என்று மறை குன்றாமல் ஓதும் குறித்து—பரமே சுவரனுடைய வேதாகமங்களிலே குறையாமற் சொல்லும் என்க. (24)

தத்துவங்கள் ஆறாறும் தம்மைத்தாம் என்றறியா
எத்தன்மை என்னில் இயம்பக்கேள்—சுத்தமாம்
ஆறு சுவையும் அறியாது தன்னைத்தான்
கூறில் அவைஇவைபோற் கொள்.

(இ-ள்) தத்துவங்கள் ஆறு ஆறும் தம்மை தாம் என்று அறியா— முப்பத்தாறு தத்துவங்களும் சடம் ஆகையினாலே தம்

*மூடைய சொரூபத்தைத் தாம் அறியச் செய்யா,— எ தன்மை என்னில் இயம்ப கேள்–எந்த முறைமையென்று கேட்கிறாய் ஆனால் சொல்லுகிறோம் கேள்,— சுத்தம் ஆம் ஆறு சுவையும் அறியாது தன்னை தான்–சுத்தமாயிருக்கிற அறுவகைச்சுவையும் தன்னுடைய சொரூபத்தைத் தான் அறியச் செய்யாது,— கூறில் – சொல்லு மிடத்து,— அவை இவை போல் கொள்–முப்பத்தாறு தத்துவங் களும சுவைகளைப்போலத் தம்முடைய சொரூபத்தைத்தாம் அறியச் செய்யா என்க.* (25)

**ஆறு சுவையும் அருந்தி அவைதம்மை**
**வேறொருவன் கூறியிடும் மேன்மைபோல்—ஆறாறும்**
**ஒன்றொன்று நாடிஉணர்ந் தோதில்அதில் உற்றறிவாய்**
**நின்றபொருள் தானேகாண் நீ.**

*(இ–ள்) ஆறு சுவையும் அருந்தி அவை தம்மை வேறு ஒருவன் கூறியிடும் மேன்மை போல்–அறுவகைச் சுவையும் புசித்துக் கைக் கிறது கார்க்கிறது கூர்க்கிறது துவர்க்கிறது புளிக்கிறது இனிக் கிறது எனக் கண்டுணர்ந்து ஒருவன் சொல்லுகிற முறைமைபோல,– ஆறு ஆறும் ஒன்று ஒன்று நாடி உணர்ந்து–முப்பத்தாறு தத்துவங் களையும் ஒன்றொன்றாக விசாரித்தறிந்து,— ஓதில்–சொல்லுமிடத்து, அதில் உற்று அறிவாய் நின்ற பொருள் தானே காண் நீ–அம்முப் பத்தாறு தத்துவங்களையும் பொருந்தி அறிந்து வருகிற அறிவுகாண் நீயாகிய ஆன்மா என்க.* (26)

## சிவரூபம்.

**குன்று அருளாலே கூறினீர் என்வடிவு**
**பொன்றுத நும்முருவம் போதியீர்—நின்றருக்கன்**
**கண்ணுக்குக் காட்டுமாப் போலே உனதறிவின்**
**நண்ணிஅறி வித்திடுவோம் நாம்.**

*(இ–ள்) குன்று அருளாலே கூறினீர் என் வடிவு–கெடாத கிருபையினாலே அடியேனுடைய சொரூபத்தை அருளிச்செய்தீர்,–*

பொன்றாத நும் உருவம் போதியீர்—கெடாத தேவரீருடைய சொரூபத்தையும் அடியேனுக்கு அருளிச் செய்யவேண்டும்,— நின்று அருக்கன் கண்ணுக்கு காட்டும் ஆ போலே—ஆதித்தப் பிரகாசமானது கண்ணுக்குப் பதார்த்தங்களைக் காட்டிக்கொண்டு நிற்கிறது போல,—உனது அறிவின் நண்ணி அறிவித்திடுவோம் நாம்—உனது அறிவிலேபொருந்தி நின்று அறிவித்து வருவோம் நாம் என்க. (27)

**அன்றியுங்கேள் ஆன்மாவால் ஆய்ந்தறியும் ஐம்பொறிகள்**
**இன்றி அறியா இவையென்ன—நின்றதுபோல்**
**ஓவாமல் உன்னை உணர்த்துவோம் உன்னறிவின்**
**மேவாமல் மேவிநா மே.**

(இ—ள்) அன்றியும் கேள்—அல்லாமலும் சொல்லுகிறோம் கேள், ஆன்மாவால் ஆய்ந்து அறியும் ஐம்பொறிகள் இன்றி அறியா இவை என்ன—ஆன்மாவினாலே நன்றாக அறிந்து காரியப்பட்டு வருகிற பஞ்சேந்திரியங்களும் ஆன்மாவினாலே அறிந்து காரியப்பட்டு வருகிறோம் என்று அறியச்செய்யா, நின்ற அது போல்—அங்ஙனம்நின்ற பஞ்சேந்திரியங்களைப்போல்,— ஓவாமல் உன்னை உணர்த்துவோம்—விட்டு நீங்காமல் நின்று உனக்கு அறிவிப்போம்,— உன் அறிவில் மேவாமல் மேவி நாம் ஏ—உன் அறிவிலே பொருந்தாமற் பொருந்தி நின்று நாம் (அறிவித்துவரச் செய்தேயும் நீ அறியாமலிருந்தாய்) என்க. (28)

**அக்கரங்கட் கெல்லாம் அகரஉயிர் நின்றாற்போல்**
**மிக்க உயிர்க்குயிராய் மேவினேம்—எக்கண்ணும்**
**நில்லா இடத்துயிர்க்கு நில்லா தறிவென்று**
**நல்லா கமம்ஓதும் நாடு.**

(இ—ள்) அக்கரங்கட்கு எல்லாம் அகர உயிர் நின்றால் போல்—ஐம்பத்தோரக்கரத்துக்கும் அகரமாகிய அக்கரம் உயிராய் நின்றது போல்,— மிக்க உயிருக்கு உயிராய் மேவினேம்—சர்வான்மாக்களிடத்திலேயும் அறிவுக்கறிவாய்ப் பொருந்தி நின்றும்,— எ கண்ணும்

நில்லா இடத்து உயிர்க்கு நில்லாது அறிவு என்று—சடசித்துக்கள் எல்லாவற்றினும் கர்த்தா நிறைந்து நின்று அறிவித்தாலல்லது உயிர் அறியச் செய்யாதென்று,— நல் ஆகமம் ஓதும் நாடு—நல்ல வேத சிவாகமங்களிலே சொல்லுமென்று விசாரித்தறிவாயாக என்க. (29)

## பஞ்சாக்கர நடனம்.

நற்றவத்தோர் தாம்காண நாதாந்தத் தஞ்செழுத்தால்
உற்றுருவாய் நின்ருடல் உள்ளபடி—பெற்றிடநான்
விண்ணூ பொழில்வெண்ணெய் மெய்கண்ட நாதனே !
தண்ணூர் அருளாலே சாற்று.

(இ–ள்) நல் தவத்தோர் தாம் காண—நல்ல தவத்தையுடைய ஆன்மாக்கள் தரிசிக்கத்தக்கதாக,— நாதாந்தத்து அஞ்சு எழுத்தால் உற்று உரு ஆய் நின்று ஆடல்—நாதாந்தத்தின் முடிவிலே பஞ்சாக்கரமே திருமேனியாகக்கொண்டு நிருத்தம் செய்கிற முறைமை,—உள்ளபடி பெற்றிட நான்—உண்டானபடியே அடியேன் தரிசிக்கத்தக்கதாக,- விண் ஆர் பொழில் வெண்ணெய் மெய்கண்டநாதனே—ஆகாயத்தை அளாவியிராநின்ற சோலைகள்சூழ்ந்த திருவெண்ணெய் நல்லூரே திருப்பதியாக எழுந்தருளியிருக்கிற மெய்கண்டசுவாமீ! தண் ஆர் அருளாலே சாற்று—குளிர்ந்த கிருபையினலே திருவுளம பற்றி யருளவேண்டும் என்க. (30)

எட்டும் இரண்டும் உருவான லிங்கத்தே
நட்டம் புதல்வா! நவிலக்கேள்—சிட்டன்
சிவாயநம வென்னுந் திருவெழுத்தஞ் சாலே
அவாயமற நின்ருடு வான்.

(இ–ள்) எட்டும் இரண்டும் உருவான லிங்கத்தே நட்டம்—எட்டும் இரண்டும் உருவாயிருக்கிற யகாரமாகிய ஆன்மாவிடத்திலே நடனம்,— புதல்வா நவில கேள்—பிள்ளாய்! சொல்லக்கேள்.— சிட்டன்—பரமசிவன்,- சிவாயநம என்னும் திரு எழுத்து அஞ்சாலே அவாயம் அற நின்று ஆடுவான்—பஞ்சாக்கரமே திருமேனியாகக் கொணடு ஆன்மாக்கள் பிறவியறத் தக்கதாக நிருத்தம் செய்வன் என்க. (31)

ஆடும் படிகேள்நல் அம்பலத்தான் ஐயனே !
நாடும் திருவடியி லேநகரம்—கூடும்
மகரம் உதரம் வளர்தோள் சிகரம்
பகருமுகம் வாமுடியப் பார்.

*(இ—ள்) ஆடும் படி கேள் நல் அம்பலத்தான் ஐயனே—ஐய! நல்ல திருவம்பலத்தின் கண்ணே எழுந்தருளி நின்று கர்த்தா நிருத்தம் செய்கிற முறைமையைச் சொல்லுகிறேம் கேள்,— நாடும் திருவடியிலே நகரம்—உன்னரிய ஸ்ரீ பாதத்திலே நகாரமாகவும்,— கூடும் மகரம் உதரம்—பொருந்தப்பட்ட திருவுந்தியிலே மகாரமாகவும்,— வளர்தோள் சிகரம்—மிகுந்து வரப்படாநின்ற திருத்தோளிலே சிகாரமாகவும்,— பகரும் முகம் வா—சொல்லப்பட்ட திருமுகத்திலே வகாரமாகவும் — முடி ய பார்—திருமுடியிலே யகாரமாகவும் இந்த முறைமையிலே நமசிவாய என்கிற பஞ்சாக்கரமே திருமேனியாகக் கொண்டு நிருத்தம் செய்வர் என்று விசாரித்தறியாயாக என்க.(32)*

சேர்க்கும் துடிசிகரம் சிக்கனவா வீசுகரம்
ஆர்க்கும் யகரம் அபயகரம்—பாாக்கிலிறைக்
கங்கி நகரம் அடிக்கீழ் முயலகனுர்
தூங்கும மகரமது தான்.

*(இ—ள்) சேர்க்கும் துடி சிகாம்—டமருகம் ஏந்திய ஸ்ரீ அத்தத்திலே சிகாரமாகவும்,– சிக்கன வா வீசு கரம்—வீசிய ஸ்ரீ அத்தத்திலே வகாரமாகவும்,— ஆர்க்கும் யகரம் அபயகரம்—அமைத்த ஸ்ரீ அத்தத்திலே யகாரமாகவும்,— பார்க்கில் இறைக்கு அங்கி நகாம்—அக்கினி ஏந்திய ஸ்ரீ அத்தத்திலே நகாரமாகவும்,— அடி கீழ் முயலகனுர் தங்கும் மகரம் அதுதான்—முயலகனை மிதித்த பாதத்திலே மகாரமாகவும் இந்த முறைமையிலே பஞ்சாக்கரமே திருமேனியாகக் கொண்டு நிருத்தம் செய்வார் என்று அறிவாயாக என்க. (33)*

ஓங்கார மேநல் திருவாசி உற்றதனில்
நீங்கா எழுத்தே நிறைசுடராம்—ஆங்காரம்
அற்ருர் அறிவர்அணி அம்பலத்தான் ஆடலிது
பெற்ருர் பிறப்பற்ருர் பின்.

(இ-ள்) ஓங்காரமே நல் திருவாசி—பிரணவம்தானே நல்ல திரு வாசியாகவும்,— உற்று அதனில் நீங்கா எழுத்தே நிறை சுடர் ஆம்—பிரணவததை விட்டு நீங்காத பஞ்சாக்கரமே உள்ளொளியாகவும்,—ஆங்காரம் அற்றார் அறிவர்—யான் எனது என்னும் செருக்கற்றவர்கள் அறிவார்கள்,— அணி அம்பலத்தான் ஆடல் இது பெற்றார் பிறப்பு அற்றார் பின்—அழகிய திருவம்பலத்தின் கண்ணே எழுந்தருளிநின்று நிருத்தம் செய்யும் முறைமையைத் தெரிசித்தவர்களே பின்பு சனன மரணம் அற்றவர்கள் என்க. (34)

தோற்றம் துடியதனில் தோயும் திதிஅமைப்பில்
சாற்றியிடும் அங்கியிலே சங்காரம்—ஊற்றமா
ஊன்று மலர்ப்பதத்தில் உற்றதிரோ தம்முத்தி
நான்ற மலர்ப்பதத்தே நாடு.

(இ-ள்) தோற்றம் துடி அதனில்—டமருகம் ஏந்திய ஸ்ரீ அத்தத்திலே சிருட்டியாகவும், தோயும் திதி அமைப்பில்-அமைத்த ஸ்ரீ அத்தத்திலே ஆன்மா இரட்சையாகவும்,—சாற்றியிடும் அங்கியிலே சங்காரம்—அக்கினி ஏந்திய ஸ்ரீ அத்தத்திலே மலசங்காரமாகவும்,—ஊற்றம் ஆ ஊன்றும் மலர் பததில் உற்ற திரோதம்—உறுதியாய் ஊன்றிய ஸ்ரீ பாதத்திலே பிரபஞ்சத்தை மறைக்கும் திரோதமாகவும்,— முத்தி நான்ற மலர் பதத்தே நாடு—தூக்கிய ஸ்ரீ பாதத்திலே அநுக்கிரக முத்தியாகவும் இந்த முறைமையிலே முத்தி பஞ்ச கிருத்தியமே திருக்கூத்து என்று விசாரித்து அறிவாயாக என்க. (35)

மாயை தனை உதறி வல்வினையைச் சுட்டுமலம்
சாய அமுக்கிஅருள் தானெடுத்து—நேயத்தால்
ஆனந்த வாரிதியில் ஆன்மாவைத் தானழுத்தல்
தானெந்தை யார்பரதம் தான்.

(இ-ள்) மாயை தனை உதறி - டமருகம் ஏந்திய ஸ்ரீ அத்தத்தினாலே மாயையை நீக்கி,— வல்வினையை சுட்டு—அக்கினி ஏந்திய ஸ்ரீ அத்தத்தினாலே கன்மமலத்தைச் சுட்டு,— மலம் சாய அமுக்கி-

ஊன்றிய ஸ்ரீ பாதத்தினலே மலம் மேலிடாமல் அமிழ்த்தி,—அருள் தான் எடுத்து—தூக்கிய பாதத்தினலே அருளே தனுவாக நிறுத்தி,—நேயத்தால் ஆனந்த வாரிதியில் ஆன்மாவை தான் அழுத்தல் தான்—கிருபையினலே அமைத்த ஸ்ரீ அத்தத்தினலே ஆனந்த வெள்ளத்திலே ஆன்மாவை அழுத்துகிறது தான்,— எந்தையார் பரதம் தான்—எம்முடைய சுவாமியாகிய பரமேசுவரனுடைய திருக்கூத்து முறைமை என்க. (36)

மோனந்த மாமுனிவர் மும்மலத்தை மோசித்துத்
தானந்த மானிடத்தே தங்கியிடும—ஆனந்தம்
மொண்டருந்தி நின்ருடல் காணும்அருள் மூர்த்தியாக்
கொண்டதிரு அம்பலத்தான் கூத்து.

(இ—ள்) மோனந்த மா முனிவர் மு மலத்தை மோசித்து—மௌன ஞானிகள் கர்த்தாவினுடைய கிருபையினலே மூன்று மலங்களையும் நீக்கி,— தான் அந்தமான இடத்தே தங்கியிடும்—ஆன்மபோதம் முடிந்த இடத்திலே உதயமாகிற,— ஆனந்தம் மொண்டு அருந்தி நின்று ஆடல் காணும்—ஆனந்த வெள்ளத்திலே முகந்துகொண்டு அநுபவிக்கிறது தான்,—அருள் மூர்த்தி ஆ கொண்ட திருஅம்பலத்தான் கூத்து—ஆன்மாக்களை இரட்சிக்கவேணும் என்கிற காருண்ணியமே திருமேனியாகக்கொண்டு திருஅம்பலத்திலே எழுந்தருளிநின்று நிருத்தம் செய்கிற முறைமைத்தாம் என்க. (37)

உரையுணர்வுக் கெட்டா ஒருவன்மிகு பஞ்சாக்
கரத்தால் வரைமகள்தான பாதி—பரையிடமாய்க்
காணும் படியே கருணைஉருக் கொண்டாடல்
பேணுமவர்க் குண்டோ பிறப்பு.

(இ—ள்) உரை உணர்வுக்கு எட்டா ஒருவன்—மனம் வாக்கு காயங்களுக்கு எட்டாத ஒப்பற்ற பரமேசுவரன்,— மிகு பஞ்சாக்கரத்தால்—பஞ்சாக்கரத்தினலே மிகுந்த காருண்ணியமே திருமேனியாகக்கொண்டு,— பரை இடம் ஆய்—பராசத்தியாகிய திருவம்பலம் இடமாக நின்று,—பாதி வரைமகள் தான் காணும்படியே—

*பாதியாகிய மலையரையன்மகள் காணும்படிக்கு,— கருணை உரு கொண்டு – கிருபையினாலே திருமேனிகொண்டு எழுந்தருளி,— ஆடல் பேணும் அவர்க்கு உண்டோ பிறப்பு–ஆடியருளிய திருக் கூத்தை விரும்பின பெயர்கள் பின்பு சனனமற்றவர்கள் என்க.* (38)

## அஞ்செழுத்து.

**நாதாந்த நாடகத்தை நன்று அருள்செய்தீர்**
**ஓதீர் எழுத்தஞ்சும் உள்ளபடி—தீதறவே**
**அஞ்செழுத்தீ தாகில் அழியுமெழுத் தாய்விடுமோ**
**தஞ்ச அருட்குருவே! சாற்று.**

(இ–ள்) *நாதாந்த நாடகத்தை நன்றாய் அருள் செய்தீர்–தத்து வாதீதமாய் இருக்கிறதிருக்கூத்து முறைமையை நன்றாக அருள்செய் தீர்,- அஞ்சு எழுத்து ஈது ஆகில் அழியும் எழுத்து ஆய் விடுமோ– பஞ்சாக்கரம் எழுத்துக்களிலே இவ் ஒன்றாய் இருக்குமாகில் அழிகிற எழுத்துகள் ஆமோ,–தஞ்சம் அருள் குருவே ஓதீர்–புகலிடமாயிருக் கிற கிருபை யையுடைய தேசிகனே! சொல்லுவீராக,— தீது அறவே எழுத்து அஞ்சும் உள்ளபடி சாற்று–குற்றமற்ற பஞ்சாக் கரத்தின் உண்மையை உண்டானபடியே அடியேனுக்கு அருள் செய்யவேண்டும் என்க.* (39)

**உற்ற குறி அழியும் ஓதுங்கால் பாடைகளில்**
**சற்றும் பொருள்தான் சலியாது—மற்றதுகேள்**
**ஈசனருள் ஆவி எழிலார் திரோதமலம்**
**ஆசில்எழுத் தஞ்சின்அடை வாம்.**

(இ–ள்) *ஓதும் கால்–சொல்லுமிடத்து,—உற்ற குறி அழியும்– பொருந்தப்பட்ட எழுத்துக்களுடைய குறிகள் அழியும்,— பாடை களில் சற்றும் பொருள் தான் சலியாது–பதினெண் பாஷைகளிலே உண்டான பொருள்கள் சற்றும் கெடாது,— மற்று அது கேள்– பஞ்சாக்கரத்தின் உண்மையைச் சொல்லுகிற முறைமையைக் கேள்—, ஈசன் அருள் ஆவி எழில் ஆர் திரோதம் மலம் ஆசு இல்*

*எழுத்துஅஞ்சின் அடைவு ஆம்—சிவம் அருள் ஆன்மா அழகிய திரோதம் மலம் என்னும் ஐந்தும் குற்றமில்லாத பஞ்சாக்கரத்தின் முறைமைத்தாம் என்க.* (40)

**சிவனருள் ஆவி திரோதமலம் ஐந்தும்**
**அவனெழுத் தஞ்சின் அடைவாம—இவனின்று**
**நம்முதலா ஓதிலருள் நாடாது நாடுமருள்**
**சிம்முதலா ஓதுநீ சென்று.**

(இ—ள்) *சிவன் அருள் ஆவி திரோதம் மலம் ஐந்தும் அவன் எழுத்து அஞ்சின் அடைவு ஆம்—சிவம் அருள் ஆன்மா திரோதம மலம் என்னும் ஐந்தும் பரமேசுவரனுடைய பஞ்சாக்கரத்தின் முறைமைத்து ஆம்,— இவன் நின்று—பக்குவப்பட்ட ஆன்மா நின்று,— ந முதல் ஆ ஓதில் அருள் நாடாது—நகாரம் முதலாக உச்சரிக்கில் அருள் பொருந்தாது,— நாடும் அருள் சி முதல் ஆ ஓது நீ சென்று—ஆசாரியர் அநுக்கிரகம் பண்ணின முறைமையிலே நின்று சிகாரம் முதலாக உச்சரிக்கில் அருள் பொருந்தும் என்க.* (41)

**அண்ணல் முதலா அழகார் எழுத்தைந்தும்**
**எண்ணில் இராப்பகலற் றின்பத்தே—நண்ணி**
**அருளா னதுசிவத்தே யாக்கும் அணுவை**
**இருளா னதுதீர இன்று.** (42)

(இ—ள்) *அண்ணல் முதல் ஆ அழகு ஆர் எழுத்து ஐந்தும்—சிவம் முதலாக அழகு பொருந்திய பஞ்சாக்கரம் ஐந்தும்,— எண்ணில்—இடைவிடாமல் உச்சரிக்கில்,—இரா பகல் அற்ற இன்பத்தே—கேவல சகலம் அற்ற இடத்தே,— நண்ணி அருள் ஆனது சிவத்தே ஆக்கும் அணுவை இருளானது தீர இன்று—ஆன்மாவுக்கு ஆணவ மலமானது நீங்க அருளானது பேரின்பமாகிய சிவத்திலே பொருத்துவிக்கும் என்க.* (42)

**ஆதி மலம்இரண்டும் ஆதியாய் ஓதினல்**
**சேதியா மும்மலமும் தீர்வாகா—போதம்**
**மதிப்பரிதாம் இன்பத்தே வாழலாம் மாறி**
**விதிப்படிஓ தஞ்செழுத்து மே.**

(இ–ள்) ஆதி மலம் இரண்டும் ஆதியாய் ஓதினல் சேதியா மும் மலமும் தீர்வு ஆசா—ஆதியாகிய நகாரமும் மலமாகிய மகாரமும் இரண்டும் அடியாக உச்சரித்தால் உறுதியாக மும்மலமும் நீங்கி ஆன்மா அருளைப் பொருந்திப் பேரின்ப வாழ்வை உறமாட்டா,— (உறும் முறைமை கூறுமிடத்து):— மாறி விதிப்படி ஓது அஞ்செழுத்தும் போதம் மதிப்பரிதாம் இன்பத்தே வாழலாம்—நகாரம் முதலாக உச்சரிக்கும் முறைமையை மாறிச் சிவம்முன்னுக அத்திருவெழுதது அஞ்சையும் விதிப்படி உச்சரிக்க ஆன்ம போதத்தால் மதித்தற்கரிதாகிய பேரின்ப வாழ்வில் எய்தி வாழலாம் (ஆதலால்) நீயும் சிவம் முன்னுக உச்சரிப்பாயாக என்க. (43)

அஞ்செழுத்தே ஆகமமும் அண்ணல் அருமறையும்
அஞ்செழுத்தே ஆதிபுரா ணமனைத்தும்—அஞ்செழுத்தே
ஆனந்த தாண்டவமும் யாவைக்கு மப்பாலாம்
மோனந்த மாமுத்தி யும். (44)

(இ–ள்) அஞ்சு எழுத்தே ஆகமமும் அண்ணல் அருமறையும்—பரமேசுவரன் திருவுளம் பற்றுநின்ற இருபத்தெட்டுத் திவ்விய ஆகமங்களும் நாலுவேதமும் பஞ்சாக்கரமே,— அஞ்செழுத்தே ஆதி புராணம் அனைத்தும்—பதினெண்புராணங்கள் அனைத்தும் பஞ்சாக்கரமே,— அஞ்செழுத்தே ஆனநத தாண்டவமும்—ஆனந்த நடனமும் பஞ்சாக்கரமே,— யாவைக்கும் அப்பால் ஆம் மோனந்தமாம் முத்தியும் (பஞ்சாக்கரமே)—தத்துவாதீதமாகிய மௌனஞானமாயிருக்கிற பரமுத்தியும் அப்பஞ்சாக்கரமே ஆம் என்க. (44)

## அத்துவித முத்தி

முத்தி தனை அடைந்தோா முந்துபழம் போதங்கி
வித்தகமாம் வீணை இவையிற்றின்—ஒத்த
இரதமணம் வெம்மை எழில்நாதம் போல
விரவுவரென் றேதும் விதி.

(இ-ள்) முத்தி தனை அடைந்தோர்-மோட்சத்தை அடைந்த பெயர்கள் (பேரின்பத்திலே இரண்டற நிற்கிற முறைமைக்குத் திருட்டாந்தம் எப்படி? என்று கேட்கிறாயானால்),— முந்து பழம் போது அங்கி வித்தகம் ஆம் வீணை இவையிற்றின் ஒத்த இரதம் மணம் வெம்மை எழில் நாதம் போல்-பழமும் ரசமும் போலவும் பூவும் மணமும் போலவும் அக்கினியும் வெம்மையும் போலவும் பண்ணும் ஓசையும் போலவும்,— விரவுவர் என்று ஓதும் விதி-இப்படி இரண்டறப் பொருந்தி நிற்பார்கள் என்று ஆகமங்களிலே சொல்லும் என்க. (45)

**தத்துவங்க ளெல்லாம் சகசமா ஆன்மாவிற்**
**பெத்தத்தில் நிற்கின்ற பெற்றிபோல்—முத்திதனில்**
**சித்தமல மற்றோர் செறிந்திடுவர் என்றுமறை**
**சத்தியமா ஓதியிடும் தான்.**

(இ-ள்) தத்துவங்கள் எல்லாம் சகசமா ஆன்மாவில் பெத்தத்தில் நிற்கின்ற பெற்றி போல்-பெத்ததசையிலே தத்துவங்களெல்லாம் ஆன்மாவினிடத்திலே இரண்டறநிற்கிற முறைமைபோல,-முத்திதனில் சித்த மலம் அற்றோர் செறிந்திடுவர் என்று மறை சத்தியம் ஆ ஓதியிடும் தான்-முத்தித்தசையிலே சகசமலமற்ற பக்குவப்பட்ட ஆன்மாக்கள் சிவனிடத்திலே இரண்டறப்பொருந்துவார்கள் என்று சத்தியமாகவே சிவாகமம் சொல்லும் என்க. (46)

**ஆதவன்தன் சந்நிதியில் அம்புலியின் ஆர்சோதி**
**பேதமற நிற்கின்ற பெற்றிபோல்—நாதாந்தத்**
**தண்ணல் திருவடியில் ஆன்மா அணைந்தின்பக்**
**கண்ணில் அழுந்தியிடும் காண்.**

(இ-ள்) ஆதவன் தன் சந்நிதியில் அம்புலியின் ஆர் சோதி பேதம் அற நிற்கின்ற பெற்றி போல்-ஆதித்தப்பிரகாசத்தின் முன்னே சந்திரப்பிரகாசமானது இரண்டறநிற்கிற முறைமைபோல,— நாத அந்தத்து அண்ணல் திருவடியில் ஆன்மா அணைந்து—தத்துவாதீத

*மாயிருக்கிற திருவடி ஞானத்திலே ஆன்மாப் பொருந்தி,—இன்பக் கண்ணில் அழுந்தியிடும் காண்–பேரின்பத்திலே இரண்டறப் பொருந்தும் என்று அறிவாயாக என்க.* (47)

**சென்றிவன்றான் ஒன்றில் சிவபூ ரணம்சிதையும்**
**அன்றவன்றான் ஒன்றுமெனில் அந்நியமாம் – இன்றிரண்டும்**
**அற்றநிலை ஏதென்னில் ஆதித்தன் அந்தன்விழிக்**
**குற்றமற நின்றதுபோற் கொள்.**

(இ–ள்) *சென்று இவன் தான் ஒன்றில் சிவ பூரணம் சிதையும்– ஆன்மா சிவனைச் சென்று பொருந்துவானாகில் சிவனுக்குப் பூரணத்துவம் இல்லையாகவேணும்,— அன்று அவன் தான் ஒன்றும் எனில் அந்நியம் ஆம்–சிவன் ஆன்மாவைச் சென்று பொருந்துவானாகில் அப்போது ஆன்மா வேறாயிருக்க வேணும்,— இன்று இரண்டும் அற்ற நிலை ஏது என்னில்–இரண்டு முறைமையும் அல்லாமல் நின்ற நிலைக்குத் திருட்டாந்தம் எப்படி என்று கேட்கிறாய் ஆனால்,— ஆதித்தன் அந்தன் விழி குற்றம் அற நின்றது போல் கொள்–அந்தகனுக்குப் படலம் நீங்கின காலத்து ஆதித்தப் பிரகாசமும் கண்ணினுடைய ஒளியும் இரண்டறக்கலந்து நின்றாற் போல என்க.* (48)

**வாக்கு மனமிறந்த வான்கருணை யாளன்உருத்**
**தாக்கறவே நிற்கும் தனிமுதல்வா!– நீக்காப்**
**பதியினைப்போல நித்தம் பசுபாசம் என்றாய்**
**கதியிடத்து மூன்றினையும் காட்டு.**

(இ–ள்) *வாக்கு மனம் இறந்த வான் கருணையாளன் உரு தாக்கு அறவே நிற்கும் தனி முதல்வா–மன வாக்குக் காயங்களுக்கு எட்டாத பொருளே வடிவாய் அடியார்களிடத்திலே இரண்டறநிற்கிற ஒப்பற்ற கர்த்தாவே,— நீக்கா பதியினைபோல் பசு பாசம் என்றாய்–விட்டு நீங்காமல் இருக்கிற பதியினைப்போல் பசுவும் பாசமும் நித்தியம் என்று அருளிச்செய்தது,— கதி இடத்து மூன்றினையும் காட்டு–முத்தியிலும் பதி பசு பாசம் ஆகிய மூன்றுமுதலும் அழியாமல் நிற்கிற முறைமையை அடியேனுக்கு அருளிச் செய்யவேணும் என்க.* (49)

முத்திதனின் மூன்று முதலும் மொழியக்கேள்
சுத்தஅனு போகத்தைத் துய்த்தல்அணு – மெத்தவே
இன்பங் கொடுத்தல்இறை இத்தைவிளை வித்தல்மலம்
அன்புடனே கண்டுகொளப் பா.

(இ–ள்) *முத்திதனில் மூன்று முதலும் மொழிய கேள் அப்பா-அப்பனே! முத்தியிலும் பதி பசு பாசம் என்னும் மூன்றுமுதலும் அழியாமல் நிற்கிற முறைமையைச் சொல்லுகிறோம் கேள்,— சுத்த அநுபோகத்தை துய்த்தல் அணு–பேரின்பத்தைப் புசிக்கிறது ஆன்மா,— மெத்தவே இன்பம் கொடுத்தல் இறை-பேரின்பத்தை மிகுதியும் கொடுக்கிறது கர்த்தா,— இத்தை விளைத்தல் மலம்–பேரின்பத்தை மேன்மேலும் விளைக்கிறது மலம்,— அன்புடனே கண்டுகொள்–அன்பினாலே அறிவாயாக என்க.* (50)

## குருலிங்க சங்கம வழிபாடு

அப்பா! இம் முத்திக் கழியாத காரணந்தான்
செப்பாய் அருளாலே செப்பக்கேள் – ஒப்பில்
குருலிங்க வேடமெனக் கூறில்இவை கொண்டார்
கருவொன்றி நில்லார்கள் காண்.

(இ–ள்) *அப்பா இ முத்திக்கு அழியாத காரணம் தான் செப்பாய் அருளாலே செப்ப கேள்–அப்பனே! முத்தியைப் பெறுகைக்கு அழியாத காரணம் சொல்லுகிறோம் கேட்பாயாக,—ஒப்பு இல் - உவமையில்லாதிருக்கிற சிவம்,— குரு லிங்க வேடம் என கூறில்–குருவும் இலிங்கமும் சங்கமுமேஎன்று கூறுகையால் சிந்தி தனைக்கண்டு வழிபடுகிற சிவம் என்று,— இவை கொண்டோர்–இந்த முப்பொருளையும் உண்மையாகக் கொண்டோர்,—கரு ஒன்றி நில்லார்கள் காண்–கருவிலே பொருந்திப்பிறந்து இறவார்கள் என்க.* (51)

கற்று மனம்போல் கசிந்துகசிந் தேஉருகி
உற்றுசான் லிங்கம் உயர்வேடம் – பற்றுக
முத்தித் தலைவர் முழுமலத்தை மோசிக்கும்
பத்திதனில் நின்றிடுவர் பார்.

(இ–ள்) கன்று ஆ மனம் போல் கசிந்து கசிந்தே உருகி– ஈன்று அண்ணிதான பசுவைப்போல் உள்ளுருகிக் கசிந்து கசிந்து,– உற்ற ஆசான் இலிங்கம் உயர் வேடம் பற்று ஆக–மானிடதேகத் தைப்பொருந்திவந்த ஆசாரியனையும் சிவலிங்கப் பெருமானையும் பெரிய வேடத்தாரையும் இந்த மூன்று வடிவைத் தங்களுக்குப் பற் றுன தெய்வமாகக்கொண்டு,— முத்தி தலைவர் முழுமலத்தை மோசிக்கும் பத்தி தனில் நின்றிடுவர் பார்–பரம முத்தியைப் பெறு கைக்குத் தலையான சத்திநிபாதத்தையுடைய தபோதனர் முழுமல மாகிய பாசம் நீங்குகைக்குக் கரையழிந்த பத்தியின் கண்ணே நிற் பார், (ஆகையால்) நீயும் இந்த முறைமையிலே பார்த்து வழிபட்டு நிற்பாயாக என்க. (52)

**வாழ்ந்தேன் அருட்கடலே! வற்றுப் பவக்கடலில்**
**வீழ்ந்தே அலையாமல் மேதினியில் – சூழ்ந்துவிடா**
**வெண்ணெய்ச் சுவேதவன மெய்கண்ட நாதனே!**
**உண்மைத் தவப்பயனே! உற்று.**

(இ–ள்) மேதினியில் சூழ்ந்து விடா வெண்ணெய் சுவேதவன மெய்கண்ட நாதனே–சத்தியத்தைத் தரிசித்தவர் விட்டு நீங்காத திரு வெண்ணெய்நல்லூரிலே எழுந்தருளியிருக்கப்பட்ட சுவேதவனன் என்கிற பிள்ளைத்திருநாமத்தையுடைய மெய்கண்ட நாதனே,— உண்மை தவம் பயனே–உண்மையான தவத்தைப் பண்ணினவா களுக்குப் பயனாக உள்ளவனே,— வற்று பவ கடலில் வீழ்ந்தே அலையாமல்–பிறவியாகிய கடலில் அடியேன் வீழ்ந்து அலையாமல்,– அருள் கடலே வாழ்ந்தேன்–தேவரீர் காருண்ணியத்தினாலே வாழ்ந் என்க. (53)

**திருவதிகை — மனவாசகங்கடந்தார்**
**அருளிச்செய்த**
**உண்மை விளக்கம் மூலமும் – பழையவுரையும் முற்றுப்பெற்றன.**

## தனியன்

மன்அதிகை வாழும் மனவா சகம்கடந்தான்
மின்னனையார் வாழ்விலுரு மெய்கண்டான்—பன்னுமறை
வண்மைதரும் ஆகமநூல் வைத்த பொருள்வழுவா
உண்மைவிளக் கம்செய்தான் உற்று.

*திருச்சிற்றம்பலம். திருச்சிற்றம்பலம். திருச்சிற்றம்பலம்.*

ஸ்ரீ மெய்கண்ட தேவர் மிளிர்கழல் வெல்க.

ஸ்ரீ பஞ்சாக்கர தேசிகர் பதமலர் வாழ்க.

ஸ்ரீ மாதவச் சிவஞான யோகிகள் மலரடி வாழ்க.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# உண்மை விளக்கம்

## செய்யுள் முதற் குறிப்பகராதி

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# துகளறு போதக் கட்டளை.

## குருவணக்கம்.

ஆணவம்போம் மாயைபோம் ஆன இருவினைபோம்
நாணவரு மாமாயை நாணமும்போம்—வேணுபுரத்
தேசிகர்கோன் சிற்றம் பலநாடி சேவடியைப்
பூசைசெய்ய யாம்பூண்ட போது.

*பூர்வ சன்மங்களிலே அனுட்டித்த சரியை, கிரியை, யோகங்களினுடைய முதிர்ச்சியினாலே இதற்கு மேலாகிய ஞான பாதத்திற்கு யோக்கியமான (அதிதீவிரமாகிய நாலாம்) சத்தி நிபாதம் பிறந்த ஆன்மாவைத் தேர்ந்த ஆசாரியன், இவனுடைய (அந்த ஆன்மாவினுடைய) மன வாக்குக் காயங்களைப் பழைய வாதனைகளில் செலுத்தாமல், மோக்ஷத்துறையிலே புரிதல் திருவுளம்பற்றி இவனுக்குப் பதி, பசு, பாச தெரிசனம் பண்ணுவிப்பதாக அவற்றின் உண்மைகளை அருளிச்செய்ய, இவன் அறியாதவன் ஆகையாலே அருளிச்செய்ததை மறுத்து, தன் போதத்துக்கு எட்டினவற்றை, 'நான்' என்று சாதிக்க, பின் அவனது அறிவு உடன்படத் தகள் அறுத்து இசைவிக்கப் பொருந்தின முறைமையைச் சொல்லுகையால் இந்த நூலிற்குத் "துகளறு போதக் கட்டளை" எனப் பேராயிற்று.*

*இனி, அருளிச்செய்தபடி :—*

(குரு) "*நித்தனாய், நிராமயனாய், நிர்மலனாய், நிராகாரனாய், நிரஞ்சனனாய், நிருவிகற்பனாய், தெய்வமாய், சிந்திதமாய், அசிந்*

திதமாய், சகளமாய், அகளமாய், அகண்டமாய், அனுமயமாய், அறிவானந்தமாய், சுத்தமாய், தூய்மையாய், சோதியாய், சுடராய், அறிவுமாய், அறியாமலும் அல்லவுமாய், அகண்டபரிபூரணமாய், குணாதீதமாய், அளவிறந்த ஆன்மாக்களுக்குப் பிராணனாய், ஒருகாலமும் சலிப்பிலாதவனுமாய், சேதனங்களுக்கும் சேட்டையாய், அதிற்படாதவனுமாய், இப்படி அணுவுக்கு அணுவாய் மகத்துக்கு மகத்தாய் நிற்கிற பரமேசுரனையும்;—

விஞ்ஞானகலர், பிரளயாகலர், சகலர் என்று மூன்று வகைப் பட்டிருக்கவும், எண்ணுதற்கு அரிதாய், அழியாததாய், மலசகசமாய், ஒற்றித்து அறிவதாய், கன்மத்துக்கு ஈடாக உடம்புகள் மாறிப் பிறப்பதாய், பசு, சீவன், புருடன், புமான், தேகி, கிஞ்சிக்ஞன், சுதந்தரஹீனன், அகர்த்தா, அணு, அறியாதவன், உள்ளம், சைதன்யன், பிரகிருதி, புத்தி, பிராணன், சதசத்து, புற்கலன் என்பனவாய் இருக்கின்ற ஆன்மாக்களையும்;—

இந்த ஆன்மாக்களை, செம்பில் களிம்பு போலவும், சமுத்திர ஜலத்தில் உப்புப் போலவும், பிறவிக்குருடன் கண்ணில் உற்ற மாசுபோலவும், அநாதியே பொருந்திப் போதுகிற ஆணவமலத்தையும்;—

இந்த ஆணவமலத்தின் ஈட்டத்தாலே, தன்னையும் தனக்குப் பிராணனாய் நிற்கிற கர்த்தாவையும், அறியாத குற்றத்தாலே இதமகிதங்களாக வந்தேறுகிற புண்ணிய பாவங்களையும்;—

இந்தப் புண்ணிய பாவ காரணமாகச் செறிந்து வருகிற (மாயையில் உண்டாகும்) தநு கரண புவன போகங்களையும்;—

இவையிற்றை நடத்துவதான சுத்த தத்துவங்களும், வாக்காதி சாத்திரங்களுமாக விரிந்த மகாமாயையையும்;—

முன் சொன்ன ஆணவமலம் பக்குவமாம்படிக்கு நின்று திரோபவிக்கிற திரோதாயியையும்;—

உனக்கு நாம் அறிவிக்க நீ அவற்றை அறிந்து, பஞ்ச மலங்களையும், பதினெட்டவத்தைகளையும், விட்டு நீங்கி, கர்த்தாவின் செயலொழிந்து உன்செயல் இல்லை எனக்கண்டு, அகண்ட பரிபூரணமான பரமானந்த சொரூபத்திலே நிறைந்து நின்று அனுபவிப்பாயாக" என்றும்;

இவன் பதி, பசு பாசத்தின் உண்மையை இனிமேல் அறிய வேண்டும் என்கிறவன் ஆகையால் இதுவும் உண்டு என்னும் முறைமை தோன்றி, மேல் இவன் வினவுகை காரணமாக, இவன் சத்தியின் அளவு கண்டு கண்டு பகுத்தும் அருளிச்செய்கிற ஆசாரியரை நோக்கிச் சீடன் சொல்லுவான்:—

## குரு சீடர் உரையாடல்

(சீடன்) இப்படிக்கு நிற்பதோரு பரமேசுரன் உண்டு என்றும், அப்படிச் சொல்லப்பட்ட ஆன்மாக்கள் உண்டு என்றும், இந்த ஆன்மாக்களைப் பொருந்திப் போதுகிற ஆணவமலம் காரணமாகப் புண்ணிய பாவம் உண்டு என்றும், இவை முதலாகச் சொல்லப்பட்டவைகளை யெல்லாம் கண்டதுண்டோ?

(குரு) ஆனால் உன்னால் காணப்பட்டது எது?

(சீடன்) நான் கணடது இந்த உடம்பே காணும்.

(குரு) கண்ட நீ நிற்க, நீ கண்ட உடம்பு அறியுமாகில் முன்பு உண்டு போந்த சோறு 'சுடும்' என்று தொடப் பயப்பட்டுக் கையு வாங்கியும், 'ஆறிற்று' என்ன அறிந்து உண்டதும் உடம்பல்லவோ?

(சீடன்) அப்போதும் தொட்டுப் பார்த்தல்லவோ சுட்டது என்றும், குளிர்ந்தது என்றும் அறிந்து உண்டது. ஆகையால் உடம்பு அறியுங் காணும்.

(குரு) தொட்டுப் பார்த்தபோது தன் கையிலே சுட்டது என்றும் தன் கையிலே குளிர்ந்தது என்றும் சொன்னது உண்டோ? இல்லையோ?

(சீடன்) உண்டு.

(குரு) அதுவும் அல்லாமல் சவமானபோது முருடும் தானும் தன்னில் பேதமறக் கிடந்து வெந்ததே?

(சீடன்) வெந்தது.

(குரு) அப்போது உடம்பெல்லாம் சுட்டதென்று எழுந்திருந்து ஓடிப்போகக் கண்டது உண்டா?

(சீடன்) இல்லை.

(குரு) ஆனபடியினாலேயும், பஞ்சபூதங்களைக்கூட்டி எடுப்பித்த சடமானபடியினாலேயும் உடம்பு அறியாது.

(சீடன்) பாக்கும், வெற்றிலையும், சுண்ணாம்பும் கூடின அளவில் ஒரு சிவப்பு எழுந்தாற் போல நாலு பூதம் கூடின இடத்திலே ஒரு அறிவு எழுந்திருக்கிறதே! அது எது?

(குரு) அறிவு எழுந்தால் அறியாமல் கிடப்பானேன்?

(சீடன்) அவையில் ஒன்று பிரிகையாலே.

(குரு) பிரிந்த பூதம் எது?

(சீடன்) வாயு.

(குரு) வாயு உறக்கத்திற் கூடிப்பொருந்தி வாங்கல், வலித்தல், நீட்டல், நிமிர்த்தல் என்னும் குணங்களைச் செய்து நிற்கிறதோ? இல்லையோ?

(சீடன்) நிற்கிறது.

(குரு) அப்படி இருந்தும் ஒன்றும் அறியாமல் கிடந்ததன்றோ?

(சீடன்) கிடந்தது.

(குரு) ஒரு அறிவு எழுந்திருந்தது என்றாயே! அது எது என்கிறாயே! அது கனவு கேவலாவத்தை. இது நெடுங்கனவு சகலாவத்தை. ஆனபடியினாலே பூதங்கள் கூடியும் அறியா, பிரிந்தும் அறியா. ஆனபடியினாலே உடம்பு அறியாது; அறியும் என்கிற நீயும் அவற்றில் ஒன்று அல்லை: இந்தப் பிரபஞ்சம் பூதகாரியமாகையினாலே நீயும் இந்தத் தேகாதிப் பிரபஞ்சத்தை மறந்திருப்பாயாக.

அப்படி மறந்திருந்த சீடனை அனுபவம் கேட்ட அளவில் சீடன் சொல்லுவான்:—

(சீடன்) அந்த அவதாரத்தில் சத்தாதிகளே வந்துற்றன; அந்தச் சத்தாதிகளை அறிந்த பொறிகள் ஐந்துங்காணும் அறிவன.

(குரு) பொறிகள் என்கிருயே எவற்றை?

(சீடன்) மெய், வாய், கண், மூக்குச் செவிகளை.

(குரு) அவை இருப்பது நீ சொன்ன உடம்பிலே அல்லவோ!

(சீடன்) ஆனுல் பொறிகள் இல்லையோ?

(குரு) உண்டு.

(சீடன்) உண்டானுல் நீர் சொன்ன உறுப்புக்களிலே நின்று சத்த, பரிச, ரூப, ரச, கந்தங்களை அறிகிறபடியினுலே அவை காணும் அறிவன.

(குரு) அப்படியானுல் உறக்கத்தில் அறியாமல் கிடப்பானேன்?

(சீடன்) அவை ஒடுங்கின படியினுலே.

(குரு) ஒடுங்கினபோது அறியாமல் இருக்கிறதும் உணர்ந்த போது அறிகிறதும் பொறிகளேயானுல் அவை ஒன்று அறிந்து, ஒன்று அறியாமல் இருப்பானேன்?

(சீடன்) அவை ஒவ்வொன்ருய் அறிந்து செய்கின்றனவே.

(குரு) அவை ஒன்ருக அறியாமல் ஐந்தாக அறிகையாலே ஐந்தையும் கொண்டு அறிவான் ஒருவன் வேண்டும். ஆகையால் பொறிகள் அறியா. அறியும் என்கிற நீயும் அவற்றில் ஒன்றல்லை. அந்தப் பொறிகளினுலே அறிகிருேம் என்கிற அறிவு கழன்று இருப்பாயாக.

அப்படியே பொறிகள் அறியாதபடிக்கும் தான் இவை அல்லாதபடிக்கும் பொருந்தி இவையிற்றைக் கழன்றிருந்த சீடனை அனுபவம் கேட்கும் அளவில் சீடன் சொல்லுவான்:—

(சீடன்) விடயங்களிலே பற்றுவதும், நிச்சயிப்பதும் எழுந்திருப்பதும் சிந்திப்பதுமாக நாலு முறைமை நடக்கின்றன.

(குரு) அவை உட்கரணங்களாகிய மனம், புத்தி, அகங்காரம், சித்தம் காண்.

(சீடன்) ஆனால் அந்தக் கரணங்கள் நாலும் கண்டறிவனவே.

(குரு) அவைதாம் ஒன்று அறிந்தது ஒன்று அறியாதே? அவை ஒன்று ஒன்றாக அறிந்து செய்வனவே என்றால் நாலும் நாலாக அறிவது எங்ஙனே?

(சீடன்) அவை கைத்தல், காழ்த்தல், புளித்தல், தித்தித்தல், என்னும் இரதங்கள் முறைமையானாற்போலவாம்காணும்.

(குரு) இரதங்கள் அறியுமோ இது கைக்கும் என்றும், இது காழ்க்கும் என்றும், இது புளிக்கும் என்றும், இது தித்திக்கும் என்றும் ஒருவன் புசித்தறிந்து சொன்னாற்போல மனம் பற்றும் என்றும், புத்தி நிச்சயிக்கும் என்றும், அகங்காரம் எழுந்திருக்கும் என்றும், சித்தம் சிந்திக்கும் என்றும் அறிந்து வநதது ஒருமுதல் உண்டோ? இல்லையோ?

(சீடன்) உண்டாகவேண்டும்.

(குரு) அது எது என்கிறாயோ? கருவி கரணங்களையும் தன்னையும் பரமசிவன் கூட்டின அளவில் அவையிற்றைச் சீவிக்கவும் பண்ணிச் சீவியாதிருக்கவும் பண்ணி, புணர்ந்து வருகிற அந்தக்கரணம் உட்கரணமாகவும், கூடிவருகிற கருவிகள் புறக் கருவிகளாகவும் கூடின காலத்து அவை தானாய் அவையிற்றுக்கு வேறுமாய், ஆணவமலத்தாலே மறைப்புண்டு இதமகிதங்களைப் புசித்தும், ஆர்ச்

சித்தும், மாயையாலே மயங்கிப் பொய்யாய் இருக்கிற தேகாதிப் பிரபஞ்சத்தை மெய் என்று உருசிப்பிக்கிற திரோதாயியாலே தனக்குப் பிராணனாய் நிற்கிற அருளையும் அறியாமல், மகாமாயையாலே பிரேரகனாய் யாதொரு விஷயத்தையும் இந்திரியத்தினாலே கண்டறிந்து ஆசைப்பட்டு உபகரிக்கும் தொழிலைச் செய்து, யான் எனது என்று நிற்பதொன்று உண்டோ? இல்லையோ?

(சீடன்) உண்டு.

(குரு) ஆனபடியினாலே அந்தக்கரணங்கள் அறியா, அறிவும் அதுவேறே. இவையிற்றை அவிழ இருப்பாயாக.

அந்தக்கரணங்கள் அறியாதபடிக்கும், தான் இவை அல்லாத படிக்கும் பொருந்தி இவையிற்றை அவிழ்த்திருந்த சீடன் அநுபவம் கேட்கும் அளவில் சீடன் சொல்லுவான்:—

---

(சீடன்) அந்த அவதாரத்தில் சேட்டித்த பொருளாகக் கண்டது மூன்று செய்தி. அவையே தேகத்தை நான் என்று அபிமானம் பண்ணிப்போந்து நின்ற கெறுவமும், அவை நீ அல்ல என்று நிராசை விக்கப் பொருந்தியிருந்த சாந்தமும், அவையிற்றை விட்டு நீங்கிய விடத்து உண்டாகிய மயக்கமும் ஆம்.

(குரு) அப்படிச்சொன்னது இராசத, சாத்துவிக, தாமதம் என்னும் குணங்கள் காண்.

(சீடன்) ஆனால் அந்தக் குணத்திரயங்கள் தாமும் அறிவனவோ?

(குரு) அவை தாம் ஒரு குணத்தை ஒரு குணம் அறியாதபடியினாலும், அவை மூலப்பிரகிருதியிலேயிருந்து தோற்றப்பட்டன ஆகையாலும், ஒருவனைக் கோபி குணவான் குணஹீனன் என்று சொல்லுகையாலும், இவை மூன்றும் ஒருவனுக்கே நடக்குமாகையாலும் குணங்கள் அறியா. இவையிற்றைக் கூடி நடப்பதொன்று உண்டு. அதனை அறியவேண்டுமாகையால் இவையிற்றை அவிழ இருப்பாயாக.

அப்படியே குணங்கள் அறியாதபடிக்கும் தான் இவை அல்லாத படிக்கும் பொருந்தி இவையிற்றை அவிழ்த்திருந்த சீடனை அனுபவங்கேட்கும் அளவில் சீடன் சொல்லுவான்:—

---

(சீடன்) அவ்விடத்தில் உச்சுவாச நிச்சுவாசம் வழங்குகையால் பிராணவாயுவே அறியும்.

(குரு) பிராணவாயு உறக்கத்தில் கூடிப்பொருந்தி நின்று உயிர்க்கிறதோ? இல்லையோ?

(சீடன்) உயிர்க்கிறது.

(குரு) அப்போது முகத்திலே பாம்பு ஏறிப்போகவும் ஒன்றும் அறியாமல் கிடந்ததே?

(சீடன்) கிடந்தது.

(குரு) ஆனபடியினாலே பிராணவாயு அறியாது: நீயும் அந்தப் பிராணவாயுவின் இயக்கம் குலைந்திருப்பாயாக.

---

அப்படியே பிராணவாயு இயங்காதபடிக்கும் தான் அது அல்லாதபடிக்கும் பொருந்தி, ஒடுங்கும் எல்லையிலே ஒடுங்கி நின்ற சீடனை அனுபவங் கேட்கும் அளவில் சீடன் சொல்லுவான்:—

---

(சீடன்) எனக்கு ஒன்றும் தெரியவில்லை.

(குரு) ஆனால் கருவிகள் தொண்ணூற்றாறும் கழன்றன.

(சீடன்) அவதாரங்கள் ஐந்தாலும் கருவிகள் தொண்ணூற்றாறும் கழன்றதற்கு வகையும், இந்த அவதாரங்களினுடைய பெயரும், விளங்கத் திருவுளம்பற்றி அருளவேண்டும்.

**1. பஞ்சபூதப் பழிப்பு.**

(குரு) *தேகத்தை 'நீ அல்ல' என்று நாம் இசைவிக்கப்பொருந்தின அவதாரம் பஞ்சபூதப் பழிப்பு. தேகம் நீங்கவே பூதங்கள் ஐந்தும், பூதகாரியம் இருபத்தைந்தும், பிருதிவியின் வழித்தாகிய நாடிகள் பத்தும், ஆகாயத்தின் வழித்தான ஏடணைகள் மூன்றும் ஆக நாற்பத்து மூன்று கருவிகளும் நீங்குமே?*

(சீடன்) *நீங்கும்.*

**2. பொறியற உணர்தல்.**

(குரு) *இரண்டாவது சத்தாதிகளை வந்தற்றன. அந்தச் சத்தாதிகளை அறிந்த பொறிகள் ஐந்தும் நீ அல்ல என்று நாம் இசைவிக்கப் பொருந்தின அவதாரம் பொறியற உணர்தல். அந்தப் பொறிகளாகிய ஞானேந்திரியம் ஐந்தும் நீங்கவே வாக்காதிகளாகிய கன்மேந்திரியங்கள் ஐந்தும் நீங்குமே?*

(சீடன்) *நீங்கும்.*

**3. அந்தக்கரண சுத்தி.**

(குரு) *இந்த இருபதும், ஆக மொத்தம் அறுபத்துமூன்றும் நீங்கின. அந்தக் கரணங்கள் நான் என்று இருந்தாய். அவை நீ அல்ல என்று நாம் இசைவிக்கப் பொருந்தின அவதாரம் அந்தக்கரண சுத்தி. அந்த அந்தக்கரணம் நீங்கவே அவையிற்றைச் செலுத்துவதான அகார, உகார, மகார, விந்துக்களும், அந்த அட்சரங்கள் இடமாகச் சீவித்த வாக்கு நாலும் நீங்குமே!*

(சீடன்) *நீங்கும்.*

(குரு) *இந்த எட்டும், ஆகமொத்தம் எழுபத்தொன்றும் நீங்கின. குணத்திரயங்களை சீவிக்கையால் அவை நீ அல்ல என்று நாம் இசைவிக்கப் பொருந்தி அவையிற்றை நீங்கவே அக்குண ரூபமான மூலப்பிரகிருதியும் நீங்குமே !*

(சீடன்) *நீங்கும்.*

(குரு) இந்த மூலப்பிரகிருதியும் முக்குணங்களும் நீங்கவே இவனுக்குக் கன்ம சீவனம் இல்லையே?

(சீடன்) இல்லை.

(குரு) ஆகையால் கன்மத்தைக் கூட்டுகிற காலமும், அதை வரைந்து நிற்கிற நியதியும் நீங்குமே?

(சீடன்) நீங்கும்.

(குரு) இந்தக் காலமும் நியதியும் நீங்குகையால் புசிப்பு இல்லையே?

(சீ) இல்லை.

(குரு) ஆகையால் இச்சா ஞானக் கிரியைகள் சீவியாவே?

(சீடன்) சீவியா.

(குரு) ஆனபடியினாலே கிரியையை எழுப்புகிற கலையும், அறிவை எழுப்புகிற வித்தையும், ஆசையை எழுப்புகிற அராகமும் நீங்குமே?

(சீடன்) நீங்கும்.

(குரு) ஆசை நீங்கவே மயக்குவிக்கிற மாயையும் நீங்குமே?

(சீடன்) நீங்கும்.

## 4. கலாதிஞான நிராகரணம்.

(குரு) ஆகப் பத்தும் நீங்கின அவதரம் கலாதி ஞான நிராகரணம். ஆக எண்பத்தொன்றும் நீங்கின. பிராண வாயுவை 'நான்' என்று இருந்தாய். அதனை நீ அல்லவென்று நாம் இசைவிக்கப் பொருந்தி அதனை நீங்கவே ஒழிந்த வாயுக்கள் ஒன்பதும் நீங்குமே?

(சீடன்) நீங்கும்.

(குரு) இந்தப் பிராண வாயுவும் வித்தியா தத்துவங்களும் நீங்கவே இவையிற்றைப் பிரேரித்த சுத்த தத்துவங்கள் ஐந்தும் நீங்குமே?

(சீடன்) நீங்கும்.

## 5. சுத்த தத்துவ தூடணம்.

(குரு) ஆகப் பதினைந்து கருவிகளும் நீங்கின அவதாரம் சுத்த தத்துவ தூடணம். ஆகத்தத்துவங்கள் தொண்ணூற்றாறும் நீங்கின, நீங்கவே அவையிற்றுக்கு உற்பத்தியாய் இருக்கின்ற சுத்தமாயையும், அசுத்தமாயையும் (மூலப்பிரகிருதி மாயையும் சேர்ந்து என்றபடி) அவைகளுடனே கன்மமும் நீங்குமே?

(சீடன்) நீங்கும்.

(குரு) முன் சொன்ன நாதவிந்து தத்துவங்கள் நீங்குகிறபோது அவைகளிடமாகப் பிறந்த மந்திரங்கள், பதங்கள், வன்னங்கள், புவனங்கள், கலைகள் என்கிற அத்துவாக்களும் (அவைகளின்பாற்பட்ட) கன்மங்களும் நீங்குமே?

(சீடன்) நீங்கும்.

(குரு) அப்படிச் சர்வ உபாதிகளையும் விட்டு நீங்கிப் பல ஆயதாரமாகக் கருவிகளைக் கண்டு நேதி நேதி பண்ணின வழியைத் திரும்பிப் பார்த்த அளவில் சகலமுமாய் நின்ற அவதாரம் சகலாவத்தை என்று கண்டு, அவை நீ அல்லவாய்ப் பிரிந்து தோன்றி, மீண்டும் கூடாமல் நின்றால் உனக்குச் சகலன் என்ற பெயர் போய்ப் பிரளயாகலத்துவம் பிறந்தது எனக்கொள்க. அந்தத் தத்துவமும் நீங்கவே மூன்றுவகைக் கன்மமும் நீங்கும். ஆகையால், உனக்கு விஞ்ஞானகலத்துவம் பிறந்தது எனக் கொள்க.

---

என்று நிறுத்தின சீடனை அநுபவங் கேட்கும் அளவில் திரும்பியும் சொல்லுவான்:—

---

(சீடன்) எனக்கு ஒன்றும் தெரியவில்லை.

(குரு) பூதம் முதல் நாதம் ஈருக அறிவிக்க நேதி நேதி பண்ணி அறிந்துவந்தவனுய் இருந்தும், மூலமல சகசம் அகலாதபடியினுலே தனக்கொன்றும் தெரியவில்லை! கேள். முன்னம் பதி, பசு, பாசத்தின் உண்மையை விளங்கப் பாரித்த அளவில் உடம்பு அறியும் என்றுயே; அது அறியாதது கண்டாயே. பொறிகள் அறியும் என்றுயே; அவை அறியாததும் கண்டாயே. கரணங்கள் அறியும் என்றுயே; அவை அறியாததும் கண்டாயே. குணங்கள் அறியும் என்றுயே; அவை அறியாததும் கண்டாயே. பிராணவாயு அறியும் என்றுயே; அது அறியாததும் கண்டாயே. இவை எல்லாம் அறியாதன அறியாதன என்று அறிந்து வந்தது ஒன்று உண்டோ? இல்லையோ?

(சீடன்) உண்டு.

(குரு) தத்துவங்கள் எல்லாம் கழன்ற அவதாரத்தில் ஒன்றும் தெரியவில்லை என்றுயே?

(சீடன்) என்றேன்.

(குரு) அது தத்துவாதீதம்.

(சீடன்) அந்தத் தத்துவாதீதம் ஒன்றும் தெரியாமல் மறைக்குமோ?

(குரு) மறைக்காது.

(சீடன்) மறைத்தது எது?

(குரு) அது ஆணவமலத்தின் மேலீடு.

(சீடன்) ஆனல் அந்த ஆணவமலம் ஒழிந்து வேறு ஒன்றும் காணேன்.

(குரு) அது கேவல தெரிசனம். ஆகையால் கூடி நின்ற இந்திரியங்கள் தனக்கு வேருய் இருக்கச் செய்தேயும் அவையிற்றைத் 'தான்' என்று அபிமானம் பண்ணி நின்ற சகல அறிவு பாச ஞானமாகும். ஆகையால் அதுவும் நீ அல்லை. அதை அவிழ இருப்பாயாக.

(சீடன்) அப்படி அவிழ இருந்தேன். அதீதம் பிறந்தது.

(குரு) அது மருட் கேவலாதீதம்.

(சீடன்) அதிலே இருள் மிகுந்தது.

(குரு) அது விடிகைக்கு இருட்டு மிகுதிபோல மாசு மடிகைக்கு இருண்டது.

(சீடன்) அதற்கு என்ன செய்வது?

(குரு) அதைவிட்டு அவிழ நின்று புறப்படு.

(சீடன்) அப்படியே புறப்பட்டேன்.

(குரு) அந்த மருட் கேவலாதீதம் விட்டுப் புறப்பட்டேன் என்றது பசு ஞானம். அது தன் உண்மை தெரிசனமாகையால் நீ புறப்பட்ட மருட் கேவலாதீதம் முதல், தேகத்தை நீ அல்ல என்று உணர்த்த உணரும் முறைமை அளவாக, அடைவே பார்த்துக் காண்.

மீண்டும் பார்த்துச் சொன்னபடி:—

(சீடன்) நான் நின்று வந்த அவதாரங்களை எல்லாம் மீண்டும் பார்க்கும் அளவில் எனக்கு ஒரு மயக்கமும் இன்றி என்னாலே அறிந்து நீக்கப்பட்டபடியினாலே, என் அறிவு ஒழிந்து வேறு ஓர் அறிவும் இல்லை.

தான் சிற்றறிவன் என்கிற மாத்திரமும் அறியாமல் மேலும் சீடன் சொல்லுவான்:—

(சீடன்) அறிகைக்குக் கருவிகள் உண்டாயிருந்தது அறிவேன். பிருதிவி முதலான தத்துவங்களுக்கும் மும்மலங்களுக்கும் அறிவில்லை என்பதும் கண்டேன். ஆகையால் நானே கர்த்தா.

(குரு) உன் அறிவு ஒழிந்து வேறோர் அறிவும் இல்லையாயின், நீதானே கர்த்தாவுமானால், இங்கெடுநாள் பாசத்தில் இசைவானேன்?

கருவிகளைக் கொண்டு அறியவும், ஒருவர் சொல்ல அறியவும், சுக துக்க வேதனைப்படவும் வேண்டுமோ?

(சீடன்) ஆனால் என்ன? நான் செய்த கன்மம் நான் அனுபவித்தேன் ஆகிறேன்.

(குரு) நீ செய்த கன்மம் நீ அனுபவித்தது எப்படி?

(சீடன்) ஒருவன் செய்த வேளாண்மையை அவன் அனுபவித்தாற்போல ஆம்காண்.

(குரு) வேளாண்மை செய்வான், இன்ன பயிர் செய்தோம் என்றும், இன்ன நாளையிலே உதவும் என்றும் அறிந்து, கொண்டு வந்து அனுபவிக்கக் கண்டோமே?

(சீடன்) கண்டோம்.

(குரு) நீயும் "முன் இன்ன கன்மம் செய்தோம்" என்றும், 'இன்ன தனு எடுப்போம்' என்றும், 'இன்ன நாளையிலே இன்ன போகம் அனுபவிப்போம்' என்றும் அறிவையோ?

(சீடன்) அறியேன்.

(குரு) கன்மந்தான் இன்னாராலே ஆர்ச்சிக்கப்பட்டதல்லவோ தான் என்று அறியுமோ?

(சீடன்) அறியாது.

(குரு) காலந்தான் அறிந்து கூட்டுமோ?

(சீடன்) மாட்டாது.

(குரு) கூட்டிப்புசித்தது உண்டோ?

(சீடன்) உண்டு.

(குரு) ஆகையால் கூட்டும்படிக்குக் கர்த்தா ஒருவர் உண்டாக வேண்டும்.

(சீடன்) கன்மம் சடமாய் இருக்க, என்னை அறியாமல் என்னுடனே அது கூடினது எப்படி?

(குரு) காந்தமும் பசாசமும் ஒரு கையிலே கிடக்கக் காந்தமும் வலித்துக்கொண்டதில்லை; பசாசமும் வலிகொடுத்ததில்லையே?

(சீடன்) இல்லை.

(குரு) அவை இரண்டையும் ஒருவன் முகம் ஒன்றப் பிடித்த போது காந்தமும் வலித்துக்கொண்டது; பசாசமும் வலித்துக் கொடுத்ததே?

(சீடன்) கொடுத்தது.

(குரு) அதுபோல் உன்னையும் கருவி காரணங்களுடன் கூட்டிக் கன்மத்துக்கு ஏதுவாகப் புசிப்பிக்கவும், ஆன்மாவுக்குப் பக்குவம் உண்டான அளவில் அருட்சத்திகளினாலே அந்தக் கன்மத்தைத் தொலைப்பித்தருளவும் ஒரு கர்த்தா உண்டு காண்.

(சீடன்) கன்மத்தைத் தொலைப்பித்தருள்வது எப்படி ?

(குரு) பிருதிவி முதலான தத்துவம் சடமாகையால், அவையிற்றைக் கிரியாசத்தியாலே பிரேரித்து, ஆன்மாவை ஞானசத்தியினாலே எழுப்பி, கன்மத்தை இச்சா சத்தியினாலே தொலைப்பிக்கை காரணமாகத் தொலைப்பித்தருளுவர்.

(சீடன்) ஆனால், நல்வினை தீவினை என்னும் புண்ணிய பாவங்களினாலே வருகிற சுக துக்கங்களைத் தத்துவங்களுடனே கூட்டிப் புசிப்பிக்கிற முறைமை எப்படி?

(குரு) ஒரு விஷயத்தை ஒரு இந்திரியத்தினாலே ஒரு பூதத்தினிடமாக நின்று கண்டு, மனதிகளினாலே பற்றி, கலாதிகளினாலே அறிந்து, மாயையினாலே மயங்கி, பிரகிருதியினாலே அழுந்திப் புசிப்பிக்கப் பண்ணுகையில் ஏறாமல், குறையாமல், உள்ளபடியே இவன் கன்மத்தின் அளவு கண்டு கண்டு, அளந்து கொடுத்துப் புசிப்பிப்பர்.

(சீடன்) அளந்து கொடுப்பது எப்படி?

(குரு) கடலிலே நாழிபோட்டு முகந்தால் நாழி கொடாதது போலக் கொடுப்பர். அப்படி இருக்கப் புசிக்கிற தன்னையும், புசிப்பிக்கிற கர்த்தாவையும், கூடி நிற்கிற தத்துவங்களையும் அறியாமல், நான் செய்தேன் பிறர் செய்தார் என்கிற குற்றத்தாலே, வாராததற்கு ஆசைப்பட்டு, அந்த ஆசை மிகுதியினாலே ஆகாமியமாக ஏறி வரும் கன்மத்துக்கு ஈடாக, மேலும் மேலும்செனனம் உண்டாக்கிப் புசிப்பிப்பர்.

(சீடன்) ஏறிவரும் கன்மம் தொலைகிறது எப்படி?

(குரு) புசிக்கிற தன்னையும், புசிப்பிக்கிற கர்த்தாவையும், கூடி நிற்கிற தத்துவங்களையும் பார்த்து நாம் செய்த கன்மம் அல்லவோ நாம் புசிக்கிறோம். கர்த்தா அவன், அவள், அது முன்னிலையாக அல்லவோ அதை நமக்குக்கூட்டுகிறார்' என்று அறிந்து, வந்த சுக துக்கங்களிலே பிரியாப் பிரியப்படாமல் உள்ளதே புசிப்பு என்றிருந்து, உணர்த்தும் முறைமைக்குத் தானமான எல்லையிலே அருளிலே விரும்பி, அந்த விருப்பத்தின் மிகுதியினாலே, பரவசமாய்த் தனது செயலை அறுதிப்படுத்தி நின்றால் அதுவே சைதன்னியம். அப்போது ஆன்மாவுக்குப் பிராணனாய் நிற்கிற கர்த்தா, நீரும் இரதமும்போல வேறற நின்று, கண்ணும் ஆதித்தனும் போலக் கலந்து நின்று, அறிவிக்கத்தக்க அருளினாலே ஆன்மாவை எடுப்பர். அப்போது நானே கர்த்தா என்ற அகம் பிரமமும் போம். உன்னைத் தெரிந்த போது அந்த அருளைத் தெரியாமல் மறைத்த திரோதாயியையும் போக்கி, கிரியா சத்தியுடனே கூடி முன் பொய்யை மெய் என்று உருசிப்பித்தாற்போல இப்போது சிவமே மெய் என்று அவர் உருசிப்பித்து நிற்பர். பிரபஞ்சமும் பேய்த்தேர் போலப் பொய்யாய்ப் போம்; பேய்த்தேர் போல் இல்லையாய்ப் போறிவே தோன்றும் ஆகையால் ஆன்மா வாராததற்கும் ஆசைப்படாது; அதற்கு ஆகாமியமும் ஏறாது; அது செனனமும் எடாது. அப்படித் தனது செயல் அறுதிப்படுத்தி அருள் அறிவினாலே அறிந்து கொள்வாயாக.

(சீடன்) அப்படியே அறிந்து கொண்டேன்.

(குரு) கர்த்தாவின் செயல் ஒழிந்து தனக்கு ஒரு செயல் இல்லை என்று அறிந்துகொண்ட சுதந்தரவாளியே! இன்னமும் கேள்: 'ஒருவன் ஒருபொருளைப் பேணிவைத்துத் தரவேண்டும்' என்று உன்னிடம் தந்தான். 'அப்படியே செய்கிறேன்' என்று வாங்கி மடியிலே கட்டிக்கொண்டு நித்திரை செய்தாய். அந்தமயக்கத்திலே ஒருவன அதை அபகரித்துக் கொண்டு போனான். கருவிகள் சடமாகையால் அறிவிக்க மாட்டாதே போயின. நீயும தானாக ஒன்றை அறியாதவனகையாலே உனக்கும் தெரியாதே போயிற்று. அறிவிக்கத்தக்க அருளும் உன் கன்மத்துக்கு ஏதுவாகக் கேவலாதீதத்திலே உன்னை விட்டு இளைப்பாற்றிக் கொண்டிருந்துவிட்டது. அவன் வந்து கேட்கும் அளவில் 'இன்னார் எடுத்துப் போனார்கள்' என்றும், 'இன்ன நேரத்திலே போனது' என்றும் சொல்லத் தெரியாமல் மயங்குவதை அறிவையோ? அறியாயோ?

(சீடன்) அறிவேன்.

(குரு) ஆனபடியினாலே நீயும் அறியாய்; கருவிகளும் உன் வசத்தன அல்ல; உன்னையும் கருவி கரணங்களையும் கூட்டிக் கன்மத்துக்கு ஏதுவாகப் புசிப்பிக்கவும், ஆன்மாவுக்குப் பக்குவம் [illegible] அளவில் அருட்சத்தியினாலே அந்தக் கன்மத்தைத் தொலைப்பித்தருளவும், அப்படித் தொலைப்பித்தருளின அருளின் மேலீட்டினாலே, அதி தீவிரதர சத்தினிபாதமும் மலபரிபாகமும் மிகுதி உண்டான அளவில், அருளே திருமேனியாக வந்து, பக்குவம் அறிந்து அநுக்கிரகத்தைப் பண்ணி, சாயுச்சியத்தைக் கொடுத்தருளவும் செய்வது கர்த்தாவே அல்லாமல் வேறில்லை என்பதைத் தீர அறிந்துகொள்வாயாக.

(சீடன்) அப்படி அறிகிறதே அல்லாமல் தெரிசனம் ஆகாதோ?

(குரு) முன் உன் உண்மை தெரிசனம் பண்ணுவித்த பொழுது நானே கர்த்தா என்றாய்; நீ கர்த்தா அல்ல என்ன அதற்குப் பொருந்தியும், கருவிகள் உன் வசத்தன அல்ல என்ன அதற்குப் பொருந்தி

யும் வந்ததனாலே, சைதன்னிய தெரிசனம் பண்ணுவித்தோமே! அப்போது உன் அறிவிலே ஓர் அறிவு பிரகாசித்ததே?

(சீடன்) பிரகாசித்தது.

(குரு) அது மலரும் பக்குவத்தில் மணம் பிரகாசித்தாற்போல, உன்னையும் தெரிவித்து உனக்கு உடம்பாய் நிற்கும். அதேது? என்கிறாயோ! அது சிவஞானம்; அந்தச் சிவஞான தெரிசனந்தான் தெரிந்ததோ? இல்லையோ ?

(சீடன்) தெரிந்தது.

இப்படித் தெரிசிப்பித்து வைத்துப் பின்பு, இவனை அனுபவங் கேட்கும் அளவில் சீடன் சொல்லுவான் :—

(சீடன்) இப்படி அகண்டிதமாகப் பிரகாசித்த சிவஞானம் ஒழிந்து என் அறிவு கண்டிலேன்.

(குரு) அது—அருட்கேவலம். ஆதித்தப் பிரகாசதத்திலே பிரகாசியாதிருக்கிற நட்சத்திரம்போல, உன்னிடதத்திலே பிரகாசித்த ஞானத்தின் மிகுதியினாலே, நின் அறிவு தோன்றாமல் நின்றது. ஆகையால், தன்னைக் கண்டபோது அருளைக் காணாமலும், அருளைக் கண்டபோது தன்னைக் காணாமலும் நின்றாய். இனி, அருளினாலே தன்னையும் கண்டு, அருளினாலே அருளையும் கண்டு, தன்வசம் அழிந்து, அருள் வசமாய் நின்று, அருளின் நடுவே அருட்பூரணதத்தில் நேரே அடங்கி, அருள்வழி நடப்பாயாக.

(சீடன்) இப்படித் தன்வசம் அழிந்து அருள்வழி நின்றேன். இது முற்பட்ட அவதாரங்கள் போல இன்றியே, அகண்ட பரிபூரணமாக நிறைந்து இருந்தது.

(குரு) அப்படி நிறைந்திருந்தது பராசத்தி காண். முன் சொன்ன இச்சாசத்தி, ஞானசத்தி, கிரியாசத்தி ஆகிய மூன்று

அருட்சத்திகளினாலே சிவனுக்குத் திருமேனிகள் ஆக்கிய இந்தப் பராசத்தியைக் கண்பெற்றோர் கண்ட கதிரொளிபோலே கண்டு, விண் பற்றாய் நிற்பாயாக.

(சீடன்) நிலத்தின்மேலே அப்படிக் கண்டு நின்றேன்.

(குரு) அது பரைதெரிசனம். அந்தத் தெரிசனத்தில், கண்ணொளியும் கதிரொளியும் கூடியபோது கண்ணொளி சென்று கதிரொளியைக் கூடினதும் அல்ல, கதிர் ஒளி வந்து கண்ணொளியைக் கூடினதும் அல்ல. அதைப்போலவும், ஆகாயத்திலே விகற்பம் இல்லாமல் வாயு தம்பித்தாற் போலவும், அந்தப் பரைநிறைவும் நீயும் பரிபூரணமாக ஒன்று படுதலே பராவியாத்தம். அந்த வியாத்தத்திலே நீர் உறங்கும் தன்மைபோல நின்றால், அது பரையோகம். அந்தப் பரையோகத்தில் கூடுகிறதே சுத்தாவத்தை. முன்சொன்ன பரையோகப் போகத்திலே அழுந்தினால் அது பரையுணர்போகம். அதன் போதத்திலே அழுந்தி, முன்சொன்ன கருத்தும் விடாமல் அப்பூரண மூன்று அவதரங்களிலேயும் நீங்காமல் நீங்காமல் நிற்கவே சிவ கரணத்தில் ஒன்றுபடும். அப்போது எத்திசையும் ஒன்றும் இறையறிவிலே கலந்தால் அது சுத்த பரைபோகம். அந்த யோக போக நிலையைத் தெரிந்தால் அதற்கு முத்தி சாக்கிரம். என்றும் சுத்த பரைசாக்கிரம் என்றும் பேராம். சிவ கரணத்தில சித்தத்தைத் தெளியப் பார்.

## பரை தரிசனம் முதலியன.

(சீடன்) அப்படிப் பார்த்தேன்.

(குரு) அதிலே அவிழ நிற்பாய்.

(சீடன்) அவிழ நின்றேன், அதீதம் பிறந்தது.

(குரு) அந்த அதீதத்தையும், அந்தச் சாக்கிரத்தையும் பாராமல் நிற்றல் பரையில் அதீதமாம்.

(சீடன்) அப்படிப் பாராமல் நின்றேன். அந்தப் பரையதீதத்திலே ஆராமை மேற்கொண்ட அறிவும் அகண்டம் ஆனது.

(குரு) அதிலேயும் அவிழ நின்றால், அந்தப்பரைக்கு முதலாகிய நேயம் உண்டு காண். அகண்டபரிபூரணமாக நிறைந்து, நிறைந்து, நிறைந்து நின்று அதிலே உண்டாகிய போகங்கள் இனிமேல் இல்லை என்பதாக முற்றி, இதுவே போதும் என்றிருக்க, இன்னம் ஒரு நேயம் உண்டாய்ப் பிரயோசனம் எத்தும், அது பஞ்சசத்திகளும தானாக நிற்கச் செய்தேயும தன் உணமை குன்றாமல் நின்ற சுத்த பராசத்தி காண்.

(சீடன்) ஆனால் அந்தச் சத்தி தானே அமையாதோ ?

(குரு) அமையாது.

(சீடன்) ஆனால் நேயம் கூடுவது எப்படி ?

(குரு) உன்னைத் தெரியாமல் மறைத்த ஆணவமலம் போமளவும் உன்னை அறியாமலிருந்தாற் போலவும் உன்னை அறிந்த அளவில் அருளைத் தெரியாமல் மறைத்த திரோதாயி போன அளவில் அருள் தெரிந்தாற் போலவும், 'இதுவே போதும' என்று நிற்கிறோம் என்கிற கோட்பாடு போன அளவில் நேயம் தோன்றும். நீயும் அந்தக்கோட்பாடு குலைந்து மைய நின்று பதைப்பற்று இருப்பாயாக.

(சீடன்) அப்படிப் பதைப்பற்று இருந்தேன். அது பிரகாச சொரூபமாக அளவிறந்த பேரொளி உள்ளும் புறம்பும் பிரளய சமுத்திரமபோலவே கவிந்தது. எங்ஙனேற்போலத் திகைத்துத் திரும்பினேன், அதேது ?

(குரு) அவ்விடம் சிவ (சுகம்) பூமி, அந்தச் சுகம், மணியினிடத்திலே பிரகாசம் மலர்ந்தாற்போலச் சிவத்திலே பிறந்து பிரகாசித்தது. அது காட்சியிற் கலந்து முந்தின சுகமெல்லாம் இந்தச்சுகம் ஆக்கியும் தன் அகம் எல்லாம் ஆனந்தம் ஆக்கியும் நிற்கும். முன் நேயம் கூடும் என்றது இது தான். அதை இன்ப சத்தி என்று கொள்வாயாக.

(சீடன்) இதுவும் ஒரு சத்தியானால் முத்தி எங்கே?

(குரு) அந்த ஆனந்த மேலீட்டினாலே பரவசமாய் ஆனந்தாதீதமாகக் கர்த்தாவே கொண்டருளுவர்; அப்போது பரிசனவேதி பரிசித்த இரும்பு சொர்னமயம் ஆனாற் போல, எல்லாம் பொருளாக்கிக்கொள்ளுவர்.

(சீடன்) அதிலே நிலைக்கவொட்டாமல் முன்பு போல தேகாதிப் பிரபஞ்சம் தோன்றி, வாதனைப் பட்டவைகள் எல்லாம் முகுளிதமாவதும் விட்டுநீங்குவதுமாக ஓரோர் சமயம் உண்டாகின்றதே! அதிலே நிலைக்க வேண்டுமே! அதற்கு என்ன செய்கிறது?

(குரு) இந்திரியங்களும் சேவித்து, முன் போலே எல்லாம் முகுளிதமானால், அதனை நிரூபித்துப் பார்ப்பாயாக.

(சீடன்) அப்படி நிரூபித்துப் பார்த்தேன். முன் பெத்தனாகத் திரிந்தபோது ஒருவன் அட்டகுல பர்வதங்களையும், திக்கயங்களையும், சப்த சமுத்திரங்களையும் அழைப்பித்தேன் என்றான். அவைய மெய் போலத் தோன்ற எனக்கு ஒரு பயம் உண்டாயது, அவைய எல்லாம் பொய் என்றான். அவை பொய்யாய்த் தோன்றின சடுதியும் மறைந்த சடுதியும் எனக்கோர் ஆச்சரியமாயிருக்க, முன்னமும் அப்படித் தோற்றுவிக்க வேண்டும் என்றேன். மீண்டும் அப்படித் தோற்றுவித்தான். இப்போது எனக்கு மெய்போலத் தோற்றுகிற தேகாதிப்பிரபஞ்சமும் அப்படி இருக்கிறது.

(குரு) அதெப்படி இருக்கிறது?

(சீடன்) அந்த இந்திர சாலம், பயந்த படியே மறைந்ததே; பின்னும் இச்சைக்கு ஈடாக அப்படியே தோன்றியது. தேகாதிப் பிரபஞ்சம் பொய்யென்று அறிந்து விட்டுப்போட்ட எனக்கு, அதிலே இச்சை ஏன் வந்தது?

(குரு) அது பழகிப் போந்த வாதனை போதந்தானே, பிராரத்த சேடம் அனுபோகக்காரணமாக விசனம் தோன்றியது.

(சீடன்) இல்லை என்று போனது உண்டு என்று வந்தால் தீரு கிறதில்லையே?

(குரு) இந்திர சாலம் போலப் பிரபஞ்சம் பொய் என்று அறிந் தாயோ? இல்லையோ?

(சீடன்) அறிந்தேன்.

(குரு) பெருங்காயம் வாங்கின கடத்தில் வாசனை ஒழிந்து அதிலே காரியம் இல்லாதாற்போல, வாதனை போதத்தின் காரியமும் பொய் என்று அறிந்தாயோ? இல்லையோ?

(சீடன்) அறிந்தேன்.

(குரு) இனி நீயும் உன்னாலே அறிகிறதை விட்டு, அருள் அறிவால் அறிந்து, உன்வசத்தழிந்து அருள் வசத்தாய் நின்று, அருளே தாரகமாய் அருளின் நடுவே அருட் பூரணத்தினாலே அடங்கி நின்றால் இச்சையும் வாராது; தோற்றவும் செய்யாது.

(சீடன்) பிராரத்த சேடம் தீருகிறது எப்போது?

(குரு) அது சரீரத்தளவும் தீருகிறதில்லை.

(சீடன்) ஆனால், அருட்பூரணத்திலே அடங்கியும இருக்க வேண்டும், சரீரத்தளவும் அனுபவிக்கவும் வேண்டும் என்றால் எப்படி அனுபவிக்கிறது?

(குரு) சத்தாதி விஷயங்களை அறிகிறாயே. அந்த உபாதிகளை அறிகிறது எது?

(சீடன்) சட்சு முதலாகிய இந்திரியங்கள்.

(குரு) அந்த இந்திரியங்களுடன் கூடி அறிகிறது எது?

(சீடன்) ஆன்மா.

(குரு) அந்த ஆன்மாவிற்குப் பிராணனாய் நின்று உள்ளும் புறம் புமாய் நின்று உணர்த்துகிறது யாது?

(சீடன்) தம்பிரான் அருள்.

(குரு) ஆகையால் இந்தச் சடம் பிரபஞ்சம் ஆமே?

(சீடன்) ஆம்.

(குரு) ஆன்மா தானாக ஒன்றை அறியாததாமே?

(சீடன்) அறியாததாம்.

(குரு) அருளே நின்று உள்ளும் புறமும் உணர்த்திச் சீவிப் பிக்க வேண்டுமே?

(சீடன்) வேண்டும்.

(குரு) ஆகையால் யாதொரு தொழிலைச் செய்யினும், இதுதனது தொழில் அல்ல, இது தம்பிரானார் திருத்தொழில் எனச் செய்து, அதுவாகக் கண்டு, செய்ததும் செய்யாததும் தான் அல்ல என்று இசையவே, அந்த அனுபவமும் சிவானுபவமாம். இவ்வாறு பூர ணத்திலே பொருந்தி நின்று செய்யவும் அப்போது வாதனை கூடி னால் மீண்டும் நிரூபித்துப் பார்த்து, முயற்கோடு போலவும் ஆகா யப்பூப்போலவும் நிலையில்லாதவையிற்றிலே நினைவற்று, பணி யற்று, நிட்டையிலே அழுந்தி, அவிழ நின்று, பொருளிலே வசப் பட்டு நிற்பாயாக.

இன்னம் ஓர் உபாயம் கூறுகிறோம் கேள்:—சுரர், நரர், மிருக, தாவர, பட்சி யாதிகளாகத் தோன்றுகிற தேகங்களைப் பாரா மல் சீவிக்கிற தத்துவங்களைப் பார். சத்தாதி மறையவே பிரபஞ்ச மும் மறையும். போகத்தைப் பார்க்கவே இந்திரியங்கள் மறையும். ஆன்மபோதத்தைப் பாராமல் அதன்மேல் வந்த அருள் மேலீடு பார்த்தால் பாசஞானமும், பசுஞானமும் அகலும். நிட்டை இரிந் தபோது அருள்வழியே சென்று பரையதீதத்திலே அழுந்தி அவிழ நின்றால் சுகம் விளையும். சுகப்பேரின்பத்தில் ஆனந்த மேலீடு தோன்றும்; அப்போது ஆனந்தாதீதமாகக் கர்த்தாவே கூட்டுவார்.

(சீடன்) அவ்விடம் எப்படி இருக்கும்?

(குரு) அது நீர்போல் அழுந்தி, அந்த நீர் நிழற்போலே கரந்து, பார் போல் தரிப்பும் கொடுத்து, பேதம் அபேதம் பேதாபேதமும கடந்து, ஆன்மாவினுடைய சிற்றறிவைப் பேரறிவு ஆக்கினாற்போல, அதன் சிற்றின்பத்தையும் பேரின்பமாக்கி, அண்டத்தை மறைத்து அகண்டம் மேலிட்டாற்போலவும், மணத்தின் மேல் மணம் பிறந்தாற் போலவும், சிவமணம் மேலிட்டுக் கண்ட இடம் எல்லாம் ஆனந்தக்கடலாய், மொண்டு கொளலாய் நிறைந்த முத்தியாய் இருக்கும். ஆனந்தவெள்ளம் உள் அடங்காவகை கரை புரண்டு நிற்குமாகையினாலே திரும்ப ஒட்டாது. ஒளியிலே இருள் ஏறுதாற் போலப் பாசம் தாக்காது. உரையற்று, உணர்வற்று உள்ளும் புறமும் ஒன்றாய், ஆனந்தாதீதத்திலே அழியாத முத்தியையும் பெற்றிருப்பாயாக. இது சன்மார்க்கமான ஞான மார்க்கம். இப்படி நின்றால் பராவு சிவன் என்றும், பராயானந்தி என்றும் பெயராம்.

(சீடன்) இப்படி என்னாலும், என்போல்வாராலும் வேதாகமம் முதலான பொருள்களாலும் அறியப் படாத பொருளே அடியேன் பொருட்டாகத் திருப்படை வீடு சீகாழி என்றும, நாமம் சிற்றம்பல நாடி நாயனார் என்றும், திருமேனி மானிடம் என்றும், இவ்வாறாக எழுந்தருள வேண்டுமோ? தன்மையில் உணர்த்தினால் ஆகாதோ?

(குரு) அது விஞ்ஞானகலருக்கும், பிரளயாகலருக்கும் உள் நின்று உணர்த்துவது. நீ சகலன் ஆகையால் இப்படி வேண்டிற்று எனக்கொள்க.

## துகளறு போதக் கட்டளை முற்றிற்று.

திருச்சிற்றம்பலம். திருச்சிற்றம்பலம். திருச்சிற்றம்பலம்.

ஸ்ரீ மெய்கண்ட தேவநாயனார் மிளிர்கழல் வெல்க.
ஸ்ரீ சிற்றம்பலநாடிகள் திருவடி வாழ்க.
ஸ்ரீ மாதவச் சிவஞான யோகிகள மலரடி வாழ்க.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# 2. ஞானாமிர்தக் கட்டளை.

திருவாவடுதுறை ஆதீனம்.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# 2. ஞானமிர்தக் கட்டளை.

## முதலாவது – பதி இலக்கணம்.

பதி பசு பாசங்களுக்கு இலக்கணம் கூறுவாம்.

பசுக்கள் சுதந்திரம் இல்லாதவைகள் ஆதலாலும், பாசங்கள் சடமாய் இருக்கையினாலும், பதி சுதந்திர ஞானம் உடைமையாலும் முதலில் பதிக்கும், இரண்டாவது பசுக்களுக்கும், மூன்றாவது பாசங்களுக்கும் இலக்கணம் கூறத்தொடங்கி முதலில் பதி இலக்கணம் கூறப்படுகின்றது.

பதி சொரூபம் என்றும் தடத்தம் என்றும் இருவகைப்படும். சொரூபமாவது—முதல் நடு இறுதி இல்லாததாய், தூல சூக்கும சூனியருபம் இல்லாததாய், குணம்குறி இல்லாததாய், ஒன்றாய், அசலமாய், அகண்டாகார சச்சிதானந்த பரிபூரண சோதியாய், பஞ்சகிருத்தியத்திற்கு அதீதப்பட்டு நின்மலவடிவாய் விளங்குவது.

இனி, தடத்த இலக்கணமாவது—சிருட்டி, திதி, சங்காரம், திரோபவம், அநுக்கிரகம் என்னும் பஞ்சகிருத்தியங்களைப்பண்ணுவதாம்.

பதியாகிய சிவத்தை அக்கினிக்கு உஷ்ணம் போலப் பிரிவற்றிருக்கும் சத்தியானது நித்தமாய், ஒன்றாய், இச்சா ஞானக் கிரியா சொரூபமாய் இருக்கும். இது காரிய பேதத்தினாலே பரை முதலாக அநேக பேதப்படும். சத்தியுடைய பேதத்தினாலே சிவனும் சாந்தர் உத்தியுத்தர் பிரவிருத்தர் என மூவகையாய்ப் பேதப்படுவர்.

சத்தர் என்பவர் காரியத்தைப் பண்ண உத்தியோகியாமல் காரியம்பண்ணத் தொடங்காமல் இருக்கிறசத்திமாத்திரமாயிருக்கிறவர். இவர் சத்திகலை அற்றிருக்கிறவர் ஆகையால் நிஷ்களராய் இருப்பவர். இவருக்கு ஞானமாத்திரமே திருமேனி. இவருக்கு இலயர் என்றும், சத்தர் என்றும் பெயர்.

இனி, உத்தியுத்தர் ஆவார் காரியம் பண்ண உத்தியோகிக்கிற சத்தியுடையவர். காரியம்பண்ண உத்தியோகிக்கிறபொழுது ஞானக்கிரியா சத்திகள் ஒப்பில் உண்டானவர். பரை ஆதி இச்சை ஞானக்கிரியை என்னும் பஞ்ச சத்திகள் சுத்தமாயையிலே பதிந்தபொழுது உண்டாகிய ஈசானாதி பஞ்சப் பிரமங்களையே திருமேனியாக உடையவர். பாச கலைகளுடன் கூடியிருத்தலால் சகளமும், சத்திகலைகளுடன் கூடியிருத்தலால் நிஷ்களமும் உடைமையால் சகள நிஷ்களராம். இவருக்குச் சதாசிவர் என்றும் போகர் என்றும் பெயர்.

இனி, பிரவிருத்தர் ஆவார் காரியங்களைப் பண்ணத் தொடங்கிய சத்தியை யுடையவர். காரியம் பண்ணுகிற வேளையில் கிரியை அதிகமாக வேண்டும். ஆதலால், ஞானசத்தி கொஞ்சமும் கிரியா சத்தி அதிகமுமாக உடையவர். இவர் பாச கலைகளுடனே கூடியிருக்கையால் சகளராம். இவருக்கு மகேசுரர் என்றும் அதிகாரர் என்றும் பெயர்.

இந்தப் பதி சிவம், சத்தி, நாதம், விந்து, சதாசிவன், மகேசுரன், உருத்திரன், விட்டுணு, பிரமா என்னும் நிஷ்களம், சகள நிஷ்களம், சகளமாக ஒன்பது பேதப்படும். இவர்களில் சிவத்திற்குச் சத்தியும், நாதத்திற்கு விந்துவும், இவ்விரண்டும் ஒழிந்த மூர்த்திகள் ஐவர்க்கும் முறையே மனோன்மனி என்றும், மகேசை என்றும், உமை என்றும், இலக்குமி என்றும், சரசுவதி என்றும் சத்திபேதம் ஐவகைப்படும். காரிய பேதத்தினலே சத்தி சிவங்களும் பேதமயின என்க. பதிக்கு இந்தச் சிற்சத்தியே தேகம் கரணம் இடம் எல்லாம் என அறிக.

இப்படிக் கர்த்தா உண்டென்பதற்குப் பிரமாணமாவது :—

ஆண் பெண் அலி முதலான தேகாதிப் பிரபஞ்சம் காரியம் ஆதலால் கடாதிகளைப் போலக் கர்த்தாவை உடையன.

மாயை சடமாய் இருத்தலானும் ஆன்மாக்கள் தடைப்பட்ட ஞானக் கிரியை உடைமையால் சுதந்திர ஈனமுடையராய் இருத்தலானும் இவ்விரண்டையும் தொழிற்படுத்தும் கர்த்தா உண்டு என்பது புலப்படும்.

ஆன்மாக்கள் மலத்தையுடைமையினாலும், கர்த்தா நிர்மலர் ஆனதாலும், ஆன்மாக்களுக்கு வேறாகியும் எள்ளுக்குள் எண்ணெய் போலப் பிரிவற்று இரண்டற நின்றும் கன்மத்துக்கு ஈடாகத்தனது 'சமவாய சத்தி'யினாலே சுத்தாசுத்த மாயைகளைச் சேர்த்துத் தனுகரணாதிகளை உண்டாக்குவர். சமவாயம்—விட்டுப்பிரியாமை.

ஆதலால், இவ்வாறு கர்த்தா ஆனவர் குயவனைப்போலச் சரீரம் முதலானவைகளை உடையவராகவேண்டும் எனில், அற்றன்று : காலம்போல அரூபியாய் இருந்து சிருட்டியாதிகளைப் பண்ணுதல் கூடும். அவர் தேகத்தையுடையவராகில் அவருடைய தேகத்தை உண்டுபண்ண வேறே ஒரு கர்த்தா வேண்டும் என்ற அவத்தை வரும். ஆதலால், தேகாதி சகல உபாதியும் அற்றவரே கர்த்தாவாம். தேகாதிகளையுடைய அனந்தேசுரர் (மகேசுரர் எனவும் பாடமுண்டு) முதலானவர்கள் அபரசர கர்த்தாக்களாம்.

அவ்வாறு அன்றி, சூரியன் நிர்விகாரியாய் இருந்து அவன் சந்நிதானத்தில் தாமரை மொட்டு அலரவும், ஆம்பல் குவியவும், சேறு இறுகவும், வெண்ணெய் இளகவும் பண்ணுமாறுபோல, கர்த்தா காரியத்திலே உன்முகமாய் இருக்கிற சத்தியுடனே கூடியிருப்பவர் ஆதலால் அவர் சந்நிதி மாத்திரத்திலே சிருட்டியாதிகளைப் பண்ணுவர் என்க.

இந்தக் கர்த்தா சத்தராய் இருந்து பண்ணும் கிருத்தியமாவது தீவிரதர சத்திநி பாதத்தை உடையவர்களை அநுக்கிரகித்துப் பர முத்தியில் விடுவதும், தீவிர சத்திநிபாதத்தை உடையவர்களை அபர முத்தித்தானத்தில் வைப்பதும் ஆம்.

இவர் சுத்தமாயையைத் தனது சத்தியால் கலக்கி சத்தரூபம் ஆகிய நாதவிந்துக்களையும், அர்த்தரூபம் ஆகிய நாதம் விந்து என்னும் பெயரையுடைய சிவதத்துவம் சத்திதத்துவங்களையும், இந்தத் தத்து வங்களிலே புவனங்களையும், இந்தப் புவனங்களிலே இருக்கிறவர் களுக்குத் தனுகரணாதிகளையும், விந்துதத்துவத்திலே நின்றும் சதா சிவ தத்துவத்தையும் உண்டாக்கி, அந்தச் சதாசிவ தத்துவத்துக்குச் சதாசிவரை நாயகராகப் பண்ணி அவரை வேறறக்கூடி நின்று சிருட்டியாதிகளைப் பண்ணுவர் என்க.

இனி, உத்யுத்தராகிய சதாசிவராய் இருந்து பண்ணும் கிருத் தியமாவது:— சதாகாலமும் அநுக்கிரகித்துயிருந்திருக்கிற விஞ் ஞானகலரிலே தீவிரதர சத்திநிபாதம் உடையவர்களை அநுக்கிர கித்துப் பரமுத்தியில் விடுவதும்; தீவிர சத்திநிபாதம் உடையவர் களை அநுக்கிரகித்து மலபரிபாகத்துக்கு ஈடாகச்சிவதத்துவம் முத லிய பஞ்ச தத்துவங்களிலும் ஞானக்கிரியைகளை விளக்கிப் பரமுத்த ராகவும், சிவசமனாகவும், அணுசதாசிவர்களாகவும், வித்தியேசுரர் களாகவும், உருத்திரர்களாகவும் வைப்பதும்; நாதரூபம் ஆகிய அந்தப் பரஞானத்தை ஈசானாதி ஐந்து முகங்களால் வேதங்களாக வும், பிரணவர் முதலியோருக்குக் காமிகாதி ஆகமங்களாகவும் பிரித்து அநுக்கிரகிப்பதும்: சாதாக்கிய தத்துவத்திலே நின்று ஈசு வர தத்துவத்தையும், அதிலே புவனங்களையும். அந்தப் புவனநாயக ராகிய அனந்தர் முதலான அட்ட வித்தியேசுரர்களுக்குத் தனு கரணாதிகளை உண்டாக்குவதும், இந்த ஈசுவரதத்துவத்துக்கு நாயக ராக மகேசுவரரைப்பண்ணுவதும், இந்தத் தத்துவத்திலே நின்றும் சுத்தவித்தியா தத்துவத்தை உண்டாக்குவதும், சுத்த வித்தையிலே இருக்கும் சத்தகோடி மகாமந்திரர்களுக்குத் தனுகரணாதிகளை உண் டாக்குவதும் ஆம்.

இனி, பிரவிருத்தராக இருந்து பண்ணும் கிருத்தியமாவது:— பிரளயாகலரிலே தீவிரதர சத்திநிபாதத்தை உடையவர்களை அநுக்ரகித்துப் பரமுத்தி அடையப்பண்ணுவதும், தீவிரசத்திநிபாதம் உடையவர்களைச் சகலகன்மங்களையும் போக்கி அதிகாரமலம் மாத்திரமாக நிறுத்தி உருத்திரராக, புவனேசுவரர்களாகப்பண்ணுவதும் அசுத்தமாயையைக் கலக்கி மாயை, காலம், நியதி, கலை என்னும் தத்துவங்களையும் உண்டாக்குவதும், இவைகளிலே புவனங்களை உண்டாக்குவதும், இந்த நான்கு தத்துவங்களிலே இருக்கிறவர்களுக்குத் தனுகரணாதிகளை உண்டாக்குவதும், சீகண்டபரமேசுவரனை அதிட்டித்து நின்று கலையிலே பிரகிருதியையும், வித்தையையும், அராகத்தையும் உண்டாக்குவதும், காலாதிகளின் கூட்டத்திலே புருடதத்துவத்தை உண்டாக்குவதும் பிரகிருதியைக்கலக்கிக் குணங்களைப் பிரிப்பதும், தம்முடைய வலப்பாகம் இடப்பாகம் மார்பு என்ற அங்கங்களிலே உண்டான பிரமவிட்டுணு நீலருத்திரன் என்னும் மும்மூர்த்திகளையும் சீகண்ட பரமேசுரனால் நாளடைவிலே இராசத சாத்துவிக தாமதங்களால் சிருட்டிப்பித்து, குணம் முதலாகப் பிருதிவி ஈறான இருபத்துநான்கு தத்துவங்களில் சிருட்டி திதி சங்காரம் பண்ணுவதும் ஆம்.

இனி, கர்த்தாவானவர சுத்தாத்துவாவுக்குச் சத்தரும் உத்யுத்தரும், அசுத்தாத்துவாவுக்கு அநந்தேசுரர் ஆகிய பிரவிருத்தருமாக வருவார் என அறிக.

முதலாவது-பதி இலக்கணம் முற்றிற்று.

## இரண்டாவது—பசு இலக்கணம்

ஆன்மா இல்லை என்று சிலர் சொல்லுகின்றமையால் அதை உண்டு என்று நிரூபிக்கப் படுகின்றது.

அஃதாவது சூனியம் என்பது இன்றி, என்னுடைய தேகம் என்று சொல்லுவதும் இன்றி, இந்திரியங்கள் ஒழிந்திருக்கிற சொப்பன அவத்தையினுலும் அறிகையால் இந்திரியங்களும் அல்லவாய்ச் சுழுத்தி துரியம் துரியாதீதங்களிலே அந்தக் கரணங்களும் பிராண வாயுவும் அற்றிருக்கையால் அந்தக் கரணங்களுக்கும், பிராணவாயுவுக்கும் அந்நியமாய், விழித்தபோது முன்பண்ணின காரியக் குறைகளைப் பண்ணவும் அறியவும் செய்கையால் கணிகனும் அல்லாமல், தேகத்திற்கு அப்புறத்திலே இருக்கின்ற பதார்த்தத்தைக் கிரகிக்கையால் அணுபரிமாணனும் மத்தியபரிமாணனும் அல்லாமல், தானே ஒன்றையும் அறியமாட்டாமல் இருக்கையால் சுதந்திரனும் அல்லாமல், சுகதுக்கங்களால் பல வகைப்பட்டிருக்கையால் ஒருவனும் அல்லாமல், சுகதுக்க பலத்தைப் புசிக்கையால் கர்த்தாவும் அல்லாமல், நித்தியனாய் வியாபகனாய் அசுதந்திரனாய் அநேகனுமாய் அகர்த்தாவாய் மலத்தினாலே தடைப்பட்ட ஞான சொரூபியாய் இருக்கிறவன் என அறிக.

இந்த ஆன்மா அந்தக் கரணங்களுக்கு அந்நியனாய் இருந்தாலும் இராசாவும் மந்திரியும் கூடியிருக்குமாறு போல அந்தக்கரணங்களுடன் விடய போக நிமித்தம் கூடிக்கொண்டிருப்பன்; மலத்தால் தடைப்பட்ட ஞான சொரூபி யாகையால் ஐந்தவத்தையைப் பொருந்தியிருப்பன். இவ்வாறு ஒரு ஆன்மா உண்டு என்பதற்குப் பிரமாணம்: தொழிலைப் பொருந்தி யிருக்கும் தேகாதிகள் சடம் ஆகையால் கடாதிகளைப் போலத் தானே சேட்டிக்க மாட்டா; இவற்றைச் சேட்டிக்கிறவன் எவனோ? அவனே ஆன்மா என்பதாம்.

இனி, ஆன்மாக்களுக்குக் கேவலம், சகலம், சுத்தம் என ஆணவம் மாயை சிவசத்தியால் மூன்றவத்தை வரும்

இவற்றுள், கேவலாவத்தையாவது :— தேகாதிகள் ஒன்றும் அற்று, குணம் அற்று, தொழில் அற்று, போகம் அற்று, கர்த்தா ஆகை அற்று, மைக்குள் மணிபோல ஆணவமலத்தினாலே மூடப்பட்டு ஓர் அறிவும் அற்று வியாபியாய் இருக்கும் அவதாம் என அறிக.

சகலாவத்தையாவது:— பஞ்சகோச பெத்தனாய் அதனாலே பரிச்சின்னன் ஆகி, கிஞ்சிக்ஞனாய், அநாதி கன்மத்துக்கு ஈடாய், அநேக யோனிகளிலும் சஞ்சரித்து விடயங்களைப் புசிக்கும் அவதாரம் என அறிக.

சுத்தாவத்தையாவது :— இருவினையொப்பும் மலபரிபாகமும் சத்திநிபாதமும் வந்த காலத்து, சரியை கிரியை யோக ஞான பாதங்களை உணர்ந்த குருகடாட்சத்தினாலே மும்மலங்களையும் நீங்கிச் சச்சிதானந்த சிவமாக விளங்கும் அவதாரம் என அறிக.

இனி, இந்த ஆன்மாக்கள் அதமரான சகலர், மத்திமரான பிரளயாகலர், உத்தமரான விஞ்ஞானகலர் என மூவகைப்படுவார்கள். இவருட் சகலர் ஆவார்:— ஞானக் கிரியைகளைத் தடுக்கும் ஆணவமலத்தையும், அது சிறிது நீங்குதல் நிமித்தமாக மாயாகாரியம் ஆகிய கலாதிகளையும், போகத்தின் பொருட்டுக் கன்மமும் ஆகிய மும்மலத்தையும் உடையவராக இருப்பார்கள்.

பிரளயாகலர் ஆவார் :— ஞானக் கிரியைகளைத் தடுக்கும் ஆணவமலத்தையுடையவர்களாய்க் கன்ம பரிபாகத்தினாலே கலாதிகளைத் தங்கள் வசம் பண்ணிக்கொண்டு ஈசுராத்துவாவில் போகத்திற்கு ஏதுவான கன்மத்தையும் உடையவர்களாய் இவ்வாறு ஆணவம் கன்மம் என்று இருமலபந்தராய் இருக்கிறவர்கள்.

விஞ்ஞானகலர் ஆவார் :—ஆணவ மலத்தினாலே தடைப்பட்ட ஞானக்கிரியை உடையவர்களாதலால் இல்லை என்பதற்கொத்த ஞானக்கிரியை உடையவர்களாய் ஒரு மலத்தராய் இருக்கிறவர்கள்.

இந்த மூவகை ஆன்மாக்களும் மாயையினுடைய வடிவு என்னும் ஆன்மதத்துவம் இருபத்து நான்கிலும், நடு என்னும் வித்தியா தத்துவம் ஏழினும், முடிவிலும் இருப்பார்கள். விஞ்ஞான கேவலா நுக்கிரகம் பெற்றதற்குப்பின் சிவதத்துவங்களிலே இருப்பார்கள் என அறிக.

இரண்டாவது — பசு இலக்கணம் முற்றிற்று.

## மூன்றுவது—பாச இலக்கணம்

பாசம் ஆணவம், திரோதாயி, சுத்தமாயை, அசுத்தமாயை, கன்மம் என ஐந்தாம்.

இவற்றுள், 1. ஆணவமலமாவது :—

நித்தியமாய், ஒன்றுய், விபுவாய், அநாதியாய், ஆன்மாக்கள் தோறும் ஞானத்தைத் தடுக்கும் எண்ணிறந்த சத்திகளையுடையதாய், செம்பிற்குக் களிம்புபோலச் சகசமாய் இருக்கும். இதற்குப் பரியாயநாமமாவன-பசுநீகாரம், பசுத்துவம், மலம், அஞ்சனம், அவிததை, ஆவிருதம், மூலமலம், மிருத்தியு, தமசு, செனமபீசம், ஆவரணம், அசுத்தி, மோகம், சகசமலம் எனப் பலவாம்.

இவ்வாறுகிய ஆணவமலம் உண்டு என்பதற்குப் பிரமாணம்: ஆன்மா ஒன்றினுலே ஆவரிக்கப்பட்ட சர்வஞ்ஞன் ஆகவேண்டும்; அற்ப அறிவனுகக் காண்கையால் அற்ப அறிவுள்ளவன் மலாகிதனும் அல்ல. சிவனைப்போல ஆன்மாவுக்கு அற்ப அறிவும் இயல்பு அல்ல. எல்லாருக்கும் ஒருபடித்தன்றுய் ஞானம் இருக்கையாலும், மோட்சத்திலே சர்வஞ்ஞனுகக் கேட்கப்படுகையாலும இவை அன்றியும், அசுசியாய்த் துககமயமாய் இருக்கிற விடய போகங்களிலே ஆசை வருவதும் ஆணவமலத்தினுலேயே என்பது பிரமாணமாம்.

இனி, 2. திரோதாயியாவது:—

ஆணவம் சடம் ஆகையால் இந்த ஆணவசத்திகளைச்சேட்டிப்பது ஞான சொரூபியாகிய ஆதிசத்தியே ஆம். இந்த ஆதிசத்தியானது பாச கன்மத்துக்குப்பின் சொல்லுகையால் இதையும் பாசம் என்று உபசாரமாகச் சொல்லப்படும்.

இனி, 3. சுத்தமாயையாவது :—

நித்தியமாய், ஒன்றுய், சடத்துவாவையும் வியாபித்திருப்பதாய், சடமாய், சுத்தமாய், சூக்குமை முதலிய நான்கு வாக்குக்களுக்கும், சடத்துவாக்களுள்ளே மந்திரம் பதம் வன்னம் கலை என்னும்

நான்குக்கும், சிவதத்துவம் முதலிய சுத்ததத்துவங்கள் ஐந்துக்கும், அவைகளில் உள்ள புவனங்களுக்கும், அந்தப் புவனங்களில் உள்ள விஞ்ஞானகலருக்கும், அந்தப் புவனநாயகராகிய மந்திரமகேசுரர் மந்திரங்கள் என்னும் அனுசதாசிவர் ஆதியோர் தனுவாதிகட்கும் முதற்காரணமாய், சிவனுக்கு வைப்புச்சத்தி என்று சொல்லப்படும் பரிக்கிரக சத்தியாய் இருப்பது. இதற்குக் குண்டலி, குடிலை, மகாமாயை, ஊர்த்துவமாயை, விந்து என இவைபோலப் பரியாய நாமங்களும் உண்டு. இஃது உண்டு என்பதற்குப் பிரமாணம்: இங்ஙனம் கூறிய காரியங்கள் காரணமின்றி உண்டாகா என்பதாம்.

இனி, ஊர்த்துவபாகம் ஆகிய சுத்தமாயையினுடைய அதோ பாகம் ஆகிய 4. அசுத்தமாயையாவது:—

நித்தமாய், ஒன்றாய், தன்னுடைய காரியங்களைக் காரணம் இன்றி வியாபித்திருப்பதாய், வஸ்து ரூபமாய், கன்மத்துக்கிருப்பிடமாய், அசுத்தமாய், சகலர் பிரளயாகலர் என்னும் ஆன்மாக்களுக்குப் பொதுவாய், பிரளயகாலத்திலே தேகாதிகள் அற்றிருக்கிற ஆன்மாக்களுக்குச் சிருட்டிகாலத்திலே காலாதிதத்துவங்கள் நாலாக்கும் முதலானவைகள் உண்டாவதற்குப் பிறப்பிடமாய், சிவனுக்கு போகசத்தியாகிய பரிக்கிரகசத்தியாய் இருப்பது. இதற்கு அதோமாயை, மோகினி முதலான அநேக பரியாய நாமங்கள் உண்டு. இவ்வாறு ஓர் அசுத்தமாயை உண்டு என்பதற்குப் பிரமாணம்: இந்தக் காலாதி காரியங்கள் மாயை ஆகிய உபாதானம் இன்றி உண்டாகா, மண்ணுண்டை இன்றிக் கடம் உண்டாகாததுபோல என்க. கன்மம் சடம் ஆகையால் ஆன்மாவினிடத்தில் இராது. இருக்கில், ஆன்மா சடமாகத் திரியும். சுத்தமாயை கன்மத்துக்கு மேற்பட்டிருப்பதால் சுத்தமாயையிலும் இராது. ஆகவே, சங்காரகாலத்திலே இதில் இருக்கவேண்டும் என்பது அறிக.

இனி, 5. கன்ம மலமாவது:—

மனோ வாக்குக் காயங்களால் பண்ணப்படுகையால் கன்மம் என்றும், பண்ணின கன்மம் நசித்துப் பலம் உண்டாகுமட்டும் புவனத்திலும், மருத்தெண்ணெய் வாசனை போலப் புத்தியிலும் தங்கிக்

கண்ணுக்குக்காணப்படாதிருக்கையால் அதிட்டம் என்றும், தேகாதிகளைப் பலவகையாய் உண்டாக்குகையால் சனகம் என்றும், எல்லாவற்றையும் தரிக்கையால் தாரகம் என்றும், புசிக்கப்படுகையால் போக்கியம் என்றும சொல்லப்படுவதாய், ஆத்தியான்மிகம முதலிய தாக்கத்திரயத்திற்குக் காரணமாய், ஆன்மஞானமும் மாயாகாரியங்களும் கூடின இடத்திலே உண்டாகுகையால் தன்மாதன்ம சொரூபியாய், பிரளய காலத்திலே பக்குவப்படுவதாய், சிருட்டி காலத்திலே தேகாதிகளுக்கு ஏது ஆவதாய், சங்காரகாலததிலே மாயையிலே இருப்பதாய், புசித்தாலொழியத் தொலையாமல் இருப்பதாம். இது காயிகம், வாசிகம், மானசம் என மூவகைப்படும்.

இவற்றுள், காயிகம் ஆவது,—தெய்வங்களைப் பூசித்தல், ஒருவனை அடித்தல் முதலிய புண்ணிய பாவங்களாம். வாசிகமாவது,—வேதாகம ஞானசாத்திர புராண அடங்கன் முறை முதலிய திருமுறைகளை ஓதுதல், ஓதுவித்தல், பொருளைக்கேட்பித்தல், வேதாகம மந்திரங்களை வாக்கு மந்தம் மானதமாகச் செபித்தல், ஒருவனை வைதல் முதலிய புண்ணிய பாவங்களாம்.

மானசமாவது—மூக்கூற்று அறுவகைச் சமயத்திற்கு அதீதப்பட்ட அகச்சமயம் ஆறனுள் சைவர்கள் பண்ணும் அதோபாகம் ஆகிய தியானம் நீக்கி, சைவ சித்தாந்திகள் ஐந்தெழுத்தும், திருநீறும், கணடிகையும் பொருளாகக் கொண்டு பாசிவத்தின் தடத்த லக்கண சொரூபலக்கணங்களை அறிந்து தியானித்தல் முதலிய தியானமும், பிறர்உடைமையை அபகரிக்கச்சிந்தித்தல் முதலியனவும் ஆகிய புண்ணிய பாவங்களாம்.

இந்தக் கன்மம், சாதி—ஆயு—போகங்களைக் கலந்து அகந்தை பண்ணிநிற்கும். அஃது ஒழிந்து ஒருவர்க்காயினும் தீர்க்காயுவும் நல்லசாதியும் நல்லபோகமும் பண்ணுது. புண்ணியத்தினாலே பாவமும் பாவத்தினாலே புண்ணியமும் அழியாது.

ஆகம புராண விதிப்படி பிராயச்சித்தம் பண்ணினால் புசிப்பியாமல் போகும். அவ்வண்ணம் பரிகாரம் செய்யாவிடில் ஆன்மா

பாவகன்மங்களுக்கு இரௌரவம், கும்பீபாகம் முதலிய துக்கக் கிலேசங்களை அநுபவித்துப் பாடாணம்போல் கிடக்கும்; அன்றி, புசித்தால் ஒழியத் தொலையாது. புசிக்குமிடத்து இதாகிதங்களால் மேலைக்குக் கட்டுப்பட்டிருப்பதும், மனோ வாக்குக் காயங்களால் உண்டாகையால் உற்பத்தியையும், புசித்துத் தொலையப் படுகையாலே நாசத்தையும் உடையதாம். இது தொன்று தொட்டு வருகையால் ஆற்றொழுக்குப் போலப் பிரவாக அநாதி ஆம். இந்தத் தன்மாதன்ம சொரூபமான கன்மத்துக்கு மூலகாரண கன்மமானது ஆணவம் மாயைகளைப்போல நித்தியமாய், சகசமாய் இருக்கும்.

இப்படி ஒரு கன்மம் உண்டு என்பதற்குப் பிரமாணமாவது:— இருவர் ஒத்த நிலத்திலே இருவரும் ஒருவர் குறளின்படி உழவு முதலியன சரியாகச்செய்து பயிரிட்டிருக்க, ஒருவனுக்கு விளைகின்றது மற்றொருவனுக்கு விளையாமற் போகின்றது. இதற்குக் காரணம் யாது? "பண்ணிய பயிரிற் புண்ணியம் தெரியும்" என்றபடி புண்ணிய பாவ வன்மை மென்மைகளைக் காட்டாநிற்கும் கன்மமாம். அன்றியும், ஒருவன் சுவர்க்கத்திலே சுகம் அநுபவிக்கின்றான், மற்றொருவன் நரகத்திலே துக்கம் அநுபவிக்கின்றான்; இதற்குக் காரணம் யாது? அதுவே கன்மம் ஆம் என அறிக.

## சிருட்டிவரலாறு.

இனி, சிருட்டி வரலாறாவது: சுத்தமாயையிலே நின்று சூக்குமை, பைசந்தி, மத்திமை, வைகரி என நான்கு வாக்குகளும்; சிவம் சத்தி சாதாக்கியம் ஈசுரம் சுத்தவித்தை என்னும் சுத்ததத்துவங்கள் ஐந்தும் உண்டாம்.

அசுத்தமாயையிலே நின்று மாயை, காலம், நியதி, கலை, வித்தை, அராகம், புருடன் என ஏழுதத்துவங்கள் உண்டாம்.

பிரகிருதி மாயையிலே சித்தம், புத்தி, அகங்காரம், மனம்; சோத்திரம், தொக்கு, சட்சு, சிங்ஙுவை, ஆக்கிராணம்; வாக்கு, பாதம், பாணி, பாயு, உபத்தம்; சத்தம், பரிசம், ரூபம், ரசம், கந்தம்; ஆகாயம், வாயு, தேயு, அப்பு, பிருதிவி என்னும் இருபத்துநான்காம்.

## நால்வகைவாக்கு.

இனி, சுத்தமாயையிலே வாக்குகள் தோன்றுமாறு:— சத்தருடைய சத்தி சுத்தமாயையைக் கலக்கிக் காரிய உன்முகமாய்க் கூடிநின்றபொழுது, சந்திரகிரணம் கூடும்போது சமுத்திரம் உப்பி ஒலி உண்டாவதுபோல ஒருநாதம் உண்டாம். அந்நாதம் பரசரீரத்தினுள்ளாக நாதமாத்திரையாய் விளங்குவதாய், எல்லா அர்த்தத்தையும் சாமானியமாய் விளக்குவதாய், மூவகை ஆன்மாக்களுக்கும் ஞானப்பிரகாசத்திற்கு ஏதுவாய், சூக்குமை என்னும் பேர்பெற்றிருக்கும். அது தானே விருத்தியாய் பஞ்சவர்ணங்களையும் சூக்குமரூபமாய் ஒலிக்கின்ற மயில் முட்டைக்குள் இருக்கிற நீர் போலப் பிரிக்கப்படாத வர்ணங்களையுடைத்தாய் உன்முகமாய் அர்த்தவிசேடத்தைப் போதிக்கப்படாமல் சிந்தையில் இருக்கிற சத்தம் பைசந்தி ஆம்.

அதுதானே விருத்தியாய் விந்துவில் அதோபாகத்தில் உண்டாகிய அம்பிகை, வாமை, சேட்டை, ரௌத்திரி என்னும் நான்கு சத்திகளினாலும்; சயை, விசயை, அசிதை, பராசிதை, நிவிர்த்தி, பிரதிட்டை, வித்தை, சாந்தி, இந்திகை, தீபிகை, ரோசிகை, மோசிகை, வியோமரூபை, அனந்தை, அநாதை, அநாசிருதை என்னும் பதினாறு சத்திகளினாலும் உண்டாகிய புத்தியில் இருக்கும் அகாரம் முதலிய ஐம்பத்தோரக்கரங்களையும், அவற்றின் அடைவையும் உடைத்தாய், செவிக்குக் கேட்கப்படாததாய், உள்ளே உணரப்படுவதாய், உதானவாயுவின் தொழிற்பாடுபெற்றியிருப்பதாய், கண்டத்தில் அடங்கியிருக்கும் சத்தம் மத்திமை ஆம்.

பிராணவாயு வியாபாரமாய் மேலே எழுந்து தன் செவிக்கும் பிறர்செவிக்கும் கேட்கயோக்கியமாய் அர்த்தத்தைச் சொல்லுவதாய் இருக்கிற சத்தம் வைகரி ஆம்.

இந்த நான்கு வாக்குகளும் நிவிர்த்தி முதலிய பஞ்சகலைகளைப் பற்றுக்கோடாகச்சார்ந்து, ஐவகைப்பட்டு, சிவதத்துவம் முதலிய

பஞ்சதத்துவங்களிலும் இருக்கும் மூவகை ஆன்மாக்களிடத்திலும் பந்தித்திருக்கும்; இந்தவாக்குகள், தனக்கு அந்நியமாக ஒருவன் சிவ ஞானத்தால் கண்டகாலத்திலே ஆணவமலத்துடனே நீங்கும் அல்லது ஒருவருக்கும் நீங்காது.

இந்தவாக்குகளை ஞானவான் யாவன் அந்நியமாகக் காண்கின்றன் அவன் நித்தியன் ஆகி, நினைப்பும் மறப்பும் அற்றவனுகி, விகாரம் இல்லாதவனுய், சுதந்திரனுகி, ஞானனந்த சொரூபி ஆவன். எவ்வாறு? எனில், சூரிய உதயத்திலே நட்சத்திரப் பிரகாசமும் அந்தகாரமும் போலச் சிவஞானப் பிரகாசத்திலே அஞ்ஞானமாகிய ஆணவமலத்துடனே இந்தவாக்கு ரூபமாகிய விஞ்ஞானமும் போம். இது சுத்தமாயையில் சுந்நும் உண்டாமாறு சொல்லப்பட்டது.

## சிவதத்துவம் ஐந்து.

இனி, சுத்தமாயையில் தத்துவங்கள் ஆகிய அர்த்தவடிவு என்றும், ஒலிவடிவு என்றும் இருவிதமுடைய அத்துவாக்களில், அர்த்த வடிவாகிய சிவம், சத்தி, சாதாக்கியம், ஈசுரம், சுத்தவித்தை என்னும் ஐந்தில் — 1. சிவதத்துவமாவது :— சுத்தமாயையினுடைய முந்தின விகாரம் என அறிக. இதிலே சூக்குமை என்னும் வாக்கு மிகுத்துக் காமிகாதிசொரூபமாய் இருக்கிற சிவாகமவழி முத்தியை இச்சிக்கிற வரிடத்தில் சிவஞானவிளக்கம் அதிகம், அதிலும் சிறிது அதிகம், மிகவும் அதிகம் என்பதை விளக்கும். இன்னும் அவ்வாக்கு ஈசுர சத்திக்கு ஏவல் செய்து கொண்டிருக்கும். இன்னும் அச்சிவதத்துவம், மலத்தைப்போக்கும் சத்திக்கும் சிவபதத்தை அடைவிக்கும் சத்திக்கும் உபாதியாய் இருக்கிற இந்திகை, தீபிகை, ரோசிகை, மோசிகை, ஊர்த்துவகாமினி என்னும் கலைகளுக்கு இருப்பிடமுமாய் நாதம் என்று சொல்லப்படுவதாய் தன்மரூபமாய் இருப்பது என அறிக.

இனி, 2. சத்தி தத்துவமாவது :— காமிகாதி அபரஞானத்தையுடைய பைசந்தி வாக்கு விருத்திக்குக் காரணமாய், ஆன்மாவுக்குச்

சமுசாரநிவிர்த்திக்குப் பகையாயிருக்கிறதிலே பிரவர்த்திக்கை. இதிலே விஷயகோசரமாயிருக்கிற பசுஞானத்தை விடுத்துச் சிவ ஞானத்தைச் சாட்சாத்காரமாய்ப் பிரகாசிப்பிக்கிறதற்குத் தாபத்திரயம் முதலான சர்வதுக்கங்களையும் போக்குகை ஆகிய இவற்றைப் பண்ணுகையால் நிவிர்த்தி, பிரதிட்டை, வித்தை, சாந்தி, சாந்தியாதீதை என்னும் சத்திகளுக்கு இருப்பிடமாய், விந்து என்று சொல்லப்படுவதாய் இருக்கிற சிவதத்துவ காரியமாம்.

இனி, 3. சாதாக்கிய தத்துவமாவது:— காமிகம் முதலான அபர ஞானத்தையுடைய மத்திமை என்னும் வாக்கு விருத்திக்கு இருப்பிடமாய், காமிகம் முதலான தந்திரங்கள் வேருகிறதற்குக் காரணங்களாய் இருக்கிற பிரணவாதிகட்கும் சாமீப்பியம் முதலானவற்றை அடைந்தோர்க்கும் தனு கரணுதிக்குக் காரணமாகிய சத்திதத்துவ காரியமாம்.

இனி, 4. ஈசுரதத்துவமாவது :— அனந்தேசுராதிகட்கும் அவர்களை உபாசிக்கையால் அவர்களுடைய பதத்தை அடைந்திருக்கிறவர்கட்கும் தநு கரண புவனுதியை உண்டாக்குவதான சதாசிவ தத்துவ காரியமாம்.

இனி, 5. சுத்த வித்தியா தத்துவ மாவது :— காமிகம் முதலான ஆகமங்களுடைய வைகரிவாக்குவிருத்திக்கு இருப்பிடமாய், சத்தகோடி மகாமந்திரங்களுக்கும், கணேசுரர்களுக்கும், இந்திரன் முதலான திக்குப் பாலகர்களுக்கும் தனு கரண புவனம் முதலானவற்றிற்குக் காரணமாய், ஈசுவர தத்துவ காரியமாய் இருப்பதாம்.

சிவதத்துவம் முதலிய சில பெயர்கள் வருமாறு :—

பரமான்மா ஞான மாத்திரத்துடன் கூடியிருக்கிற பொழுது அவர்க்குச் சிவம் என்று பெயர்; அவர் இருக்கும் தத்துவத்திற்கும் சிவம் என்று பெயர். தொழில் மாத்திரத்துடன் கூடியிருக்கிற பொழுது அவருக்குச் சத்தி என்று பெயர்; அவர் இருக்கும் தத்துவத்திற்கும் சத்தி என்று பெயர். ஞானக் கிரியைகள் சரியாயிருக்கக் கூடியிருக்கிற பொழுது அவருக்குச் சதாசிவம் என்று பெயர்.

கிரியை அதிகமாய் ஞானம் குறைந்திருக்கக் கூடியிருக்கிற அப்பொழுது அவருக்கு ஈசுவரர் என்று பெயர். ஈசுவரர் எனினும் மகேசுவரர் எனினும் ஒக்கும். ஞானம் அதிகமாய்க் கிரியை குறைந்திருக்கக் கூடியிருக்கின்ற அப்பொழுது அவருக்குச் சுத்தவித்தை என்று பெயர்; அவர் இருக்கும் தத்துவத்திற்கும் சுத்தவித்தை என்று பெயர். அப்பரமான்மாவுக்கு இவ் ஐவகைத் தத்துவமும் சுதந்திர வடிவம் ஆம்.

## வித்தியா தத்துவம் ஏழு.

1. மாயாதத்துவமாவது:— ஆன்மாவுக்கு மயக்க அறிவைப் பண்ணுவது.

2. கலையாவது:— நியதியின்பின் மாயையினின்றும் தோன்றுவதாய், ஆணவத்தை ஏகதேசத்திலே நீக்கி ஆன்மாவின் கிரியாசத்தியை விளக்குவதாய், மாயாகாரியமாய் இருப்பது. இது உண்டு என்பதற்குப் பிரமாணம்— இந்தியே ஞானக் கிரியைகளை விளக்கும், பின்னை ஒன்றினாலே அவ்விளக்கம் வாராது என்பது.

3. வித்தையாவது:— கலையிலே உண்டானதாய், ஆன்மாவுக்கு ஞானசத்தியை விளக்குவதாய், போகத்தைக் கிரகிக்கிறதற்குக் காரணமாய் இருப்பது.

4. அராகமாவது:— வித்தையிலே உண்டானதாய், ஆன்மாவின் இச்சாசத்தியை விளக்குவதாய், புத்தி தருமமான அந்தந்த விஷயங்களில் ஆசையை உண்டாக்குவது.

5. காலமாவது:— மாயையினின்றும் தோன்றி இலயம் திடி என்பது முதலியவற்றிற்குக் காரணமாய், இம்மட்டென்று போகத்தை அளவிடுவதாய், எல்லை பலம் புதுமைகளைப் பண்ணுவதாய், செல்காலம் நிகழ்காலம் எதிர்காலம் முதலாக அநேக பேதப்பட்டிருப்பது.

6. நியதியாவது:— காலத்தின்பின் மாயையினின்றும் தோன்றி ஒருவன் செய்த கன்மபலத்தை விஷயம் நன்றாய் இருக்

திறதென்று புசியாமலும், தான் செய்த கன்மபலத்தை விஷயம் நன்றாயிருக்கவில்லை என்று புசியாமல் இராதபடியும், ஒருவர் தேகாதிகள் மற்றொருவருக்குப் போக ஏது ஆகாதபடியும், அவரவர் செய்த கன்மம் அவரவரே நுகரும்படி இராசாக்கினை போல நிச்சயம் பண்ணி நிறுத்துவது.

7. புருடதத்துவமாவது :— இங்ஙனம் கூறிய கலை முதலான பஞ்ச தத்துவங்களையும் பொருந்திய பஞ்ச கஞ்சுகமுடைய உயிரே முற்கூறிய இச்சா ஞானக் கிரியை மருவிப் புருடதத்துவம் எனப்பெயர் பெற்று, போகத்து உன்முகமாய் நிற்பது.

இனி, பிரகிருதியாவது :— கலையிலே நின்றும் ஸ்ரீகண்ட பரமேசுரனால் உண்டாக்கப்பட்டதாய், குணம் முதலான இருபத்து நான்கு தத்துவங்களுக்குக் காரணமாய், பிரிக்கப்படாமல் குணங்களைச் சரியாகக் கூட்டியிருப்பதாய், விபரீத உணர்வையுடையதாகிய அவிச்சையைத் தோற்றுவிப்பது. இதற்கு மூலப்பிரகிருதி என்றும் பெயர் கூறப்படும்.

இனி, குணதத்துவமாவது :— பிரிக்கப்பட்ட குணங்கள் சரியாய்க் கூடியிருக்கும் அவதரம்; ஆகையால், பிரகிருதிக்கும் குணதத்துவத்திற்கும் பேதமில்லை. இக்குணதத்துவம், சாத்துவிகம் இராசதம் தாமதம் முதலிய மூன்றாய் ஒவ்வொன்று முத்திறப்பட்டு ஒன்பது வகையாய் இருக்கும்.

## ஆன்மதத்துவம் – 24.

### அந்தக்கரணம் நான்கு.

1. சித்தமாவது :— பிரகிருதியின் அதோபாகமே; அது போகத்திலே சாமானியமாய் இருக்கச் சிந்திக்கப்பண்ணும். குணம், சித்தம், பிரகிருதி என்ற மூன்றும் அவதர நாமங்களாம்.

இனி, 2. புத்தியாவது :— குணதத்துவத்திலே நின்றும் உண்டானதாய், உயிர்கள் செய்த புண்ணிய பாவங்கள் தன்பாற் சாரப்பட்டும், இருவினைக்கு ஈடாகவந்த விடயத்தை அஃது இன்னது

என நிச்சயித்தும் நிற்பது. இனி தன்மம், ஞானம், வைராக்கியம், ஐசுவரியம், அதன்மம், அஞ்ஞானம், அவைராக்கியம், அநைசுவரியம் என்னும் எட்டினுக்கும் காரணமாய் இருப்பது.

இனி, 3. அகங்காரமாவது :— என்னோடு ஒப்பவர் ஒருவரும் இல்லை என்னும் அகந்தைக்குக் காரணமாய், யான் எனது என்னும் அபிமானத்துக்கும் காரணமாய், புத்தியிலே உண்டானதாய் இருப்பது. இது சாத்துவிகம் முதலிய குணங்களுடைய மிகுதியினாலே தைசதம், வைகாரிகம், பூதாதிகம் என மூன்று பேதப்படும். இவைகள் மனம் முதலியவற்றிற்குக் காரணமாய் இருக்கும்.

4. மனமாவது :— தைசதஅகங்காரத்தில் உண்டானதாய், விகற்பம் என்னும் சந்தேக நினைவும், சங்கற்பமென்னும் நினைவும், இந்திரியங்கள் வழியாய்வந்த பொருள்களைப்பற்றி அறியும் அறிவும் உடையதாய் இருப்பது. இந்த விசேடத்துடனே கூடினது விசேடியம் என்ன விஷயீகரித்துவரும் நிச்சயத்தையும் பண்ணுவது. இதுதான் சுரோத்திராதி இந்திரியங்களிலே கூடின அடைவிலே சத்தாதி ஞானங்களை உண்டாக்கும். ஆகையால், விபுவும் அல்ல; பஞ்சாவதானியிடத்திலே ஒருங்கே ஞானம் வருகையால் அணுவும் அல்ல : விரிதல் குவிதலையுடைய மகத்துவமாம்.

### ஞானேந்திரியம் ஐந்து.

இனி, சுரோத்திராதியாவன :— முற்கூறிய தைசத அகங்காரத்திலே நின்றும் சுரோத்திராதி இந்திரியங்கள் உண்டாம். தன்னை வந்தடைந்த சத்தத்தைக் காது வெளியில் ஆகாசம் இடமாயிருந்து கிரகிக்கும் தத்துவம் சுரோத்திரம்.

தன்னை வந்தடைந்த பரிசத்தைத் துவக்கில் வாயுவினிடமாக இருந்து கிரகிக்கும் தத்துவம் துவக்கு.

கோளகையிலே அக்கினியினிடமாக வந்த நயன ஒளி வழியாகப்போய் ரூபத்தைக் கிரகிக்கும் தத்துவம் சட்சு.

நாக்கிலே அப்புவினிடமாக வந்தடைந்த ரசத்தைக் கிரகிக்கும் தத்துவம் சிங்ஙுவை.

மூக்கிலேயிருந்து பிருதிவியினிடமாக வந்தடைந்த கந்தத்தைக் கிரகிக்கும் தத்துவம் ஆக்கிராணம்.

காது முதலான தானங்கள் இருக்கவும் செவிடர் முதலியோர்களுக்குச் சத்தாதிகள் அறியப்படாதிருக்கையால் அந்தத் தானங்களில் இந்திரியம இல்லை என்க.

இவற்றிற்கு அந்நியமாய் வைகரி அகங்காரத்திலே வாக்கு முதலான கன்மேந்திரியங்கள் உண்டாம்.

## கன்மேந்திரியம் ஐந்து.

இவற்றில் நாக்கினிடமாக நின்று சொற்களை வசனிக்கும் தத்துவம் வாக்கு; கால்களினிடமாக நின்று நடத்தல் ஓடல் முதலியவற்றைச் செய்விக்கும் தத்துவம் பாதம்; கைகளினிடமாக நின்று ஈதல் ஏற்றல் முதலிய தொழில்களைச் செய்யும் தத்துவம் பாணி; குதத்திலே நின்று மலசலவிசர்க்கங்களைப் பண்ணும் தத்துவம் பாயு; குய்யததிலே நின்று ஆனந்தத்தைப்பண்ணும் தத்துவம் உபஸ்தம் என்க.

## தன்மாத்திரை ஐந்து.

இனி, பூதாதி ஆங்காரத்திலேநின்று பஞ்ச தன்மாத்திரை உண்டாம். அர்த்தம்தரும விசேடமின்றியிருக்கும் சாமானிய சத்தம் சத்த தன்மாத்திரை: குளிர்ச்சி உஷ்ணம் முதலான விசேடணம் அற்று, சாமானிய சத்தமாய், சத்த பரிசமுமாய் இருப்பது பரிச தன்மாத்திரை; வெண்மை, கருமை, செம்மை முதலிய விசேடங்கள் அற்று ரூப சாமானியமாய், சத்த-பரிச-ரூபமாய் இருப்பது ரூபதன்மாத்திரை; மதுரம் முதலான விசேடம் அற்று ரச சாமானியமாய், சத்த-பரிச-ரூப-ரசமாயிருப்பது ரசதன்மாத்திரை; நற்கந்தம் துர்க்கந்தம் ஆகிய விசேடம் அற்று, கந்த சாமானியமாய்ச் சத்த—பரிச – ரூப – ரச கந்தமாயிருப்பது கந்ததன்மாத்திரை என்க.

இவ்வாறாகிய பரிசம் முதலான தன் மாத்திரைகளில் ஒவ்வொரு குணம் அதிகம். அதிகமாகக் கூடியிருக்கையால் வாயுவாதி பூதங்களிலும் ஒவ்வொரு குணம் அதிகம் என அறிக.

இந்தச் சத்தாதி தன்மாத்திரைகள் ஆகாசாதி பூதங்களுடைய சூக்கும அவத்தை. சத்தாதி தன்மாத்திரையிலே நின்றும் ஆகாசாதி பூதங்கள் உண்டாம்.

## பூதம் ஐந்து.

ஆகாயம்: சத்த தன்மாத்திரையிலே உண்டானதாய் இடங்கொடுப்பதாய், தூலமாய், சுத்தமாய், வன்னரூபமாய், சத்தத்தைக் குணமுடையதாய் இருக்கும்.

வாயு: சத்தத்திறுக்குப் பேரிமுதலான நிமித்தம் ஒழித்து, குணி அல்லதாய், பரிச தன்மாத்திரையிலே ஆரம்பிக்கப்பட்டதாய், உஷ்ணமும் அநுஷ்ணமும் அல்லாத பரிசத்தையுடையதாய் சத்தத்தையுடையது. இது, பிராணன் அபானன் முதலாக அநேக பேதம் உடையதாய், திரட்டுதல் என்னும் தொழிலைப் பண்ணும்.

அக்கினி: ரூப தன்மாத்திரையில் உண்டானதாய், சிவந்த ரூபத்தை உடையதாய், பிரகாச ரூபமாய், உஷ்ண பரிசத்தையுடையதாய், சத்தத்தையுடையதாய், பாகத்தைப் பண்ணுவதாய் இருக்கும்.

அப்பு: ரச தன்மாத்திரையில் உண்டானதாய், வெண்ணிறத்தையும் ரசத்தையும் குளிர்ந்தபரிசத்தையும் சலசல சத்தத்தையும் உடையதாய், நெகிழ்ச்சியாய், தூள் முதலியவற்றை வலிய உண்டையாகப் பண்ணுவதாய் இருக்கும்.

பிருதிவி: கந்த தன்மாத்திரையில் உண்டானதாய், சுகந்த துர்க்கந்தங்களையும், மதுரம் முதலான ஆறுரசங்களையும், வெண்ணிறம் முதலிய காணுவித வன்னங்களையும், சூரியன் அக்கினி முதலியவைகளின் கூட்டுறவின் பாகத்தில் உண்டானதாய், உஷ்ணமும் அநுஷ்ணமும் அல்லாத பரிசத்தையும் கடகட சத்தத்தையும் உடையதாய், கடின தாரக ரூபமாய் இருக்கும்.

இந்தப் பஞ்சபூதங்கள் ஒன்றில் ஒன்று உண்டாகாது, காரண குணம் காரியத்திலே வரவேண்டும் என்னும் வாக்கால் என்க.

தத்துவமாவது பிரளயம் மட்டாக இருக்கிறதாகையால் சரீராதிகள் தத்துவமல்ல, பூதவிகாரமாம்.

சிவதத்துவம் முதல் பிருதிவி தத்துவம் ஈறுன முப்பத்தாறும் சாதாரணம், அசாதாரணம் என்று இருவகைப்படும். சாதாரணமாவது, புவனத்திற்கு ஆதாரமாய் தூலமாய் இருக்கும்; அசாதாரணமாவது, சூக்ஷ்ம ரூபமாய் ஞானக்கிரியையை விளக்குவதாக ஆன்மாக்கள் தோறும் வெவ்வேறாய் இருக்கும்.

இனி, சுத்தமாயா காரியம் ஐந்திற்கும் சிவதத்துவம் என்றும், சுத்ததத்துவம் என்றும், சுத்தாத்துவா என்றும் பிரேர காண்டம் என்றும் பெயர்.

மாயாதிகள் ஏழுக்கும் வித்தியாதத்துவம் என்றும், ஈசுவர தத்துவம் என்றும், போககாண்டம் என்றும், மிச்சிராத்துவா என்றும், சுத்தாசுத்ததத்துவம் என்றும் பெயர்.

சித்தம் முதலான இருபத்துநான்கு தத்துவங்களுக்கும் ஆன்ம தத்துவம் என்றும், அசுத்த தத்துவம் என்றும், போக்கியகாண்டம் என்றும், அசுததாத்துவா என்றும் பெயர்.

இந்தத் தத்துவங்களால வரும் காரியஙகள சாதாரணம் என்றும, அசாதாரணம் என்றும், பொதுச்சிறப்பாகிய உபயரூபம் என்றும் மூவகைப்படும். இவற்றில், புவனங்கள் எல்லார்க்கும் போக ஏது ஆகையால் சாதாரணம ஆம். பஞ்ச தன்மாத்திரைகள், மன அகங்கார புத்திகள் இந்த எட்டுத்தத்துவங்கள் கூட்டுறவினுல் உண்டான புரியட்டகதேகம் அவரவர்களுக்குப் போக ஏது ஆகையால் அசாதாரணமாம். இந்தப் புரியட்டக தேகத்திலே நின்றும் ஆன்மா ஒரு உலகத்திலே போக்குவரவு உடையன் ஆவன். ஸ்திரீ முதலியவருடைய தூல தேகம் அவர்களுக்குப் போகத்துக்கு ஏதுவாய், கணவனுக்குப் போக்கியமுமாய் இருக்கையால் உபயரூபமாம். இவ்வாறு மற்றைத்தேகங்களும் உபயரூபம் என அறிக.

இனி, தூலதேகமானது சூக்கும பூதங்களை விட்டுநீங்காமல் மாதா பிதாக்களுடைய சுரோணித சுக்கிலங்களுடனே உண்டாம்.

அவ்வாறு உண்டாகுமாறு:— எலும்பு, மாமிசம், மயிர், துவக்கு, நகம், தந்தம், நரம்பு இவை முதலியன சூக்கும பிருதிவியிலும்; மூத்திரம், இரத்தம், கபம், வேர்வை, சுக்கிலம் இவை முதலியன சூக்குமமான அப்புவிலும்; இருதய தாபம், கண்களில் பித்தபாகம் முதலானவை சூக்குமமான அக்கினியிலும்; பிராணன், அபானன், உதானன், வியானன், சமானன், நாகன், கூர்மன், கிரிகரன், தேவதத்தன், தனஞ்சயன் இவை பத்தும் சூக்கும வாயுவிலும்; ஆகாசமானது சூக்கும ஆகாசத்திலும் உண்டாம். இவ்வாறு சூக்கும பூதத்தினின்றும் தூலதேகம் உண்டாம் என அறிக.

இவ்வாறு ஆணவம் மாயை கன்மங்களாலே தத்துவ தாத்துவிகமான சகல பந்தங்களுடனும் கூடின சகலருக்கு முன்சொன்ன கேவலாதி அவத்தைகள் சாக்கிராதியாக ஒவ்வொன்று ஐந்து வகையாகப் பதினைந்து பேதப்படும்.

கேவலாவத்தை ஐந்தில் சகலாவத்தை ஐந்திற்கும் இலக்கணம் வருமாறு:—

### கீழாலவத்தை.

கேவலத்தில் சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி, துரியம், துரியாதீதம் என்று ஐந்துவகை ஆகும்.

கேவலத்தில் சாக்கிரமாவது:— ஆன்மா முப்பத்தாறு தத்துவங்களுடனும், தாத்துவிகங்கள் அறுபதுடனும் கூடச் சகல விடய போகங்களையும் அநுபவித்துக்கொண்டிருக்கும் வேளையிலே போக ஏதுவான கன்மம் இல்லாதிருக்கையால் பிரேரகாண்டமாகிய சுத்த தத்துவங்கள் ஐந்தும், போக காண்டமாகிய காலாதிகள் ஏழும், பிருதிவி முதலான பூதங்கள் ஐந்துமாகப் பதினேழும் நீங்க சுரோத்திரம் முதலாகிய ஞானேந்திரியங்கள் ஐந்தும், வாக்கு முதலாகிய கன்மேந்திரியங்கள் ஐந்தும், சத்தம் முதலாகிய தன்மாத்திரைகள் ஐந்தும், வசனம் முதலாகிய தாத்துவிகமாகிய வசனாதிகள்

ஐந்தும், பிராணன் முதலிய தாத்துவிகமாகிய வாயுக்கள்பத்தும் மனம் முதலாகிய அந்தக்கரணங்கள் நான்கும் ஆ கி ய முப்பத்து நான்கு கருவிகளுடனும் கூடி, கேத்திரிகனாகிய ஆன்மாவும் கூட முப்பத்தைந்தாய், சாக்கிரத்தானமாகிய லலாடத்திலே நின்று மேற் கூறிய பிரேரிக்கிற தத்துவமும், புசிக்கிற தத்துவமும் தாரகம் ஆகிய பூதங்களும் நீங்குகையால், ஆணவமலம் மேலிட்டுக் கணடும் காணாமல் கேட்டும்கேளாமல் மயங்கியிருக்கும் அவதாமாம். இது அறிவில்லாச் சாக்கிரம் என்க.

புறம்பே விடயங்களைக் கிரகிக்கும் ஞானேந்திரியம் ஐந்தும், கன்மேந்திரியங்கள் ஐந்துமாக இப்பத்தும் நீங்க நின்ற சத்தாதி ஐந்தும், வசனாதி ஐந்தும், பிராணாதி வாயுபத்தும், மனாதி அந்தக் கரணம் நான்கும், கேத்திரிகனும் ஆகிய இருபத்தைந்தும் கண்டத தானத்திலே நின்று, சாக்கிராவத்தையிலே நின்று முன் அநுப வித்த போகத்தை நினைப்பதும், தற்காலத்திலே வரும் சூக்கும தேக போகம ஆகிய ஆனைஏறி மாலை சூடுதல் முதலியவற்றை அநுபவிப்பதும் கேவலசொப்பனம் என்க.

முற்கூறிய சொப்பனாவத்தையில் கூடியிருந்த இருபத்துநான்கு கருவியில் இருபத்திரண்டு நீங்கநின்ற சித்தமும், பிராணவாயுவும், கேத்திரிகனும் கூடி இருதயத் தானத்திலே நின்று சுகமாய்த் தூங் குவது கேவல சுழுத்தி என்க.

சித்தமும் நீங்க உச்சுவாசம் நிச்சுவாசம் பண்ணிக்கொண்டு, தேகத்துக் காவலாயிருக்கிற பிராணவாயுவுடன் கேத்திரிகனும் கூடி நாபித்தானத்திலே நின்று, ஒன்றும் தெரியாமல் தூங்குவது கேவல துரியம் என்க.

பிராணவாயுவை நீக்கிக் கேத்திரிகனாகிய ஆன்மா ஒருவனே தனித்து மூலாதாரத்திலே ஆணவமலத்துடனே கூடி ஓர் அறிவும் அற்றிருப்பது கேவல துரியாதீதம். இந்த அதீத அவத்தைதானே நித்தியகேவல அவத்தை ஆம்; இவற்றிற்குக் கீழாலவத்தை என் னும் பெயராம்.

## மத்தியாலவத்தை.

சகலத்தின் மத்தியாலவத்தையாவது இலாடத்தானத்திலே நின்று ஆன்மா சகலவிடயங்களையும் அநுபவிக்கிற வேளையிலே கல்லெறி முதலியவைகளாலும், சிசுமரணம் கேட்பது முதலியவைகளாலும் திடுக்கிடப் பிராணவாயுவும் சீவியாமல் மூர்ச்சித்து மயங்கி நின்ற அவதரம் சாக்கிராதீதம்.

அற்பமாகப் பிராணவாயு சீவித்துப் பெருமூச்செறிவது சாக்கிரத்தில் துரியம்.

சித்தத்துடனும் பிராணவாயுவுடனும் கேத்திரிகன் கூடி சுதுக்கமாத்திரத்தை அறிவது சாக்கிரத்தில் சுழுத்தி.

ஞானேந்திரியங்கள் ஐந்தும், கன்மேந்திரியங்கள் ஐந்தும், பிராணாதிவாயுக்கள் பத்தும், அந்தக் கரணம் நான்கும் ஆக இருபத்து நான்குடன் கேத்திரிகனும் கூடி இருபத்தைந்தாய்த் துக்கம் ஆதலாலே வந்தது என்ற தூர்ச்சிந்தையுடனே துக்கத்தை அநுபவிப்பது சாக்கிரத்தில் சொப்பனம்.

தத்துவ தாத்துவிகங்கள் எல்லாவற்றினோடும் கூடி சர்வ விடயங்களையும் அநுபவிப்பது சாக்கிரத்தில் சாக்கிரம்.

சகலாவத்தையுடையனாகிக் கலையினாலே விளக்கப்பட்ட ஞானக் கிரியா சொரூபமான சைதன்னியத்தையும், வித்தையினால் விளங்கப்பட்ட விடய ஞானத்தையும், அராகத்தினாலே விடயத்திலே இச்சையையும், குணரூபமான பிரதானத்தினாலும் புத்தி முதலான காரணசமூகத்தினாலும் அவற்றின் காரியங்களால் பேதிக்கப்படும் புருடனாகி நியதியுடன் கூடுகையால் தான் புசிக்கப்பட்ட போகங்களிலே நியமிக்கப்பட்ட காலத்திலே அந்தக் காலத்தில் எண்ணப்பட்ட போகத்திலே மோகிதனாகி, இவ்வாறு தத்துவ கலாபந்தங்கள் உடையனாய், கிஞ்சித்துவம் உள்ளவனாய், தூல சூக்கும தேகங்களுடன் கூடினவனாய், மாயாபோகங்களிலே கூடித் தன்வயனாகி, தேகாதிகளே தான் என்று விசாரித்து மூடனாகித்திரிகிற

காலத்தில், வேதபாகியமான சமயங்களிலேயிருந்து பண்ணிய புண்ணிய விசேடங்களினாலே அவற்றின் விசிட்டமான வைதிக சைவ சமயத்தை அடைந்து, சமய விசேட தீக்கைபெற்று, சாலோகாதிகளை அடைநது, அஙகே விரத்திவந்து புண்ணிய பூமியிற் செனிதது, கிரியைமுதலியவற்றை அநுட்டித்து, அவைகளினாலே இருவினையொப்பு மலபரிபாகம் வர, நிவிர்த்தி முதலிய மந்திரசத்தியும்பதிய நல்லாசிரியனைத் தேடுங்கால் வாக்கு மனாதீதமாயிருக்கிற சிவமே கிருபையினாலே கிருதகாடினியம் போல் ஆசாரியனாகக் காணப் பட்டுத் திருநோக்கம் முதலியவற்றால் மந்திராதி பஞ்சாத்துவா கற்பித நிவிர்த்தியாதி கலைகளைச் சோதித்து, பாசக்ஷயம் பண்ணி, பரிபாகத்துக்கு ஈடாகச் சச்சிதானந்த சிவமாகப் பண்ணும்என்க

உத்தம இலக்கணமுடையனான ஆசாரியன் உத்தம இலக்கணமுடையனாய் இருக்கிற சீடனுக்குச் சாத்திரத்திலே சொன்னபடி சமய விசேட நிருவாண அபிடேகங்களைப் பண்ணுவன். அவன் ஆலோகனம் செய்த மாத்திரத்திலே பரமானந்தம் உண்டாகும்; அவனே ஞானாசாரியன் என அறிக. அவ் ஆசாரியன் சத்தி நிபாதமுடைய தீவிரதர பக்குவனுக்குச் சாம்பவதீக்கை பண்ணுவன்.

சாம்பவதீக்கையாவது :— ஞான தீக்கை, கிரியாதீக்கை என அநேகபேதமாய் இருக்கிற நிருவாணதீக்கையினும் வேறாய், சிவ சீவர்களுடைய தாதான்மியத்தை விளக்குவது என அறிக.

இவ்வாறு சாம்பவதீக்கை பெற்றுச், சிவசொரூபமான ஆசாரியனாலே இநதிரிய வேருடன்கூடி, நம்மில் அநந்நியமான உனது சொரூபத்தை அறிந்தாயில்லை, நாமே நீ ஆவாய் என்று போதிக்கப் பட்டு, அவன்தான் சிவனைக்காட்டிலும் அநந்நியன் என்று சிந்தித்தல் தெளிதல்செய்து, ஆணவாதி பாசங்களை நீக்கி, சச்சிதானந்த சொரூபமான சிவததையே அநந்நியமாக சாட்சாத்கரித்து, அதிலே அழுந்தி, அதுவேயாய் காசமற்றகண் சூரியப்பிரகாசத்துடன் கலநது பின் ஒன்றும் காணாததுபோலப் பசுகரணம் சிவகரணமாம் ஆகையாலே நின்மல சாக்கிராதியான சுத்தாவத்தைகளைப் பொருந்துவன். அவை வருமாறு :—

## சுத்தாவத்தை

நின்மல சாக்கிராவது :— நின்மல சாக்கிராவத்தைக்குத் தானம் ஆகிய இருதயத்திலே சிவசத்தியுடனே கூடுதலால், உப்பளத்திலே விழுந்தது உப்பானாற்போல ஜீவிபூதனாய் அகார உகார மகார விந்து நாதங்களுடன் கூடிய மனம், அகங்காரம், புத்தி, சித்தம், உள்ளம் என்னும் அந்தக்கரணம் ஐந்துடன் கூடினவாகிய இந்திரியங்களால் காணப்பட்ட சத்தாதி விடயங்களைச் சிவாகாரமாகவும், விடய சுகங்களைச் சிவானந்தமாகவும் அநுபவிப்பது நின்மல சாக்கிரமாம்.

நின்மலசாக்கிராவத்தைக்குக் காரணமான அகாரம் உகாரத்திலும், புறம்பே விடயங்களைப் பற்றும் மனம் அகங்காரத்திலும், கிரியாசத்தி ஞானசத்தியிலும் ஒடுங்க, அகங்காராதி நான்குடனும் அதற்குப் பிராணன் ஆகிய ஞானசத்தி முதல் நான்குடனும் சொப்பனவத்தைத் தானம் ஆகிய கண்டத்தானத்திலே அந்தக்கரண விருத்தியுடன் சிவோகம் பாவனை பண்ணிநிற்பது நின்மல சொப்பனம்.

நின்மல சொப்பன அவத்தைக்குக் காரணம ஆகிய உகாரம் மகாரத்திலும், நான் என்று கிரிக்கிற அகங்காரம் புத்தியிலும், ஞானசத்தி இச்சாசத்தியிலும் ஒடுங்க, புத்திமுதல் மூன்றும் அவற்றைப் பிரேரிக்கும் அகாராதி மூன்றும் அவற்றிற்குப் பிராணன் ஆகிய இச்சாசத்தி முதல் மூன்றுடனும் சுழுத்தித்தானம் ஆகிய மூலத்திலே தேகேந்திரிய வியாபாரம் அற்று, வாசாமகோசரம் ஆய ஞாதுரு ஞான ஞேயம் மூன்றும் மூன்றாகச் சுகத்தை அநுபவித்து நிற்பது நின்மல சுழுத்தி.

நின்மல சுழுத்தி அவத்தைக்குக் காரணமான மகாரம் விந்துவிலும், பகுத்து நிச்சயிக்கிற புத்தி சித்தத்திலும் ஒடுங்க, சித்தம் முதலாகிய இரண்டும் அவற்றைப் பிரேரிக்கிற விந்து நாதங்களும், அவற்றிற்குப் பிராணன் ஆகிய ஆதி பரை என்னும் இரண்டு சத்திகளுடனும் துரியாவத்தைத் தானம் ஆகிய புருவமத்தியிலே நின்று,

தேகேந்திரிய அந்தக்கரண வியாபாரம் ஒன்றும் அற்றுக் கேவல ஞானமாத்திரமாய் இருப்பது நின்மல துரியம்.

நின்மல துரியாவத்தைக்குக் காரணமான விந்துவும், அர்த்த நாதமும் குடிலையிலும், சித்தம் பிரகிருதியிலும், ஆதிசத்தி பராசத்தி யிலும் ஒடுங்க, நின்மல துரியாதீத அவத்தைக்குக் காரணம் ஆகிய அநாத நாதம் என்னும் பராசத்தியும், சிவானந்த அநுபவியாகிய சொரூபஞானம் ஆகிய உள்ளமும் அடங்க நின்மலதுரியாதீத அவத் தைக்குத் தானம் ஆகிய பிரமரந்திரததிலே அகண்டாகார சச்சிதா னந்த பரிபூரண சிவானந்த அநுபோகத்தை இரண்டறப் பெற்றி ருப்பது நின்மலதுரியாதீதம். இதுவே, உன்மனைக்கு மேற்பட்டிருக் கிற மோட்சம் என்க.

இந்த நின்மல சாக்கிராதீதத்தைப் பெறவே நிவிர்த்தி முத லான பஞ்சகலைகளும், அன்னமயம் முதலான பஞ்சகோசங்களும், அகாராதி சூக்கும பஞ்சாக்கரமும், நகாராதி தூல பஞ்சாக்கரமும், சத்தியோசாதாதி பஞ்ச மந்திரங்களும், பிரமன் முதலிய பஞ்ச கர்த் தாக்களும் சுத்தவித்தை முதலான பஞ்ச தத்துவங்களும், உள்ளத் துடன் மனம் முதலான அந்தக் கரணங்கள் ஐந்தும், வைகரி முத லான வாக்குகள் ஐந்தும், கிரியாசத்தி முதலான பஞ்சசத்திகளும், ஆணவாதி பஞ்சபாசங்களும் சர்வ உபாதிகளும் நீங்கும்.

இவ்வாறு நின்மல துரியாதீத அவத்தையை ஒரு பசுக்கறக்கிற நேரம் ஆயினும், வில்லம்பு பூமியில் விழுகிற நேரமாயினும், கண் ணிமை பொருந்தும் நேரமாயினும் பெற்றவர் பூமியில் மீளப்பிறவார். இவ்வாறு நிட்டைகூடியவர்க்கு விதி நிஷேதம் புண்ணிய பாவம் ஒன்றும் இல்லை. இவர் செய்த புண்ணிய பாவம் இவர்க்கு இதா கிதம் செய்பவனுக்குச் சாரும். இவ்வாறு நின்மல சாக்கிராதி அநுபவித்துக்கொண்டு சீவன்முத்தராயிருந்து தேகாந்தத்திலே பரம மோட்சத்தை அடைவர் என்க.

இனி, 'பரமதத்தை நிராகரியாதிருக்கில் தன்மதம் பிர திட்டை ஆகாது' என்கிற நியாயததால் பரரது மோட்சத்தை நிரா கரித்து, சித்தாந்தத்திலே முத்தி சொரூபம் கூறுவாம்.

## பரமோட்ச நிராகரணம்.

சாருவாகன் முதலானவர்கள் தங்கள் தங்கள் புத்திக்குத் தக்க தாக வெவ்வேறே மோட்சம் நிரூபிப்பார்கள். சௌத்திராந்திகன் சகலமாய் இருக்கிற துக்கங்களுக்கும் காரணமாய் இருக்கிறதேகம் என்கிற அவாவிடயநாசமே பரமமுத்தி என்றும்; பௌத்தரிலே சிலர், உபத்திரவம் அற்றிருக்கிற சித்தசந்ததியே மோட்சம் என்றும்; சிலர், சித்த சந்தானம் அற்றுப் போவதே பரம மோட்சம் என்றும்; ஆருகதன் எப்போதும் மேலே போகிறதே பரம மோட்சம் என்றும்; சாங்கியர் பிரகிருதியின் விகாரங்களுடைய வியாபாரம் அற்ற அள வில் புருடனுக்குச் சொரூபமாய் இருக்கிறதே பரம மோட்சம் என்று கூறுவர்.

யோகர், சாத்துவிகமாய் இருக்கிற பிரகிருதி யோகமே பரம மோட்சம் என்றும்; அவரவர்கள் பத்தர்கள், கணபதி, இந்திரன், சூரியன், பிரமா, விஷ்ணு, உருத்திரன் இவர்களுடைய சாலோக்கி யம் சாமீப்பியம் சாரூப்பியம் சாயுச்சியமே பரம மோட்சம் என்றும்; சிலர், சீவான்மாவுக்குப் பரமான்மாவிலே லயிக்கிறதே பரம மோட் சம் என்றும்; நையாயிகர், அத்தியந்தமான துக்கமற்றுப் போகிறதே பரம மோட்சம் என்றும்; பாட்டா சமயிகள் நித்தியமான சுகம் விளங்குவதே பரம மோட்சம் என்றும் சொல்லுவர். சிலர் முத்தி யிலே ஆன்மாக்களுக்கெல்லாம் கிரியாசத்தி விளங்குவது மாத்திர மன்று, பின்னை என்னையெனில்? கிருத்தியம் பண்ணுகிறதும் உண்டு; சிவன் தனக்கு ஒத்திருக்கிற முத்தான்மாவிலே சகத் உண்டாக்கு கிறது கூடும் என்றும்; மறைகையிலே கர்த்தா அல்ல ஆகையால் கர்த்தாவாய் இருக்கிற சிவனைக் காட்டிலும் அதிக கிருத்தியம் பண்ணுகிறது பரம மோட்சம் என்றும் சொல்லுவர்; சிலர் சர்வஞ் ஞனாய் இருக்கிற ஈசுவரனைக் காட்டிலும் முத்தனுக்கு ஆதிக்கம் இருக்கப்பெற்று, சர்வகர்த்தாவாயும் சர்வஞ்ஞனாயும் இருக்கிற சிவ னுடனே சரியாயிருக்கிறதே முத்தி என்றும் சொல்லுவர்.

இன்னும் சாமீப்பியத்தை நான்காகச் சொல்வார்கள். எவ்வா றெனில்? பாசுபதர்கள் ஈசுவரனிடத்திலே இருக்கிற சர்வஞ்ஞத்

துவம் ஆன்மாவினிடத்திலே சங்கிரமிக்கிறதே பரமமோட்சமாம் என்றும்; மகாவிரதர் தமக்கு அப்போது சர்வஞ்ஞத்துவமுண்டா கிறதே பரம மோட்சம் என்றும்; சிலர், சர்வஞ்ஞனைகயால் சம சைவ ஏகதேசிகள் சத்தியமாய் மலத்திலே ஆவரிக்கப்பட்டிருக் கிறதினுல் சர்வஞ்ஞனைக்கும் சர்வகர்த்தா ஆகைக்கும் தடையான மலம் போகையினுலே விளங்குகிறதே பரமமோட்சம என்றும்; மாயாவாதிகள் அநிர்வசனமான அவித்தை நிவாததியினுலே ஆனந்தத் தைப் பெறுதல் பரமமோட்சம் என்றும கூறுவா. இவைகளெல்லாம் பரமமோட்சம் அல்ல.

சரீர நாசம், சித்தசந்தானம் கெடுதல், சீவ லயம், சொரூபாவத்தானம், அத்தியந்தமான துக்கம் கெடுதல் இவை பரம புருடார்த்தமல்ல, அறியப்படாதிருக்கையால்; அறியப்படாதது புருடார்த்தமல்லாதது. ஆகையால் சரீர நாசம், சிததசந்தானம் கெடுதல், சீவ லயம் என்னும மூன்றும் அறிகிறவனே இல்லாமற்போகையால், மற்றைச்சொரூபாவததானம் முதலான மூன்றிலும் சரீரம் முதலானவைகள் அங்கீகரியாதிருக்கையால், சுயம்பிரகாசமாக அங்கீகரியாதிருக்கையால், அறிகிறது கூடாதிருக்கையால், காணுபத்தியம் முதலான சாரூப்பியாதிகளுக்கும் புராணங்களிலும் ஆகமங்களிலும் மோட்சம் என்று சொல்லப்பட்டாலும் சரீரபந்தம் உண்டாகையால், அஃது உள்ள பொழுதே துக்கம் முதலானவையும் அவசியம் வேண்டுமாகையால், அச்சரீரம் காரியம் ஆகையினுலே அவசியம் கெடுதல் கூடுகையால், முத்தனுக்குத் திரும்பச் சென்மம் வர்த்திக்கையினுலே திரும்பச் செனியாதிருக்கிற பரம புருடார்த்தமான பரமமோட்சம் ஆகைகூடாது. பின்னை யாது? எனில், குணமுத்தியாதல் கூடும்; ஆகையினுலே, அதுவும்தானே எப்பொழுதும் ஊர்த்துவகமனம் சாத்தியமாய் இருக்கிற பிரகிருதியோகமும் பரம மோட்சம் ஆகைகூடாது.

இவைகள் இரண்டும் சரீரம் ஆகையினுலே முன்சொன்ன பட்சத்திலே உள்ள தூடணங்கள் இவற்றிற்கும் வருகையாலும் உபத்திரவம் அற்ற சித்த சந்ததியும் அப்பிரமாணியம் ஆகையினுலும், புருட

னாலே அபேட்சிக்கப்படாதிருக்கையினாலும் பரமமோட்சமல்ல. சிவனைக் காட்டிலும் அதிகமாகை ஒருக்காலும் கூடாது ஆகையால் சிவாதிக்கமும் பரமமோட்சமல்ல. சங்கிராந்தரூபம் ஆகிய சாம்யம் சிவனிடத்திலே ஞானம் இல்லாமற் போகப் பண்ணுகையால் அதுவும் யோக்கியமல்ல; ஆகையால், அது பரமமோட்சமல்ல. உற்பத்திசாமியமும் அநித்தியமாகத் தெரிகையால் கூடாது; ஆகையால் அது பரமமோட்சமல்ல. ஆட்சேபமான சாம்யம் முத்தனுடைய ஞானதசையைத் தெரியாதபடி பண்ணுகையால், அபேக்ஷிக்கப்படாதிருக்கையால் பரமமோட்சமல்ல. சைவ ஏகதேசிகள் சொல்லுகின்ற வேறே ஒருபடித்தான சாமியம் ஏகதேசத்திலே ஒப்பாகி எல்லாருக்கும் சாதாரணம் ஆகையால் சாமியம் ரூபமல்ல. எல்லாம் மொத்தார்த்தமாய் இருக்கிற முத்தி என்கிறதில் சங்கையே இல்லை. நித்தியமான சுகம் விளங்கும் என்கிற பட்சத்திலே விளங்குதலாவது ஆணவம் அபிபவம் படுவதுமாத்திரமாகில் அப்போது நமது மதத்தைப் பிரவேசித்ததே. ஞானம் அப்போதாகில் அநாதியாகிற புருடார்த்தமல்ல. உண்டானதாகில் அநித்தியமாகும். அநிர்வசனீயமான அவித்தையிலே மரணம் இல்லாதிருக்கையால் மாயாவாதி சொல்லுகிற முத்தியும் பரமமோட்சம் அல்ல. பின்னை பரமமோட்சம் யாது? எனில், ஆவாரகமாயும், விட்சேபமாயும் இருக்கிற மலமாயாதி பாசக்ஷயத்திலே பரமானந்தமான சிவ தாதான்மியத்தினுடைய அபிவியாப்தியே பரமமோட்சமாம் என்க.

இனி, மோட்சசாதனம் ஞானம் பிரபத்தி வைராக்கியம் என மூன்று. இவற்றில், ஞானமாவது : தத்துவரூபம், தத்துவதரிசனம் தத்துவசுத்தி, ஆன்ம ரூபம், ஆன்ம தரிசனம், ஆன்ம சுத்தி : சிவ ரூபம், சிவ தரிசனம், சிவயோகம், சிவபோகம் ஆகிய இந்த தசவிதத்தையும் குருகடாட்சத்தினாலே அறிந்து அநந்நியமாயிருக்கிற சிவபோகமே என அறிக.

இவ்வாறு கூடுவது அரிதாகில்; எங்கும் சிவம் வியாபகமாய் இருக்கிறதையும், அவனிடத்திலே எல்லாம் இருக்கிறதையும்,

அவன் அருள் வழித்தன்றி ஒன்றுமயினும் அறியமுடியாது என்பதை யும் அறிந்து, அவன் ஏவலின்படி செய்கிறோம் என்று எல்லாப்போ கத்தையும் சிவார்ப்பணம் பண்ணி, நாம் ஒருவன் ஏவற்பணி செய் கையால் நமக்குப் புண்ணிய பாவம் என்று ஒன்றில்லை எனத் தன்னைப் பின்னிட்டுச், சிவனை முன்னிட்டுக்கொண்டு அவனுடைய ஆதீனம் ஆகிப் பஞ்சாக்கரத்திலே திரிபதார்த்தத்தின் உண்மையை அறிந்து, பாசத்தைக் கீழாக்கிப் பரசிவதசை முன்னாக்கி, விதிப்படி உச்சரித்துக்கொண்டு, வாசனைக்ஷயம் பண்ணி, விற்பன்னனாகி யிருப்பதாகப் பாவித்துத் தான் செய்கின்ற கிரமத்திலே முன் சொன்ன சிவாநுபவம் கூடும்.

இதுவும் அரிதாகில், குரு-லிங்க-சங்கமத்திலே வழிபட அஞ் ஞானம்போய்ச்சிவஞானம் பிரகாசித்து முன்சொன்ன சிவாநுபவம் பெற்றிருப்பன் என்க.

ஞானமிர்தக்கட்டளை முற்றிற்று.

திருச்சிற்றம்பலம். திருச்சிற்றம்பலம். திருச்சிற்றம்பலம்.

ஸ்ரீ மெய்கண்ட தேவர் மிளிர்கழல் வெல்க.

ஸ்ரீ பஞ்சாக்கர தேசிகர் பதமலர் வாழ்க.

ஸ்ரீ மாதவச் சிவஞான யோகிகள் மலரடி வாழ்க.

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

காலனையும் வென்றோம் கடுநரகங் கைகழன்றோம்
மேலை இருவினையும் வேரறுத்தோம்—கோல
அரணார் அவிந்தழிய வெந்தீயம் பெய்தான்
சரணார விந்தங்கள் சார்ந்து.

திருச்சிற்றம்பலம்

—காரைக்காலம்மையார்.

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# சுத்த சிவப்பிரகாசக் கட்டளை

## உண்ணிலைக்கருவிகள்

### ஆன்மதத்துவம்

பூதங்களாவன :— பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம் ஆக 5. ஞானேந்திரியங்களாவன :— சோத்திரம், தொக்கு, சட்சு, சிங்குவை, ஆக்கிராணம் ஆக 5. தன்மாத்திரைகளாவன:— சத்தம், பரிசம், ரூபம், ரசம், கந்தம் ஆக 5. கன்மேந்திரியங்களாவன :— வாக்கு, பாதம், பாணி, பாயுரு, உபத்தம் ஆக 5. அந்தக்கரணங்களாவன :— மனம், ஆங்காரம், புத்தி, குணம் ஆக 4.

சித்தம் மனத்தின் அவத்தை விசேடம் ,ஆகலான் ஒன்றாக வைத்து நாலென்றது. குணமும் அவ்வியத்தமாகிய பிரகிருதியும் ஒன்றாதலால் ஆன்மதத்துவம்–24.

இதற்கு ஆன்மதத்துவம் என்றும், போக்கியகாண்டம் என்றும், அசுத்ததத்துவம் என்றும் பெயர்.

### வித்தியா தத்துவம்

காலம், நியதி, கலை, வித்தை, அராகம் இவை ஐந்தும் கூடித் தத்துவ வன்னரூபன் ஆகிய புருடனும், அநந்த தேவரால் அசுத்த மாயையில் கலக்குண்டு முப்பத்தொருதத்துவத்தையும் மயில்முட்டைக்குள் சலம் அறிந்து தோன்றாது பொதுமையில் நிற்கும் அதோ பாகம் ஆகிய மாயாதத்துவமும் கூட ஏழுஆம்.

இதற்கு வித்தியாதத்துவம் என்றும், சுத்தாசுத்ததத்துவம் என்றும், போககாண்டம் என்றும் பெயர்.

## சிவதத்துவம்

சுத்தவித்தை, ஈசுரம், சாதாக்கியம், சத்தி, சிவம் ஆக 5.
இதற்குச் சிவதத்துவம் என்றும், சுத்ததத்துவம் என்றும், பிரேரகாண்டம் என்றும் பெயர். இவை முப்பத்தாறும் உண்ணிலைக் கருவிகள்.

## புறநிலைக்கருவிகள்

பிருதிவியின்கூறு–மயிர், எலும்பு, தோல், நரம்பு, தசை ஆக 5.
அப்புவின்கூறு –ஓடுநீர், உதிரம், சுக்கிலம், மூளை, மச்சை, ஆக 5.
தேயுவின்கூறு –ஆகாரம், நித்திரை, பயம், மைதுனம், சோம்பு ஆக 5.
வாயுவின்கூறு –ஓடல், இருத்தல், கிடத்தல், நடத்தல், நிற்றல் ஆக 5.
ஆகாயத்தின் கூறு–காமம், குரோதம், லோபம், மோகம், மதம் –ஆக 5. ஆகப்பூதகாரியம்–25.

**தசவாயுக்களாவன—** பிராணன், அபானன், உதானன், வியானன், சமானன், நாகன், கூர்மன், கிரிகரன், தேவதத்தன், தனஞ்சயன் ஆக 10.

**தசநாடிகளாவன—** இடை, பிங்கலை, சுழுமுனை, காந்தாரி, அத்தி, சிங்குவை, அலம்புடை, புருடன், குகு, சங்கினி ஆக 10.

**சுத்தமாயா விரிபுவனங்களாவன ;** சத்தம், பரிசம், ரூபம், ரசம், கந்தம் ஆக 5. முன்சொல்லிய சத்தாதி வேறு ; அது தன்மாத்திரைகளாகிய தத்துவம் : இது விஷயமாகிய புலன். முக்குணமும் அவ்வியத்தத்திலும், மூன்று ஆங்காரமும் ஆங்காரத்திலும் அடங்கி ஆன்மதத்துவத்துள் அடங்கும். வாக்கு நாலும் விந்துவில் அடங்கும் : ஆகப்பத்தும் புறக்கருவிகள் அல்ல.

ஆசயம் ஐந்தாவன: மூத்திராசயம், மலாசயம், ஆமாசயம், பக்குவாசயம், கருப்பாசயம் ஆக 5, ஆகப்புறநிலைக்கருவிகள் 60.

கோசம் 5, ஏடணை 3, வியாதி 3, மண்டலம் 3, ஆதாரம் 6, கிலேசம் 5 ஆக இந்த இருபத்தைந்தையும் கூட்டிப் பூதகாரியம் இருபத்தைந்தையும் பூததத்துவத்துள் அடக்கிப் புறநிலைக்கருவிகள் 60 என்றலும் ஒன்று. ஆகத்தத்துவம் 96. விரிவு 121. இன்னும் மிகுந்து விரியும் என்க.

இனி, பரமசிவனுடைய பராசத்தி அருளினாலே ஞானசத்தியில் ஒருகூறு சுத்தமாயையிற் பதிய நாதம் தோன்றும். அந்த ஞான சத்தியில் ஒருகூறு கிரியாசத்தி, கிரியாசத்தியில் ஒருகூறு நாதசத்தியில் பதிய சத்திதத்துவம் தோன்றும், அச்சத்தி தத்துவம் ஆகிய விந்துவிலே இச்சாசத்தியில் ஒருகூறு பதிய சாதாக்கிய தத்துவம் தோன்றும். அந்தச் சாதாக்கிய தத்துவத்தில் இந்தக் கிரியை ஏறி ஞானம் குறைந்து பதிய ஈசுரதத்துவம் தோன்றும். இந்த மகேசுர தத்துவத்தில் ஒரு கூற்றிலே ஞானசத்தி மிகுந்து கிரியாசத்தி குறைந்து பதிய சுத்தவித்தை தோன்றும். ஆக இவ் ஐந்துதத்துவத்தின் காரணமாகிய சுத்தமாயையில் இருந்து சிவதத்துவத்துடனே நாலுவாக்கும், ஐம்பத்தொரு அக்கரமும், எண்பத்தொரு பதமும், சத்தகோடி மகாமந்திரங்களும், பத்து நாதம் முதலியவைகளும், 20 புவனங்களும், பஞ்சகலைகளும் தோன்றும். பஞ்சகலை விந்துவின் விரி என்றலும் ஒன்று, விந்துவிலே பத்து விந்துவும் தோன்றும், இச்சுத்தமாயையிலிருந்து சுத்தகாலம் முதலிய முப்பத்தொன்றும், சரியையில் உண்மைச் சரியையாதியுடையோருக்குச் சாலோகமாதியும், வேதாகம புராணம் முதலிய பதினெண் வித்தையும், அபரமுத்தர் முதலிய சுத்ததத்துவ வாசிகளுக்குத் தனுகரணாதியும் 28 புவனமுதலியதும் தோன்றும் என்க இன்னும் இவற்றின் விரிவு வெகுவாயுள்ளன; சிவாகமங்களிற் காண்க.

இந்தத் தத்துவத்தின்கீழே அசுத்தமாயையின் ஊர்த்துவ பாகத்திலே விஞ்ஞானகலர் பிரளயாகலர்களுக்குத் தனுகரணபுவன போகாதிகள் தோன்றும். இந்த மாயையின் அதோபாகத்திலே

அநந்ததேவர் சத்தி கலக்கக் கலக்குண்ட பாகமாகிய ஆநந்தமய கோச வடிவாகிய மாயாதத்துவம் தோன்றும். இந்த மாயாதத்து வத்தில் ஒருகூற்றிலே அநந்ததேவரது கிரியாசத்தியில் ஒருகூறு பதியக் காலமும், நியதியும், கலையும தோன்றும். இந்தக் கலையில் ஒரு கூற்றிலே அநந்ததேவரது ஞானசத்தி பதிய வித்தையும், அவ் வியத்த குணமாகிய மூலப்பிரகிருதியும் தோன்றும். இந்த வித்தை யின் ஒருகூற்றிலே அநந்ததேவரது இச்சாசத்தியில் ஒருகூறு பதிய அராகதத்துவம் தோன்றும். அநந்ததேவராதிகளிடத்திலிருந்து பதியும் இச்சையாதிகள் எல்லாம் திரோதையில் ஒருகூறு சீகண்ட ருத்திராதி மூவரிடத்திலிருந்து பதியும் சத்திகளும் திரோதையில் ஒருகூருகிய இச்சையாதியில் தூலதூலம்போல வந்த அவதரம் எனக் கொள்க. இந்தத் தத்துவம் அஞ்சும் கூடியது புருடதத்து வம் எனப் பொதுவாய் நின்ற ஆன்மாவுக்குப் பெயர். இந்தக் கஞ்சுகசரீரம் அபரமுத்திபரியந்தம் நீங்காது. கலாதியொடும் சேர லிலன் என்றது காரண கேவலம். காரியகேவலத்தில் கலாதி கஞ்சு கத்துடன் சகலகேவலமாய் உறுவன், அவ்விடத்தில் கலாதி தொழிலற்று ஆன்மாவுடன் கிடக்கும் ; ஒரு கணப்பொழுது துரிய மாதியில் சூக்குமம் ஆதியாகக் கலாதிதொழிற்படும். ஒரு கற்பத் தில் மூலப்பிரகிருதி அநந்ததேவர் சத்தியில் தோன்றும். ஒரு கற் பத்தில் சீகண்டருத்திரராகிய குணிருத்திரர் சத்தியில் ஒருகூறு கலை யில் பதியக் கலையினின்றும் அவ்வியத்த குணவடிவாகிய மூலப்பிர கிருதி தோன்றும். அம்மூலப்பிரகிருதியிலே உருத்திரசத்தி பதியப் பதிய அவ் இச்சையாதி ஐந்தும், வியத்தவடிவமாகிய முக்குணமும், புத்தியும் தோன்றும். புத்தியிலே உருத்திரதேவ நாயனரது இச்சா ஞானக் கிரியை பதியப் புத்தியில் அராகாதியும், புத்தியில் அஞ்ஞா னதியும், புத்தியில் கிரியையாதியும் அனேக விதங்களாய் விரிந்து தோன்றும். இப்புத்தியினின்றும் ஆங்காரம் தோன்றும். இந்த ஆங்காரம் ஒன்ருய் இருந்து மூன்றுவிதமாய் உருத்திரதேவநாயனர் இச்சையினலே விரியும். அது தைசத ஆங்காரம், வைகாரிக ஆங் காரம், பூதாதி ஆங்காரம் என முக்குண ரூபமாய் அவ்வப்பொருள் உண்மை அறியப் பெயர் பெறும். அந்தத் தைசத ஆங்காரத்தில் ஒரு கூற்றிலே சத்துவகுண ரூபமாகிய மனமும், ஞானேந்திரியம்

ஐந்தும் தோன்றும். மனத்தின் ஒருகூறே சித்தம் என்பது: வேறில்லை. இராசதகுண ஆங்காரத்தில் ஒருகூறாகிய வைகரியிலே கன்மேந்திரியம் ஐந்தும் தோன்றும். பூதாதி ஆங்காரத்தில் ஒரு கூற்றிலே உருத்திரதேவநாயனார் கிரியாசத்தி பதிய சத்தாதி தன் மாத்திரை ஐந்தும் தோன்றும். சத்த தன்மாத்திரையில் ஆகாசமும் பரிசதன்மாத்திரையில் வாயுவும், ரூபதன்மாத்திரையில் தேயுவும், இரச தன்மாத்திரையில் அப்புவும், கந்ததன்மாத்திரையில் பிருதிவி யும் தோன்றும். இந்தப்பூதம் ஐந்திலும் புறக்கருவிகள் எல்லாம் தோன்றும். அன்னமயம், பிராணமயம், மனோமயமாதி மூன்று உடலும் ஆன்மதத்துவமாகிய கேரசஉடல், இந்த வித்தியா தத்து வத்தில் விஞ்ஞானமய கோசமும், ஆனந்தமய கோசமும் ஆக ஐந்தவத்தைப்படும் ஐந்திடத்தில் உண்டாகிய உடல் என அறிக. ஒடுங்குங் காலம் தோன்றிய முறையில் ஒடுங்கி இருபத்துநாலும் உருத்திரனிடத்திலும், ஆறும் அநந்ததேவரிடத்திலும், சுத்ததத்து வம் சத்தியிலும் ஒடுங்கும் என்பது ஆன்மதத்துவம் இருபத்து நாலினும் மும்மூர்த்திகளாகச் சொல்லியது பிரம விட்டுணுக்களிடத் திலே உருத்திரசத்தி பதிந்து அவர் ஏவலால் படைத்தல், காத்த லாதி அவாந்தரத் தொழில் பற்றி என்பதறிக. அநந்ததேவர் முதலி யோர் செய்யும் தொழிலெல்லாம்,ஏகதேச மூத்தொழில். நிவிர்த்தி கலை முதலிய ஐவகை இறுதிச் சங்காரம் ஆகிய சர்வசங்காரம் முத லிய சர்வ காரணனே சங்கற்பமாதியால் சர்வ கிருத்தியமும் செய்ய மற்றைக் கடவுளர்கள் தாய் தந்தை முதலியோர் போல அவாந்தர காரணர் என்பது அறிக.

பிருதிவி உரத்துத்தரித்தல் முதலிய குணம் தொழிலாதியை உடையது. அப்பு குளிர்ந்து பதம் செய்தலாதியை உடையது. தேயு சுட்டு ஒன்றுவித்தலாதியையுடையது. வாயு சலித்துத்திரட்ட லாதியை உடையது. ஆகாயம் நிரந்தரமாய் இடங்கொடுத்தலா தியையுடையது.

பொன்னிறம் முதலியதும், நாற்கோணம் முதலியதும், அட் சரம் தெய்வம் கலை முதலியதும், சத்தமாதிய குணம் முதலியதும் விரித்தறிந்து கொள்க.

இனி, சோத்திரம் சத்தகோடிகளை அறியும்; சட்சு உருவ கோடிகளை அறியும்; சிங்ஙுவை ரசகோடிகளை அறியும் ஆக்கிரா ணம் கந்தகோடிகளை அறியும், வாக்கு வசனிக்கும், பாதம் கமனம் பண்ணும், பாணி இரத்தல் ஏற்றல் செய்யும், பாயு மலசலத்தைப் பிரிக்கும், உபத்தம் ஆநந்தத்தை விடும். சித்தம் சிந்திக்கும், மனம் அதைப்பற்றிச் சங்கற்பவிகற்பம் செய்து ஐயப்படும். ஆங் காரமானது மனம் ஐயப்பட்டதை இன்னதென்று நிச்சயிக்க வேண்டும் என ஒருப்பட்டு எழுந்திருக்கும். அதன்பின்பு புத்தி நிச்சயிக்கும். இந்த புத்தி நிச்சயித்த சத்தாதி போக்கியம் ஐம் பொறி வழியானே மனத்தின் வழிச்சென்று புத்தியிலே வந்தபிறகு புத்திதத்துவமானது வினைக்கு ஈடாகிய சத்தாதிப் பிரமேயங்கள் முக்குணமாய்ச் சடுதியிலே பரிணமிப்பதைப்புருடதத்துவ சொரூபி யாகிய ஆன்மஞானம் அவ்வவர் மெய்மயமாய்ச் சுகதுக்க மோக வடிவாய் அறிந்து அழுந்தும், இதுவே ஆன்மாவுக்குச் சுகதுக்க மாகிய போகம் என அறிக. இது சித்தம் மனம் ஆங்காரம் புத்தி குணமுறைமையாய்ச் சத்தாதி போக்கியம்வந்து புருடான்மாவுக் குப் போகமாம். இதுவே தன்வேதனைக் காட்சி என்பது, ஆகம ஞானம் வல்லார் வாய்க்கேட்டறிக

இனி, மாயையிற் கலக்குண்ட அதோபாகமாகிய மாயா தத்து வமே காரண சரீரமாய் நின்று மயக்கும், காலம் செல்காலம் முதலியனவாய்த் தூல சூக்கும பேதாதி எண்ணிலா வகையாம். நியதி எண்ணிலாத கன்மங்களை ஏறுமல் குறையாமல் அவ்வவர் கன்ம வரையறவுக்குத் தக்கபடி நிச்சயம் பண்ணும். கலை அள விலா உயிர்களிடத்திலும் அளவிலாவகையாய் ஆணவத்தைச்சிறிது நீக்கி உயிர்களது கிரியாசத்திகளைச் சற்றே எழுப்பும். வித்தை ஆன்மாக்களது ஞானசத்தியைக் கொஞ்சம் எழுப்பும். அராகம் பெற்றதைச் சிறிதாக்கிப் பெறுததிலே இச்சையை உண்டாக்கும். புருடன் புத்தியில் பரிணமித்த சத்தாதி பிரமேய விடயத்தில் அழுத்தும், இந்த வித்தியாதத்துவம் ஆறும் பிரளயாகலருக்குத் தனுகரணுதியாய் இருக்கும். விஞ்ஞானகலருக்கு அசுத்தமாயைக்கு மேலே, சகலருக்குப் பிரகிருதிமாயைக்குள்ளே தனுவாதி என அறிக.

இனி, சகலராவார் விட்டுணுமுதல் கிருமி ஈறாகிய உயிர்கள். பிரளயாகலர் புவனகர்த்தாக்கள் முதலிய அனந்தருத்திரர். விஞ்ஞான கலராவார் மகேசுரர் ஆதியோர் என்க.

இனி, சுத்தவித்தை ஞானம் ஏறிக் கிரியை குறைந்திருக்கும். ஈசுரம் கிரியை ஏறி ஞானம் குறைந்திருக்கும், சாதாக்கியம் ஞான மும் கிரியையும் ஒத்திருக்கும். சத்திதத்துவம் கிரியையாய் இருக் கும், சிவதத்துவம் ஞானமாய் இருக்கும். சிவதத்துவம் சிவனுக்கு இடம்; இது நாதம், இலயம், நிட்களம் முதலிய பேர் பெறும், இதிலுள்ள வாசிசரும் இப்பெயர் பெறுவர். சத்திதத்துவம் காருண்ணியத்துக்கு இடம். விந்து முதலிய நாமம் உடையது சாதாக்கியதத்துவம் அநுக்கிரகத்துக்கு இடம். இது சகளநிட் களம் உத்யுத்தம் முதலிய நாமங்களும் உடையது. இதிலுள்ள கடவுள் முதலியோரும் இப்பெயர் பெறுவர். முன்னைய இரண்டும் அருபதத்துவம்; இது ருபாருபதத்துவம்; இனி ருபதத்துவம், ஈசுரம் திரோபவத்துக்கு இடம். இது நாலதத்துவம், சகளம், அதிகாரம், பிரவிருத்தி முதலிய நாமங்களும் உடையது. சுத்த வித்தை சங்காரத்துக்கு இடம். இஃது உருத்திரம், நூலாதிகாரம் முதலிய நாமங்கள் உடையது. மாயை முதலிய முப்பத்தொரு தத்துவங்களும் அதிதேவதைகளும் பரியாய நாமங்களும் விரிந்த நூலுட்காண்க. பரவிந்து பரநாதம் அபரவிந்து அபரநாதம் முதலியனவும் புறக்கருவிகள் நிற்கும் நிலை குணம் தொழில் முதலி யனவும் விரிக்கிற் பெருகும்.

இனி, பிருதிவி தத்துவமாவது அப்பு தத்துவத்துக்குள் வியாப் பியமாய் இருக்கும். இந்தப் பிருதிவிதத்துவத்துக்கு மேலும் கீழும் பக்கமும் பத்துமடங்கு அதிகமாய் வியாபித்திருக்கும் அப்பு தத்துவம். தேயுவும் இப்படி அப்புவுக்குப் பத்துமடங்கு வியாபக மாய் இருக்கும், வாயு, ஆகாயம், தன்மாத்திரை, சத்தாதிதத்து வங்கள் மனம் ஆதியாக ஆன்மதத்துவம்வரை ஒன்றற்கொன்று பதின்மடங்கு அதிகமாய் முறையே வியாபித்திருக்கும், புருடன், அராகம் முதலிய வித்தியாதத்துவங்களும் முன்போல நூறுநூறு மடங்கு அதிகம் அதிகமாக வியாபித்திருக்கும். அப்பால் சுத்த

வித்தையானது காலதத்துவத்துக்கு மேலும் கீழும் நடுவும் பக்கங் களும் வியாபித்து ஆயிரம் ஆயிரம் மடங்கு அதிகமாக வியாபகமாய் இருக்கும். அதற்குமேல் ஈசுவரதத்துவம் முதலிய மூன்றும் முறையே பதினுயிரமும், நூறுயிரமும், பத்துநூறுயிரமும் வியாபித் திருக்கும். சத்திதத்துவத்தை நோக்கச் சிவதத்துவம் அளவிறந்த கோடிமடங்கு அதிகமாய் வியாபித்திருக்கும் அதற்குமேல் கிரியா சத்தி இப்படி அளவிறந்த 36 தத்துவம் முதலிய ஆறத்துவாக் கள் எண்ணில்லாத எல்லாவற்றையும் அளவிறந்த கோடி வியாபக மாய் எங்கெங்கும் ஒன்றுயும் வேறுயும் உடனுயும் வியாபித்திருக் கும். இந்தக்கிரியாசத்தியும் சிவனுடைய ஞானசத்தியில் அளவி றந்த கூற்றில் ஒரு பங்கு, இந்த ஞானசத்தியும் இச்சாசத்தியில் அளவிறந்த கூற்றில் ஒரு பங்கு இந்தக்கிரியை ஞானங்களுக்குள் ளாக எண்குணமாகிய சாட்குண்ணிய விரிவுகள் அளவிறந்தன.

இவைகளும் திரோதையாகிய ஆதி சத்தியில் அளவிறந்த கூற் றில் ஒருபங்கு ஆதிசத்திக்கு மேலும் கீழும் நடுவும் பக்கமும் அனந் தங்கோடி எண்ணிறந்த பங்கு அதிகமாய்ச், சர்வவியாபகமாய்ப், பராசத்தி அருள, இந்த அருள் அளவிறந்து செறிந்து பேரறிவா னந்தாதீதமயமாய் நிற்பது ... மாகிய குணிசிவம் என்பது. இது கயிலாச பரம்பரையில் அநுபவமுடைய தேசிகரை வழிபாட்டு முறைமையில் வழிபட்டுச் சிவபேதமாகிய உண்மை ஆகமங்களைக் கேட்டுச் சிந்தித்துத் தெளிந்து பார்த்தல் பரிசித்தல் தழுவுதல் உபதேசித்தல் ஓதல் பாவித்தல் முதலிய அநுபோகத்தால் அறிக.

**இது சர்வசங்கப்பரித்தியாகம் பண்ணுதவர்களுக்குச் சித்தியாதல் அரிது. இந்த மெய்கண்ட நூற்பொருளை அந்தக் குருபரம்பரையில் அநுபவமுடைய தேசிகர் திருவருள் பெருது தாஞக எடுத்துப் பாாத்த பொய்க்குருபரம்பரையில் கேட்டாலும் பார்த்தாலும் பெரிய பிராயச்சித்தம் உண்டென்பது சிவதரு மோத்தரம் முதலிய சிவாகமத்தால் அறிக.**

இனி, இந்தத்தத்துவம் முப்பத்தாறின் பிரேரகக்கருவி ஐந்தும், வித்தியாதத்துவமும் அகக்கருவி; அந்தக்கரணம் அகப்புறக் கருவி, இந்திரியம் பத்தும் புறக்கருவி; தன்மாத்திரையாகிய சத்தாதியும்

பூதம் ஐந்தும் ஆகப்பத்தும் புறப்புறக் கருவி. புறப்புறக்கருவியைப் பொருளாகக் கொண்டது உலகாயதம் முதல் புத்தம் ஈறுகிய சமயம். புறக்கருவியைப் பொருளாகக் கொண்டோர் சைனன் முதலியோரும் புத்தரில் ஒரு சாராரும் ஆம். அகப்புறக் கருவியைப் பொருளாகக் கொண்டோர் தார்க்கிகர் முதல் சாங்கியர் ஈறான அறுவருமாம். அகக்கருவியைப் பொருளாகக் கொண்டோர் வேதாந்தத்தின் நிற்கும் காபாலம் முதல் சாத்த முதலிய அறுவரும் ஆகக் காலதத்துவம் வரை தத்துவங்களில் முத்திபெறுவர். இப்படி எட்டுச் சமயங்களும் பொருளல்லவற்றைப் பொருளென்று கொண்ட பொய்தரு சமயம் என அறிக. கலாதீதம் ஆகிய பிரேரக தத்துவத்தில் நிற்கும் மெய்தரு சமயம் ஆறு. அது, சிவாகமத்துள் வந்த எட்டுச் சைவமும் என அறிக. அப்பால் தத்து வாதீ தத்தில் வந்த சுத்த சைவரும், சூக்கும இலய சிவத்தைப் பொருளாகக் கொண்டோர். இவர்களுக்கும் எட்டாத சித்தாந்திகள் அருளினும், குணியினும் நிற்கும் உண்மையாளர் என அறிக.

இனி, சுத்ததத்துவத்துக்குள்ளே சுத்தாவத்தையைக் கொண்டோர் எண்மரும், சுத்ததத்துவங்களுக்குள்ளேயும் சிறிது சிவ தத்துவ அதீதத்துவம் பேசிக்கொண்டவர் சுத்த சைவர். சித்தாந்த சைவர் முப்பத்தாறும்விட்டு அப்பால் ஆன்மவியாபக தரிசனமாதி முதற் சாக்கிராதி கொண்டவர்கள். ஆகையால், சித்தாந்த சைவத்துக்குச் சுத்தசைவர் ஈறானவர்களெல்லாம் அங்கம் உபாங்கம் பிரத்தியாங்கங்களாதியாய்ப் புறம் புறப்புறமாகிய நாத்திகப் பொய்தரு சமயிகள் என்று அகற்றுக. இந்திரியத்தால் வழிபடும் தாதமார்க்கரும், இந்திரியத்தாலும் மனத்தாலும் வழிபடும் புத்திரமார்க்கரும், மனமாதி பிராசாதகலை ஞானங்களால் வழிபடும் சகமார்க்கரும், தற்போதத்தால் வழிபடும் பொதுஞானமார்க்கரும் என நால்வர். இவர்களுக்கெல்லாம் எட்டாத தத்துவாதீத சன்மார்க்கங்களும் அறிந்து வியாபித்துச் சர்வவியாபக அறிவால் வழிபடும் சிவஞானிகளே முதன்மைபெற்றவர். மற்றையோரெல்லாம் வழிப்பட்டவர்கள். சித்தாந்த சைவத்துக்குமேலே நிலையில்லை. இதுவே முடிந்த பரமுத்திநிலை என்று அறிக.

இனி, கேவலம் சகலம் சுத்தம் என மூன்றவத்தை உண்டு. அவற்றுள், கேவலமாவது மல......மளேய நின்ற அவதரம். சகல மாவது எல்லாக்கருவிகளோடும் கூடிநின்று வினைப்பயனை அநுப விக்கும் அவதரம். சுத்தமாவது கருவிகளும் வினையும் மலமும் பற்றற வாசனையை நீங்கும் அவதரம். இந்த மூன்றில் சகலா வத்தை ஒன்றிலே மூன்றவத்தை உண்டு. அது சகலத்தில் கேவலம், சகலத்தில் சகலம், சகலத்தில் சுத்தம் என மூன்று வகைப் படும். இவற்றுள் சகலத்தில் கேவலம்:- உணர்த்தும் முறைமைத் தானமாகிய இலாடத்தானத்தினின்று நீங்கி மூலாதாரத்தில் செல் லும்போதும் மூலாதாரத்தினின்று இலாடத்தானத்தில் செல்லும் போதும் இலாடம் கண்டம் இதயம் நாபி மூலம் என்ற ஐந்து இடங் களிலும் நிகழும் ஐந்து அவதரம். சகலத்திற் சகலம் –இதயம்முதல் துவாதசாந்தபரியந்தம் பிரத்தியாகாரம் முதல் யோகமார்க்கமாய்ப் படும் ஐந்து அவதரம். சகலத்தில் சுத்தம்:–இவற்றுள் அகக்கருவி முப்பத்தாறும், புறக்கருவி அறுபதும் ஆக-96 தத்துவங்களோடும் கூடிநின்று பிரேரக அவத்தையில் கண்டு கேட்டு உண்டு உயிர்த்து உற்றறிந்து வரும். அங்ஙனம் தொழிற்படும் தத்துவங்களான சோத்திராதி, வாக்காதி ஆகிய பத்து இந்திரியங்களும் விடயங் களை விடயிக்கும் போது அவற்றிற்குத் துணையாய் உடன் நின்று ஊக்கத்தினை விளைவிப்பன ஆகிய பூதம் ஐந்து, தன்மாத்திரை ஐந்து என்னும் பத்துத்தத்துவங்களும் தத்தம் தொழில்கள் அனைத்தும் சத்திமடங்கி வினைக்கு ஈடாகத்தொழிற்படாதொழியும், பூதம் ஒழி யவே பூதகாரியமாகிய 60-ல் ஆங்காரத்தால் செலுத்தப்படும் பிரா ணாதி நாகாதி வாயு பத்தும், புத்தியால் நிச்சயிக்கப்படும் சத்தாதி வசனாதி விடயம்பத்தும் அவ்விருபது தத்துவம் உள்ளளவும் நிற்கும் ஆகலின் அவையொழித்து ஒழிந்த நாற்பது புறக்கருவியும் அப்பூதங்களோடும் நீங்கும். இவ் ஐம்பது கருவியும் நீங்கிய வழி ஏனைய இந்திரியம் பத்தும், அந்தக்கரணங்கள் நான்கும், வாயு பத் தும், விடயம் பத்தும் ஆகிய முப்பத்து நான்கு கருவியும், அவற் றோடும் கூடிச் சீவிக்கும் புருடதத்துவமும், புருடதத்துவத்துக்கு ஏதுவாகிய மனைவியும் கஞ்சுகமும்போல் உடனாய் நிற்கும் மூலப் பகுதியும், கலாதி பஞ்ச கஞ்சுகமும், கலாதி பஞ்சகஞ்சுகத்தைப்

ப்ரேரிக்கும் சுத்த தத்துவ பஞ்சகம் என்றும் முப்பத்திரண்டும் ஆக நாற்பத்தாறு கருவியும் தத்தம் தொழில் செய்துகொண்டு நிற்பினும் தன்மாத்திரையும் பூதமும் பூதகாரியங்களும் நீங்கினமையால் வலி குறைந்து இந்திரியங்களின் தொழிற்பாடு மெத்தென நிகழும் ஆகலின், அதனால் கண்டும் காணாமல் கேட்டும் கேளாமல் சுவைத்தும் சுவையாமல் மோந்தும் மோவாமல் பரிசித்தும் பரிசியாமல் கமனித்தும் கமனியாமல் ... வசனித்தும் வசனியாமல் விசர்க்கித்தும் விசர்க்கியாமல் ஆனந்தித்தும் ஆனந்தியாமல் இப்படிப் பத்து இந்திரியங்களுடைய தொழிலும் தளர்ச்சியும் நிகழும் அவதரம் சகலத்திற் கேவல சாக்கிரம்.

இனி, இந்திரியங்களும் சத்தி மடங்கித் தொழிற்படாமல் இலாடத் தானத்தினின்று ஒழிந்தவழி ஏனை அந்தக்கரணங்கள் நான்கும், விடயம் பத்தும், வாயு பத்துமாகிய இருபத்துநாலும் இவற்றோடு கூடிச்சீவிக்கும் புருடனும் புருடதத்துவ சொருபத்துக்கு ஏதுவான மூலப்பகுதி கலாதிபஞ்சகமும் அவற்றைச் செலுத்தும் கருவியாகிய சுத்ததத்துவ பஞ்சகமும் என்றும் முப்பத்தாறு கருவியும் கண்டத்தானத்தினின்றும் தொழிற்படுங்கால் அவ்விடத்து நனவேபோலக் கனவுக்கு ஏதுவாகிய சூக்குமதேகத்தோடும் கூடிநின்று வேறொரு பிரகாரம் மனம் மூன்றும் தொழிற்படாது சத்திமடங்கி ஒழியும். ஒழிந்தவழிப் புத்திதத்துவம் ஒழியவே அதனால் நிச்சயிக்கப்படும் சத்தாதிவிடயங்கள் பத்தும், ஆங்காரத்தில் செலுத்தப்படும் வாயுபத்தும், பிராணவாயு ஒழிந்த ஒன்பதும் அவற்றோடு நீங்கும், இங்ஙனம் இருபத்திரண்டு கருவியும் கண்டத்தானத்தினின்று ஒழிந்தவழி அங்ஙனம் ஆங்காரம் தனது சத்தி முழுவதும் மடங்கினும் பிராணவாயு ஒன்றுமாத்திரம் இயங்கும் அற்பசத்தியையுடையதாய் உடன் செல்லும் ஆகலின் அதனால் இயக்கப்படுவதாகிய அந்தப்பிராணவாயு ஒன்றும், மனத்தின் அவத்தை விசேடமாகிய சித்தம் ஒன்றும், இவற்றோடு கூடிச்சீவிக்கும் புருடன் ஒன்றும், அதற்கு ஏதுவான மூலப்பகுதி கலாபஞ்சகமும், அவற்றைச் செலுத்தும் சுத்ததத்துவபஞ்சகம் என்றும் பதினொன்றும் ஆகிய பதினூறு கருவியும் இதயத்தினின்று தொழிற்படுங்கால் புத்திதத்து

வம் இல்லாமையால் இன்னதென்று நிச்சயிக்கவராததாய்க் காக்கை இருந்த கொம்பு அசைவதுபோல நினைவு மாத்திரமாய் நிகழும் அவ தரம் **சகலத்திற் கேவல சுழுத்தி**

இனி, சித்தமும் தனது சத்திமடங்கித் தொழிற்படாமல்நின்று ஒழிய ஏனைய பதின்மூன்று கருவியும் நாபியினின்றும் தொழிற்படுங் கால் சித்தம் இல்லாமையால் நினைவும் இன்றிப் பிராணவாயு நிகழ்ச் சிக்கு ஏற்ப உண்ணுதல் மாத்திரம் பொதுமையில் நிகழும் அவ தரம் **சகலத்திற் கேவல துரியம.**

இனி, ஆங்காரத்தில் பிராணவாயுவை இயக்குவதாகிய அற்ப சத்திமடங்குதலில் பிராணவாயு தொழிற்படாது நாபித்தானத்தி னின்று ஒழிந்தவழிப் புருடதத்துவமும் அதற்கு ஏதுவான மூலப் பகுதி கலாபஞ்சகமும் அவற்றைச் செலுத்துவன ஆகிய சுத்ததத் துவ பஞ்சகம் என்னும் பன்னிரண்டு கருவியும் மூலாதாரத்தினின்று தொழிற்படும், அங்ஙனம் பிராணவாயுவும் இல்லாமையால் தொழில் விசேடம் ஒன்றுமின்றிச் சுத்ததத்துவங்களால் சூக்குமமாய்ச் செலுத்தப்படும் பஞ்சகஞ்சுக முடையானாகிய புருடன் மூலாதார மாகிய மனையாளைத்தழுவி அப்பொழுது விளையும் பஞ்சக்கிலேசத் துள் ஒன்றாகிய அவிச்சை மாத்திரத்தை விடயிக்கும் என்பது விழித்தபின்பு சுகமாய்த் தூங்கினேன் என்று அநுமித்து அறியப் படும் அவதரமாம் இப்படிச் சீவித்து மூடமாய் நிற்கும் அவதரம் **சகலத்திற் கேவலாதீதம்.**

அவிச்சையாவது தான் அல்லாத உடம்பைத்தான் எனக்கருது வதாம். அதுமூடம் என்றும் உரைக்கப்படும். இவ்விடத்திலே அவிச்சை மாத்திரத்தை விடயித்தற்கு ஏற்பச் செலுத்தும் கருவி ஐந்தனுள் ஏனைய நான்கு கருவியும் குறைந்து செலுத்தச் சூக்கும வாக்கொடும் கூடிய சத்திதத்துவங்களின் தொழிற்பாடு மிக்குச் செலுத்தும் எனவும் அதற்குக் ஏற்பக் கலாதிகளின் தொழிலும் அதிசூக்குமமாய் நிகழும் எனவும் கொள்க.

இப்படிக் கீழ்நோக்கிய அஞ்சவத்தைகளை முறையே அடைந்த புருடன் வினைக்கு ஈடாக மேற்செல்லும் பொருட்டுச் சூக்கும வாக்கொடும் கூடிய சத்திதத்துவங்களின் தொழிற்பாடு மிக்கு விளங்கும்போது பஞ்சக்கிலேசத்துள் அவிச்சை காரணமாக யான் எனது என்று அகம்பிரமத்திலாகிய அகங்கார முடையவனாய் நாபித்தானத்துப் பிராணவாயுவொடும்கூடி அவ்விடத்து முன்போலஉன்னுதலை உடையன் ஆவன்.

இனி, பைசந்தி வாக்கொடும் கூடிய சாதாக்கிய தத்துவம் மிக்குச் செலுத்த அதனானே கலை வித்தை அராகங்களால் முன்பு போலச் சூக்குமமாய் விளங்கிய இச்சா ஞானக் கிரியைகள் பின்பு மிக்கு விளங்குவதனானே முக்குண வயத்தனாய் மூலப் பகுதியி லுள்ள அவிச்சை அகங்காரங்களில் உண்டாகிய அவாவுதலையும் உடையனாகி இதயத்தானத்தின் நியதி முன்புள்ள சித்தத்தோடும் கூடி முன்புபோல நினைவு மாத்திரம் உடையனாவன்.

இனி, மத்திமை வாக்கொடும் கூடிய ஈசுரதத்துவம் மிக்குச் செலுத்தும் மூலப்பகுதியிலுள்ள அவிச்சை முதலிய மூன்றால் அவற்றால் நிகழும் விருப்பும் அதன் மறுதலைக்கண் நிகழும் வெறுப்பும் என்னும் பஞ்சக்கிலேசம் உடையனாய்க் கண்டத்தானத்தின் எய்தி அவ்விடத்தின் முன்நின்ற இருபத்திரண்டு கருவிகளோடும் கூடி முன்போலக் கனவு காண்பன்.

இனி, வைகரி வாக்கொடும் கூடிய சுத்தவித்தை மிக்குச், செலுத்தியவழி அவற்றொடுங்கூடி இலாடத்தானத்தின் எய்தி அவ்விடத்து முன்நின்ற பத்து இந்திரியங்களோடும்கூடி மயங்கிப் பின்பு எல்லாக் கருவிகளோடும் கூடிப் பிரேரகாவத்தைச் சாக்கிரத்தை அடைவன். இங்ஙனம் சகலத்திற் கேவலசாக்கிராதி ஐந்து கரணங்கள் இதில் இலாடத்தினின்று மேல் நோக்கிச் செல்லும்போது கனாக் காண்டல் உண்டு என்பதற்குச் சுருதி போற்றிப் பஃறொடையிலும் காண்க.

இங்ஙனம் இலாடத்தானம் முதலிய ஐந்தினும் முறையே தூல அநுபவமும், சூக்கும அநுபவமும், நினைவு மாத்திரமும், உண்ணுதல் மாத்திரமும், மூடமாதல் மாத்திரமும் ஆகிய ஐந்து பேதமாய்ப் புருடன் சீவித்தபின் நனவும் கனவும் உறக்கமும் உயிர்ப்பும் அடங்கலும் எனச் சகலத்திற் கேவலம் ஐவகைப்பட்டது. இந்த அவத்தைகளில் நிற்கும் கருவிகளின் கலாதிகள் ஆறும் சுத்த தத்துவம் அஞ்சும் ஆகிய பதினொருகருவிகளும் கூட்டி எண்ணுமல் நீக்கி முறையே முப்பத்தைந்தும், இருபத்தைந்தும், மூன்றும், இரண்டும், ஒன்றும் எனத் தொகை கூறியது. இவைகளில் புருட தத்துவத்தை உடன் எண்ணவே முறையே புருடதத்துவத்திற்கு ஏதுவாய்ப் புருடதத்துவம் உள்ளமட்டும் உடன் நின்று தொழிற்படும் கலாதியும் இவற்றைச் செலுத்தும் சுத்ததத்துவமும் அந்தத் தத்துவங்களின் உண்டு என்பது தானே ஏற்படுதலானும், ஒருக்கால் நின்றும் ஒருக்கால் நீங்கியும் அவத்தைக்கு ஏதுவாய் நிகழும் கருவிகள் மாத்திரம் எடுத்தோதவேண்டுமே அன்றி, அவ்வாறு அவத்தைக்கு ஏதுவாகாது புருடதத்துவ சொரூபத்துக்கு ஏதுவான கருவிகளை ஈண்டு எடுத்து ஓத வேண்டாமையானும், அஃது அறிந்து கொள்ளுதற்கேற்பப் புடைநூலாசிரியர் **'நீங்காக்கலாதிகள்'** என அடைகொடுத்து ஓதியருளினர் ஆகலானும், அவைகளை உடன் எண்ணுதல் பற்றி அவத்தைகட்கு ஆவதோர் பயனின்மையானும் என்க. **''நிலாவு சகலத்தில நின்றபூ தாதி, கலாதி சிவாதி கழித்து''** (செ-70) எனச் **சதமணிக்கோவையிற்** கூறப்படும் வினவும் அதற்கு உத்தரமும் இவையே ஆம் என்பது அநுபவமுடைய தேசிகரால் கேட்டு உணர்க. இலாடத்தினின்றும் நீங்கி மூலாதாரத்தில் செல்லும்போதும், மூலாதாரத்தினின்றும் நீங்கி இலாடத்தானத்தில் செல்லும்போதும் அந்தந்த இடமும், அங்கங்கே நிகழும் அறிவும், வேறுபாடும் வேற்றுமையில்லாமையானன்றே சாத்திரங்கள் எல்லாம் இவ்விருவகையோடு ஒன்றே பற்றிக் கூறி எழுவதூஉம் என்க. இந்தக் கீழாலவத்தையால் சுத்த தத்துவமும் கலாதியும் மூலாதாரத்தின் உண்டு என்பதற்குச் சுருதி **அசிந்திய விசுவ சாதாக்கிய** மூலாகமத்துட் கூறியது காண்க.

இனி, சகலத்திற் சகலமாவது "மருவிய பொறியிலொன்றும் மாபூதம் ஐந்திலொன்றும், கருவிகள் நான்கு நீங்காக் கலாதிகள் ஐந்தும் கூடி" (சிவப்பி–உண்மை–13) ஒருபுலன் நுகர்விக்க நுகரும் ஆன்மாவிற்கு அப்படி நுகரும்போதும் அவ்வவ்விடயங்களின் நிகழும் அறிவு கணந்தோறும் நீங்கி நீங்கி நிகழுவதன்றி இடை யீடின்றி நிகழமாட்டாமையின் ...... நிகழ்வதற்கேற்பச் சுத்ததத் துவங்களாகிய பிரேரகாவத்தைக்கருவி சாக்கிரத்தில் ஐந்து, சொப்பனத்தில் நான்கு, சுழுத்தியில் மூன்று, துரியத்தில் இரண்டு, துரியாதீதத்தில் சிவதத்துவம் ஒன்றுமாம்.

இனி, சகலத்தில் சுத்தம் ஐந்தாவன இருதயம் முதல் துவாத சாந்தம் ஈறுகிய தானங்களின் புறக்கரணம் உட்கரணங்களைப்பற்றி யும் பற்றுதும் பிரத்தியாகாரம் முதல் துவாதசாந்தம் ஈறுக ஐவகைப் பட்டு நிகழும் அவதரம் சகலத்திற் சுத்தமாகிய யோகாவத்தை என்பதாம். இனி, சுத்தமும் சுத்தத்திற்கேவலமும் சுத்தத்திற் சகலமும் சுத்தத்திற் சுத்தமும் என மூவகைப்பட்டு ஐவைந்து பதினைந்து வகையாய் விரியும். அவை துகளறுபோதத்திலும், அம்பலவாணதேசிகர், தட்சிணுமூர்த்தி தேசிகர், சுவாமிநாத தேசிகர் அருளிச்செய்த நூல்களிலும் விரித்தறிக, ஆகமாதியினும், ஞானயோக மாதியினும் விரித்தறிக.

**சுத்தசிவப்பிரகாசக் கட்டளை முற்றிற்று**

---

**திருச்சிற்றம்பலம்**

**ஸ்ரீ சுப்பிரமணிய ஞானசற்குரு தேசிக சுவாமிகள்**
**திருவடி வாழ்க.**

**ஸ்ரீ மெய்கண்ட தேவர் மிளிர்கழல் வெல்க.**
**ஸ்ரீ மாதவச் சிவஞானயோகிகள் மலரடி வாழ்க.**

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

என்னை யுடையானும் ஏகமாய் நின்றானும்
தன்னை யறியாத தன்மையனும்—பொன்னைச்
சுருளாகச் செய்தனைய தூச்சடையான் வானோர்க்
கருளாக வைத்த அவன்.

திருச்சிற்றம்பலம்

—காரைக்காலம்மையார்.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம.

அவனே இருசுடர்தீ ஆகாசம் ஆவான்
அவனே புவிபுனல்காற் றாவான்—அவனே
இயமான னாய்அட்ட மூர்த்தியுமாய் ஞான
மயனாகி நின்றானும் வந்து.

திருச்சிற்றம்பலம்.

—காரைக்காலம்மையார்.

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# சித்தாந்தப் பிரகாசிகை

திருவாவடுதுறை —

ஸ்ரீ மாதவச் சிவஞானசுவாமிகள்

மொழிபெயர்த்தருளியது.

முதற்பதிப்பு 1947
இரண்டாம் பதிப்பு 1954

## விஷயசூசிகை

உ

சிவமயம்

# இரண்டாம்பதிப்பின் முகவுரை

சித்தாந்த சைவநூல்களைக் கற்கப்புகும் இளைஞர்கட்குப் பேருபகாரமாய் முதலில் கற்கப் பெருந்துணைசெய்வன கட்டளைநூல்கள். வேதாந்த சித்தாந்த முதலிய சமயவுண்மைகளைப் பொதுவாக அறிந்துகொண்டாலன்றிச் சமயநூல்களிற் புகஇயலாதென்பது எல்லாருக்கு மொக்கும். வாய்பாட்டின் உணர்ச்சியும் பயிற்சியும் இன்றிக் கணிதநூலில் சென்றறிந்துகொள்ளச் சிறிதும் இயலாதென்பதைப் பள்ளிச்சிறுரும் அறிவர். அதுபோலவே, சமயநூல்களிற் புகும் மாணவர் ஒருதலையாக முன்னர் அறிந்துகொள்ளவேண்டிய தத்துவங்கள் முதலிய விவரங்களை எல்லாம் அறிதற்குக் கட்டளைகள் மிக இன்றியமையாதன. இக்காலத்துச் சமயநூலிற் புகுவோர் நல்லாசிரியரை யடுத்து முறைப்படி கற்றுவல்ல ராதற்குப் போதிய அவகாசமின்றித் தாமே படித்துணரும் பெருவிருப் புடையராய்க் காணப்படுகின்றனர். ஆசிரியர் உதவியின்றி, சமயச்சடங்குகள் இன்றிச் சிவஞான போதம் சிவஞானசித்தியார் முதலிய நூல்களில் பிரவேசிக்கின்றனர். நல்லுரையுடன் கூடியவைகள் ஆயினும் முறையாகக் கல்லாதாருக்கு அவை ஒன்றும் புலனாதல் இல்லை. ஆதலின், கடினமானது என வெறுத்தொதுக்குகின்றனர். அவர் பொருட்டுத் தமிழிலே பல கட்டளைகள் இருப்பினும் இவ்வாதீனத்துத் திராவிட மாபாடிய கர்த்தராகிய ஸ்ரீமாதவச் சிவஞான யோகிகள் வடமொழியினின்று சித்தாந்தப்பிரகாசிகை ஆகிய இதனை மொழி பெயர்த்தருளினார்கள். மிகத் தெளிவாகச் சிறிதும் ஐயப்பாடின்றிச் சைவசித்தாந்த நூல்களில் எளிதாக நுழைவதற்கு இதுவே போதியதாம். இப் பிரகாசிகை பலரால் பலகாலத்து அச்சிற்பதிப்பிக்கப் பெற்றிருப்பினும் ஆதீனப்பதிப்பாக 1947ல் இவ் வாதீன வித்துவான் ஸ்ரீ சிதம்பர ராமலிங்க பிள்ளையவர்களால் மகாசந்நிதானத்து உத்தரவின்படி வெளிவந்தது. ஆயினும், சிலகாலத்திலேயே அவை முழுதும் செலவாயின. ஆகலின், கிடைப்பதுபெரிதும் அரிதாயிற்று.

இப்பொழுது இவ்வாதீனத்தில் இருபத்தொன்றாவது குரு மஹாசந்நிதானமாக வீற்றிருந்தருளும் ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய தேசிகசுவாமிகள் கட்டளையிட்டருளியபடி மீட்டும் இரண்டாம் பதிப்பாக வெளியிட்டுள்ளேன். இதன்கண் எவ்வித மாறுபாடுமின்று.

ஙஙனம்,

திருவாவடுதுறை

27—7—54.

து. ச. மீனாட்சிசுந்தரம் பிள்ளை,

நைன

சிவமயம்

# முதற்பதிப்பின் முன்னுரை

> "கயிலாய பரம்பரையிற் சிவஞான போதநெறி
> காட்டும் வெண்ணெ
> பயில்வாய்மை மெய்கண்டான் சந்ததிக்கோர் மெய்ஞ்ஞான
> பானு வாகிக்
> குயிலாரும் பொழிற்றிருவா வடுதுறைவாழ் குருநமச்சி
> வாய
> சயிலாதி மரபுடையோன் றிருமரபு நீடூழி
> தழைக மாதோ."

**சித்தாந்தப்பிரகாசிகை** என்னும் நூல் வடமொழியிலே **சர்வாத்ம சம்பு** சிவாசாரியராலே அருளிச் செய்யப்பட்டது. இது வடமொழிச் சித்தாந்தப் பிரகாசிகையின் இறுதியில் வரும்,

> "इति सर्वमतेष्विष्टा सा सिद्धान्तप्रकाशिका ।
> सर्वात्मशम्भुनाख्याता कल्पिता सैव सन्मता"

என்னும் சுலோகத்தானும், தமிழ்மொழிபெயர்ப்பில் நூல்வழி முதலாயின கூறுமிடத்துச்

> "சைவா கமத்தின் மெய்யுணர் காட்சி
> யருட்**சர் வான்ம சம்பு**வா சிரியன்
> றரு**சித் தாந்தப் பிரகா சிகை**யினை
> யம்முறை மொழிபெயர்த் தறைகுவன்
> செம்மனத் தமிழோர் தெளிதரற் பொருட்டே"

எனவரும் செய்யுளானும் அறியப்படும், இந்நூலாசிரியர் பெயரை நோக்குமிடத்துச் சோமசம்பு, ஞானசம்பு

முதலிய ஆசிரியர்கள் போலச் சம்பு பரம்பரையில் வந்தவராயிருத்தல் கூடுமென்பது ஊகிக்கப்படுகிறது. இவரைக் குறித்த வேறு வரலாறு தெரிந்திலது. சிவஞான பாடியத்தில் **ஸ்ரீமாதவச் சிவஞான சுவாமிகள்** இந்நூலாசிரியரைப் பிரமாணவாசிரியராக எடுத்தாண்டிருப்பது இவரது பெருமையை விளக்கும்.

இந் நூலிலே சைவ சித்தாந்தம் கற்கப் புகுவார் முதலிலே அறியவேண்டிய தத்துவங்கள், அவற்றின் தோற்றம், அத்துவாக்களின் விவரம், தீக்ஷையின் பேதம், சாத்திரங்களின் வகைகள், அவைகளிற் சொல்லப்படும் விஷயங்கள், சிவாகமங்களின் விசேஷம் முதலிய பல விஷயங்கள் விளக்கப்படுகின்றன. வடமொழியிலே தத்துவங்களை விளக்கும் சிறு நூல்களாக **இராமநாத தீபிகை, மத்தியார்ஜுநேச தீபிகை** முதலிய பல நூல்களிருப்பினும் இந்நூலின் சிறப்பினை யுத்தேசித்து, இதுவே சைவ சித்தாந்த சாஸ்திரப் பிரவேசம் செய்யும் இளைஞர்கட்குப் பாடம் சொல்லப்பட்டு வந்தது.

வடமொழிக் கல்வி அருகிவரும் கால நிலையைத் திருவுளங்கொண்டு திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை யாதீனத்துத் திராவிட மாபாஷ்யகாரராகிய **ஸ்ரீமத் மாதவச் சிவஞான சுவாமிகள்** வடமொழிச் சித்தாந்தப் பிரகாசிகையைத் தமிழிலே மொழிபெயர்த்தருளினார்கள். நமது திருவாவடுதுறையாதீன பரம்பரையில் இந்நூலே சைவ சாஸ்திர பாடம் கற்கப் புகுவோர்க்கு முதலிற் கற்பிக்கப்படுவது வழக்கம்.

இத்தமிழ்நூல் சென்னை ரிப்பன் பிரஸ்ஸிலும், யாழ்ப்பாணத்திலும் நெடுநாள் முன்னர் அச்சிடப்பட்டன.

1919-ம் வருஷம் விக்கிரமசிங்கபுரத்துச் சிவஞான பக்தஜன சபையார் இதனை அச்சிடுமாறு என்னைப் பணித்தனர். அவர்கள் இட்ட பணியைச் சிரமேற்கொண்டு ஒருவாறு நூலைப் பரிசோதித்து, விஷயங்களுக் கேற்பப் பிரகரணப் பாகுபாடு செய்து நிறைவேற்றினேன். பின்பு திருநெல் வேலித் தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழக வெளியீடாக ஒரு பிரசுரம் வந்தது.

இந்த நிலைமையில் இந்நூலைச் செம்மையான முறை யில் அச்சிட்டு உபகரிக்க வேண்டுமென்று திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை யாதீனத்து 20-ஆவது மகா சந்நிதானமாக விளங்கும் **ஸ்ரீலஸ்ரீ அம்பலவாண தேசிக சுவாமிகள்** திருவுளங்கொண்டு எனக்குக் கட்டளையிட்டரு ளினார்கள். அவர்களது கருணை விசேடத்தால் இப்பதிப்பு வெளிவருகின்றது.

இந்நூலின் அடிக் குறிப்பில் எடுத்தாண்ட நூல்களின் விவரம்:— இரத்தினத்திரயம், ஸ்ரீ காமிகாகமம், சகஸ்ராக மம், சிந்தியாகமம், சிவஞானசித்தியார், சிவஞானபாடியம், சிவப்பிரகாசம், சுருதி சூக்திமாலை, சோமசம்புபத்ததி, தத் துவப் பிரகாசம், திருவாசகம் என்பன.

இதனை ஆராய்ச்சி செய்தற்குக் கிடைத்த பிரதிகள் பல. அவற்றுள் முக்கியமானவைகளை மட்டும் குறிப்பிடு கிறேன் :

## வடமொழி மூலப்பிரதிகள்

1. திருவாவடுதுறையாதீனத்துக் கையெழுத்துப்பிரதி.

2. யாழ்ப்பாணத்து அச்சுவேலி ஸ்ரீமத் : குமாரசாமிக் குருக்களவர்கள் ஏட்டுப் பிரதி.

3. திருவாவடுதுறை ஸ்ரீமத் : சாமிநாத சிவாசாரி யரவர்கள் பிரதி.

## தமிழ்ப்பிரதிகள்

1. யாழ்ப்பாணத்து அச்சுவேலி ஸ்ரீமத் குமாரசாமிக் குருக்களவர்கள் ஏட்டுப் பிரதி.

2. சென்னை ரிப்பன் பிரஸ்ஸில் பதிப்பிக்கப்பட்ட அச்சுப் பிரதி.

3. யாழ்ப்பாணத்தில் பதிப்பிக்கப்பட்ட அச்சுப்பிரதி.

4. சிவஞான பக்த ஜன சபையார் வெளியிட்ட அச்சுப்பிரதி.

5. திருநெல்வேலித் தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகப் பிரசுர அச்சுப்பிரதி.

இந்த வெளியீட்டில் என் அறிவு சென்ற அளவில் பாடத்தைச் சுத்தம் செய்து, இன்றியமையாத இடங்களில் குறிப்புக்கள் எழுதியிருக்கிறேன். குற்றம் காணப்படில் பொறுத்தருளுமாறு அறிஞருலகத்தைப் பிரார்த்திக்

திருவாவடுதுறை யாதீனத்தில் என்றும் அன்பும் அபிமானமுமுள்ள மகாமகோபாத்யாய டாக்டர் **பிரமஸ்ரீ உ. வே. சாமிநாத ஐயரவர்களது** குமாரர் **பிரமஸ்ரீ எஸ். கல்யாணசுந்தரஐயரவர்கள்** இதனைப் பதிப்பிக்க உடன்பட்ட பெருந்தன்மைக்கு நன்றி செலுத்துகிறேன்.

நுணங்குஞ் சமய நூற்றலைமை நுவலுந் தகைத்தாய் நந்திமுனி
கணங்கட் களித்த சிவஞான போதக் கதிநூ னெறிகாட்டிப்
பணங்கொளரவர் துறைசையில்வாழ் பஞ்சாக்கரதேசிகன்மலர்த்தாள்
வணங்க வழுத்த மனத்திருத்த வாய்த்த பிறப்பை வாழ்த்துவாம்.

திருவாவடுதுறை
24—1—1947

**வி. சிதம்பர ராமலிங்கம் பிள்ளை,**
ஆதீன வித்துவான்.

உ
சிவமயம்.
திருச்சிற்றம்பலம்.

# சித்தாந்தப் பிரகாசிகை.

## கடவுள் வாழ்த்து

[1]வணங்கி வாழ்த்தி மதிப்பரும் பொருளை
வணங்கி வாழ்த்தி மதித்துமன் பெரிதே. (1)

இயங்கியற் பொருளு நிலையியற் பொருளும்
படைத்துடன் விராய்ப்பசு பாச மாற்றிய
முப்புரப் பகைஞன் முழங்குகழ லேன்றுண்
மெய்ப்படப் பரசுதும் வீடுபெறற் பொருட்டே. (2)

## நூல்வழி முதலாயின

சைவா கமத்தின் மெய்யுணர் காட்சி
யருட்சர் வான்ம சம்புவா சிரியன்
றருசித் தாந்தப் பிரகா சிகையினை
யம்முறை மொழிபெயர்த் தறைகுவன்
செம்மனத் தமிழோர் தெளிதரற் பொருட்டே. (3)

1. இது, "अवर्णविग्रहं देवं वर्णविग्रहवर्जितम् ।
वर्णविग्रहवक्तारं नौम्यहं स्तौमि संश्रये"

*என முதனூலில் வருவதன் மொழிபெயர்ப்பு. அச்சுலோகம் சகஸ்ரநாமத்தில் ராத்திரியந்தக பூஜாவிதி படலத்திற் காணப்படுகின்றது. அதனையே ஸ்ரீ சர்வாத்ம சம்பு சிவாசாரியர் தமது நூலின் முதலில் கடவுள் வாழ்த்தாக அமைத்துக்கொண்டார்.*

## சிறப்புப்பாயிரம்

வடநூற் கடலுந் தென்றமிழ்க் கடலு
முழுதுணர்ந் தருளிய முனிவரன் றுறைசை
வாழ்சிவ ஞான மாதவன் முன்னூற்
சித்தாந் தப்பிர காசிகை சிறந்திட
மொழிபெயர்த் தருளினன் றென்மொழி யாக
மருளகன் றெம்மனோர் மதிபெறற் பொருட்டே.

---

## நூல்

### 1 தேகப்பிரகரணம்

ஈண்டுச் [1]சாதிகுலம் பிறப்பு முதலியவற்றுன் அபிமானம் செய்தற்கு இடமாகிய இந்தத் **தூலதேகம்** பிருதிவி அப்பு தேயு வாயு ஆகாயம் என்னும் இவ்வைந்துங் கூடிப் பரிணமித்தது. இந்தத் தூலதேகத்தில் முன் செய்த புண்ணிய பாவங்களுக்கு ஈடாகிய வேதியர் முதலாகிய சாதியும் வடிவும் அழகும் இந்திரிய வலிமையும் பெற்று வரையறைப்படும் ஆயுளும் வரையறைப்படும் போகமும் உடையவனுய் உடம்பிற்கு வேருய் உடம்பிறை் செய்யப்படும் புண்ணிய பாவங்களுக்கு இடமாய் நித்தனுய் அருவாய் வியாபகனுய் ஞானக்கிரியா சொரூபியாய் ஆணவம் கான்மியம் மாயேயம் வைந்தவம் திரோத

---

1. *முதனூலில்* " इह तावज्जातिकुलाद्यभिमानास्पदमिमं स्थूलदेहं...." *எனச் சாதிகுல முதலியவற்றுல் என்று கூறியிருப்ப இங்கே 'சாதி குலம் பிறப்பு முதலியவற்றுல் எனக் கூறியது* **திருவாசகத்து** *வரும் 'சாதிகுலம் பிறப்பென்னுஞ் சுழிப்பட்டு'* (*கண்டபத்து*, 5) *என்னும் திருவாக்கைப் பின்பற்றியதாகும்.*

சத்தி என்னும் ஐவகைப் பாசத்தாற் கட்டுண்டு போக்நு வரவுடையனுய்ப் புருடன் என நிற்பவன் **ஆன்மா.**

இந்த ஆன்மா போகம் நுகர்தற்குக் கருவியாகிய **சூக்கும தேகம்** பிருதிவிமுதல் கலை ஈருகிய முப்பது தத்துவங்களான் ஆக்கப்பட்டு ஆன்மாக்கள்தோறும் வெவ்வேருய் ஆயுள் முடிவின் முன்னுடம்புவிட்டு மற்ருேருடம்பெடுத்தற்கு ஏதுவாயிருக்கும்.

## 2. தத்துவப்பிரகரணம்

### i. போக்கிய காண்டம்

இவ்விருவகை யுடம்பிற்கும் ஏதுவாகிய தத்துவங் களின் பெயரும் தொழிலும் தோன்று முறைமையும் எவ்வாறென்னில் :—

பிருதிவி அப்பு தேயு வாயு ஆகாயம் என்னும் ஐந்து தத்துவங்களுக்கும் **பூதம்** என்று பெயர். இவற்றிற்குக் காரணமான கந்தம் இரதம் உருவம் பரிசம் சத்தம் என்னும் ஐ ந் து தத்துவங்களுக்கும் **தன்மாத்திரை** என்று பெயர். இத்தப் பத்தும் **காரியம்** எனப்படும்.

வாக்கு பாதம் பாணி பாயுரு உபத்தம் என்னும் ஐந்து தத்துவங்களுக்கும் **கன்மேந்திரியம்** என்றுபெயர். இவற்றின் தொழில் முறையே வசனமும் கமனமும் தானமும் விசர்க்கமும் ஆனந்தமுமாம். சோத்திரம் தொக்கு சட்சு சிங்நுவை ஆக்கிராணம் என்னும் ஐந்து தத்துவங்களுக்கும் **ஞானேந்திரியம்** என்று பெயர். இவற்றின் தொழில் முறையே [1]சத்தமும் பரிசமும் உரு வமும் இரதமும் கந்தமும் என்னும் இவற்றை அறித

1. *தன்மாத்திரை வடிவாகிய சத்தம் முதலியன வேறு; ஞானேந்திரியங்களால் அறியப்படும் சத்தம் முதலி*

லாம். இந்த வாக்கு முதலிய கன்மேந்திரியம் ஐந்தும் சோத்திர முதலிய ஞானேந்திரியம் ஐந்தும் ஆகப்பத்தும் **கரண** மெனப்படும்.

மனமும் அகங்காரமும் புத்தியும் என்னும் மூன்று தத்துவமும், உடம்பின் புறத்துச் சென்று புலன்களை நுகர்விக்கும் சோத்திர முதலிய இந்திரியங்களைப் போல. அகத்து நின்று தொழிற்படுத்துதலான் [1]இம்மூன்றிற்கும் **அந்தக்கரணம்** என்று பெயர். இவற்றுள் மனத்தின் தொழில் ஒரு பொருளைச் சங்கற்பித்தலும் சோத்திர

---

*யன வேறு*; சிவஞான சித்தியார் II. 64-*ம் திருவிருத்தத்திற்கு* ஸ்ரீ மாதவச் சிவஞான சுவாமிகள் *அருளிய உரை அறியத்தககது.*

1. *அந்தக்கரணம் நான்கென்றிருப்ப, இங்கே மனம் அகங்காரம் புத்தி யென்னும மூன்றைமட்டும் அந்தக் கரண மென்றது மனம் ஒன்று தானே சிந்திக்கும அவஸ்தையிற் சித்தமாய் நிற்குமாதலின், "பயனால் வேறுபாடு ன்மையின் மனமே அவத்தை விசேடத்தாற் சித்தமென விருத்திப்பட்டு நின்று அங்ஙனந் தாக்கிச்சிந்திக்குமென்றுணர்க. இதனானே மனத்தின் விருத்தியாகிய சித்தமொன்று உண்டென்பது பெற்றாம். அஃது ஏனைத்தத்துவங்கள் போலப் பரிணாம மன்மையின், மனத்தின் வேறாக வைக்கப்பாற்றன்று என்னுங் கருத்தால் 'சிந்தை தினை வையம் வந்துதரு மனமொழிய வகுப்பொணாதே'* (சிவப்பிரகாசம், *பொது*, 31) *என்றார் புடை நூலாசிரியரும்;......இதனாலே அந்தக்கரணம் மூன்றெனக்கொண்டு குணதத்துவத்தை மூலப்பகுதியின் வேறு வைத்தெண்ணி மூலப்பகுதிக்குக் கீழ்த்தத்துவம் இருபத்து நான்கெனத் தொகை கொள்ளுவாரும், குணதத்துவத்தை மூலப்பகுதியுள் அடக்கி உபகரித்தற் சிறப்புப்பற்றிச் சித்*

முதலிய இந்திரியங்களைப் புறத்தே விடயங்களிற் செலுத்தலுமாம். அகங்காரத்தின் தொழில் அபிமானஞ் செய்தலும் பிராணன் முதலிய வாயுக்களை இயக்குதலு மாம். புத்தியின் தொழில் ஒரு பொருளைத் துணிதலாம்; துணிதலாவது இஃது இப்பி அன்று, வெள்ளியே என்று நிச்சயித்தலாம். ஆக இங்ஙனம் கூறப்பட்ட தத்துவங் கள் இருபத்துமூன்று.

இவற்றுள் நிச்சயித்தற்குக் காரணமான புத்தி தத் துவத்தினின்றும் **சாத்துவிகம் இராசதம் தாமதம்** என் னும் வேறுபாட்டான் மூவகைத்தாகிய அகங்காரம் தோன்றும். இதனுள் சாத்துவிக அகங்காரத்தினின்றும் மனமும் சோத்திர முதலிய ஞானேந்திரியம் ஐந்தும் தோன்றும். இராசத அகங்காரத்தினின்றும் வாக்கு முதலிய கன்மேந்திரியம் ஐந்தும் தோன்றும். தாமத அகங்காரத்தினின்றும் கந்தம் முதலிய தன்மாத்திரைகள்

*தத்தை மனத்தின் வேறு வைத்தெண்ணி அந்தக் கரணம் நான்கெனக் கொண்டு மூலப்பகுதிக்குக் கீழ்த்தத்துவம் இருபத்து நான்கெனத் தொகை கொள்ளுவாரும், சித்தமும் மனமும் ஒன்றாக வைத்து மூலப்பகுதியையும் குணதத்து வத்தையும் ஒன்றாக வைத்தெண்ணி இருபத்துநாலாந் தத் துவம் மூலப்பகுதி யெனத் தொகைகொள்ளுவாருமெனப் பலதிறத்தர் ஆசிரியர். அவையெல்லாம் பொருளான் வேறு பாடின்மையின், தம்முள் முரணுமையறிக" எனச்* **சிவஞான பாடியத்து** *இரண்டாஞ் சூத்திரத்து இரண்டாம் அதிகா ணத்து வருவதும், '.........மனம் தோன்றி எதிர்ப்பட்ட தொரு விடயத்தை இது யாதாகற்பாற்றெனச் சித்தரூப மாய் நின்று சிந்திக்கும்' எனச்* **சிவஞான சித்தியார்** II. 60-*ஆம் திருவிருத்தவுரையில் வருவதும் அறியத்தக்கன.*

ஐந்தும் தோன்றும். கந்தம் முதலிய தன்மாத்திரைகள் ஐந்தினின்றும் முறையே பிருதிவி முதலிய பூதம் ஐந்தும் தோன்றும்.

பூதங்களின் தொழில் முறையே தரித்தலும் பதஞ் செய்தலும் சுடுதலும் அவயவங்களைத் திரட்டுதலும் ஏனை நான்கு பூதத்திற்கும் இடங்கொடுத்தலுமாம். இவற்றுள் பிருதிவிக்குச் சத்தமும் பரிசமும் உருவமும் இரசமும் என்னும் நான்கும் பொதுக்குணம்; கந்தம் ஒன்றும் சிறப்புக்குணம், அப்புவுக்குச் சத்தமும் பரிசமும் உருவமும் மூன்றும் பொதுக்குணம்; இரசம் ஒன்றும் சிறப்புக்குணம். தேயுவுக்குச் சத்தமும் பரிசமும் பொதுக்குணம்; உருவம் ஒன்றும் சிறப்புக்குணம். வாயுவுக்குச் சத்தம் ஒன்றும் பொதுக்குணம்; பரிசம் ஒன்றும் சிறப்புக்குணம். ஆகாயத்திற்குச் சத்தகுணம் ஒன்றே. இந்தச் சத்தம் வன்னரூபம் அன்று; எதிரொலி வடிவாயிருக்கும்.

இப்பிருதிவி முதலிய இருபத்திரண்டு தத்துவங் களுக்கும் மேலாகிய புத்திதத்துவத்திற்குக் காரணம் **குணதத்துவம்.** இது சாத்துவிகம் இராசதம் தாமதம் என மூவகைத்தாய், முறையே சுகதுக்கமோகங்கட்குக் காரணமாக இருக்கும். இந்தக் குணதத்துவத்திற்குக் காரணம் **பிரகிருதிதத்துவம்.** குணதத்துவம் இருபத்து நாலாவது; பிரகிருதிதத்துவம் இருபத்தைந்தாவது. இவ்விரண்டினுள் பிரகிருதிதத்துவத்தின் காரியம் குண தத்துவம். குணதத்துவத்தின் காரியம் சுகதுக்க மோகங் களும் முறையானே தனக்குக் கீழுள்ள புத்தி தத்துவ முதலிய இருபத்துமூன்று தத்துவங்களுமாம். பிருதிவி

முதற் பிரகிருதிவரை இருபத்தைந்து தத்துவங்களுக்கும் [1]சுத்தாத்துவா என்று பெயர்.

## ii. போகசயித்திருகாண்டம்

இதற்குமேல் **அராகதத்துவம்**. இதன் தொழில் விடயங்களில் ஆசையைப் பெருக்குதலாம். [2]இதற்கு மேல் **வித்தியாதத்துவம்**. இதன் தொழில் விடயத்திற் பற்றிய புத்தியைப்புருடனிடத்திற்கொண்டு செலுத்துங் கருவியாதல். இதற்குமேல் **கலாதத்துவம்**. இதன் தொழில் ஆன்மாக்களுக்கு அநாதியே செம்பிற் களிம்பு போலச் சகசமான மலசத்தியிற் சிறிது நீக்கி ஆன்ம ரூபத்தை விளக்குதல். இதற்குமேல் **நியதிதத்துவம்**. இதன் தொழில் ஆன்மாக்கள் அவரவராற் செய்யப்பட்ட கன்மம் அவரவரே நுகரப்படுமென நியமித்தல், இதற்கு மேல் **காலதத்துவம்**. இதன் தொழில் நெடுங்கால நுகர்ந்தான் சிறிதுகால நுகர்ந்தான் எனப் புருடனுக்குப்

1. *இதுகாறும் கூறப்பட்ட தத்துவங்களும் அவற்றின் இயல்புகளும் சிருஷ்டிக் கிரமத்தில்* **சிவஞான சித்தியார்** *II. 58 முதல் 66 முடியவுள்ள திருவிருத்தங்களிற் கூறப்படுதல் அறியத்தக்கது.*

2. *மூதநூலிலும் தமிழ்மொழி பெயர்ப்பிலும் அராக தத்துவத்தின் பின் நியதி, கால தத்துவங்களைக் கூறிவிட்டுப் பின் வித்தியா கலாதத்துவங்கள் கூறப்பட்டிருக்கின்றன.* *இங்கே* **சிவஞான சித்தியார் II.** *54 முதல் 56 முடியவுள்ள திருவிருத்தங்களில் சிருட்டிக் கிரமத்திற் கூறப்பட்டவாறு அம்முறை மாற்றி அமைக்கப்பட்டது.*

போகத்தை வரையறுத்தல். இதற்குக் காரணம் **மாயா தத்துவம்**, [1]மாயாதத்துவத்தில் காலம் நியதி கலை வித்தை அராகம் இவ்வைந்தும் தோன்றும். இவ்வைந் தோடுங் கூடிப் புலன்களை நுகருமிடத்துப் பும்ஸத்துவம் என்ற ஒரு மலமுண்டாமாதலான் ஆன்மாவுக்குப் **புருட தத்துவம்** என்று பெயர். புருடதத்துவம் சடரூபம் அன்று. இங்ஙனம் கூறிய அராகம் முதல் கலை ஈருகிய ஐந்து தத்துவங்களுக்கும் **மிச்சிராத்துவா** என்றுபெயர்,

ஆக இவை முப்பது தத்துவங்களும் ஆன்மாக்களிடத்தில் தனித்தனி சூக்கும தேகங்களாய் இருக்கும். புவனங்களில் தோன்றிய தேகங்களுக்கும், ஆதாரமாகி புவனங்களுக்கும் ஆசிரயங்களாயிருப்பன சர்வான்ம சாதாரணங்களாகிய முப்பது தத்துவங்களுமாம். இவற்றிற்கெல்லாம் காரணம் [2]**அசுத்தமாயாதத்துவம்.** இந்த மாயை நித்தமாய் வியாபகமாய் ஆன்மாக்களுக்கெல்லாம் கன்மத்தால் பந்திப்பதாய்த் தன் காரிய முகத்தான் ஞானக்கிரியைகளை விளக்குமாயினும் மயக்குவதாய் இருக்கும்.

---

1. *மாயையினின்று முறையே காலமும நியதியுமகலையும், கலையின் வித்தையும், வித்தையின் அராகமும் தோன்றும் எனச்* **சிவஞான சித்தியாரிற்** *கூறியிருப்ப, இங்கே கால முதலிய ஐந்தும் மாயாதத்துவத்தில் தோன்றும் என்றது பரம்பரையான் மாயை முதற்காரணமாதல்பற்றி. இக்கருத்துப்பற்றியே* **சிவப்பிரகாசத்தில்** *'வித்தையராகங்களும் மாயை தனிலாகும்' என்றதாகும்.* **சிவஞானபாடியம்,** II. *சூ.* 2 *அதிகரணப் பகுதி அறியத்தக்கது.*

2. *அசுத்தமாயையின் இலக்கணம்* **சிவஞான சித்தியார்** II. 53-*ஆம் திருவிருத்தத்திற் கூறப்பட்டிருக்கிறது.*

## iii. பிரேரகாண்டம்

இதற்குமேல் முப்பத்திரண்டாவது **சுத்தவித்தியா தத்துவம்.** இதற்குமேல் முப்பத்துமூன்றுவது **ஈசுர தத்துவம்.** சுத்தவித்தியாதத்துவத்தில் [1] சத்தகோடி மகாமந்திரர்களும் [2] காமிக முதலிய இருபத்தெட்டாகமங்களும் சித்தாந்த சாத்திரத்தால் பூசிக்கப்படாநின்ற [3] நந்தி முதலிய கணநாதர் எண்மரும் [4] இந்திரன்முதலிய உலகபாலரும் [5] வச்சிர முதலிய இவர்கள் ஆயுதமும்

---

1. *சத்தகோடி மகாமந்திரர்கள் ஏழுகோடி எண்ணிக்கையுள்ளவர்கள்; இவர்கள் வித்தைகளென்றும் பெயர் பெறுவர்.* **இரத்தினத்திரயத்து** 24, 25 *சுலோகங்கள் அறியத்தக்கன.*

2. *காமிக முதலிய இருபத்தெட்டு ஆகமங்களாவன:- காமிகம், யோகஜம், சிந்தியம், காரணம், அஜிதம், தீப்தம், சூக்ஷமம், சகஸ்ரம், அம்சுமான், சுப்ரபேதம், விஜயம், நிசுவாசம், சுவாயம்புவம், ஆக்னேயம், வீரம், ரௌரவம், மகுடம், விமலம், சந்திரஞானம், முகபிம்பம், புரோத்கீதம், லளிதம், சித்தம், சந்தானம், சர்வோக்தம், பாரமேசுவரம், கிரணம், வாதுளம் என்பன. இவ்வாறு* **ஸ்ரீ காமிகாகமத்தில்** *தந்திராவதார படலத்திற் கூறப்பட்டது.*

3. *நந்தி முதலிய கணநாதர் எண்மராவார் :— நந்தி, மகாகாளர், விநாயகர், இடபதேவர், பிருங்கி, சுப்பிரமணியர், உமாதேவி, சண்டேசுவரரென்பவர்.*

4. *இந்திரன் முதலிய உலகபாலராவார் :—இந்திரன், அக்கினி, யமன், நிருதி, வருணன், வாயு, குபேரன், ஈசானன், விஷ்ணு, பிரமனென்பவர்.*

5. *வச்சிர முதலிய ஆயுதங்களாவன ;—வச்சிரம்,*

இருக்கும். ஈசுரதத்துவத்தில் [1] அனந்தர் முதலிய வித்தியேசுரர் எண்மரும் இருப்பர். இவர்களுள் **அனந்த தேவர்** ஏனை வித்தியேசுரருக்கும் சுத்தவித்தியா தத்துவ வாசிகட்கும் மற்றவர்களுக்கும் தலைவராய் மாயையைக் கலக்கி மாயாதத்துவ புவனங்களை உண்டாக்குவர். இந்த அனந்தர் பரமசிவத்திற்கு வேருய் அதிகாரமலம் ஒன்றும் உடையராய் இருப்பர். பாகம் வந்தகாலத்திற் பரமசிவத்தின் அருளால் பரமுத்தியை அடைவர்.

ஆணவம் கன்மம் என்னும் இருமலம் உள்ள [2] பிரளயாகலருள் மலபரிபாகம் உடையராய் நிரதிகரணமாய்ப் பரமசிவன் அனுக்கிரகம் செய்யப்பெற்றவர் [3] நூற்றுப் பதினெட்டு உருத்திரர். இவருள் **ஸ்ரீகண்ட உருத்திரர்**

---

*சக்தி, தண்டம், கத்தி, பாசம், சித்திரத்துவசம், கதை, சூலம், சக்கரம, வெண்டாமரை என்பன.*

1. *அனந்தர் முதலிய வித்தியேசுவர ரெண்மராவார்:- அனந்தர், சூக்ஷ்மர், சிவோத்தமர், ஏகநேத்திரர், ஏகருத்திரர், திரிமூர்த்தி, ஸ்ரீகண்டர், சிகண்டி என்பவர்.*

*கணநாதர் முதலியவர்களின் பெயர் ஸ்ரீ காமிகாகமத்தில் அர்ச்சனவிதி படலத்திற் கூறப்பட்டது.*

2, *பிரளயாகலர் :—ஆணவம் கன்மமென்னும் இரண்டு மலமுடையவர்கள்.*

5. *நூற்றுப்பதினெட்டு உருத்திராவார் :— பிரமாண்டத்தின் பத்துத் திக்கிலும் திக்குக்குப் பதின்மராக வுள்ள நூறு உருத்திரரும், பிரகிருதி மத்தகத்தில் உள்ள குரோதர் முதலிய எண்மரும், கலை மத்தகத்தில் வசிக்கும் கஹநேசர் முதலிய எண்மரும், ஸ்ரீகண்டருத்திரரும், வீரபத்திருமென்னும் இவர்* (தத்துவப்பிரகாசம், 14-*ஆவது சுலோகம்.*)

மத்தியப்பிரளய முடிவில் பிரகிருதி தத்துவத்திற்குக் கீழ்ப் பட்ட தத்துவங்களேயும் புவனங்களேயும் உண்டாக்கி ஆணவம் கன்மம் மாயை என்னும் மூன்று மலமுடைய சகலருள் ஞானத்தாலும் யோகத்தாலும் தவத்தாலும் தியான முதலியவற்ருலும் சிறந்தவரைப் பிரமபதம் விண்டு பதங்களில் இருத்துவர். இந்த ஸ்ரீகண்ட உருத்திரர் மத்தியப் பிரளய காலத்தில் அராகதத்துவத்தில் இருப்பர். பின்பு படைப்புக்காலத்தில் அசுத்தாத்து வாக்களேப் படைத்துப் பிரமாவும் விண்டுவும் செய்யும் சிருட்டிகளே அதிட்டித்துநின்று கீழ்ப்பட்ட புவனேசுரரையும் முப்பத்துமுக்கோடி தேவர்களேயும் பிரமாண்ட முதலிய அண்டங்களேயும் உண்டாக்குவர். பிரமாண்டத்தில் [1] பதினன்குபுவனம் [2] சகலருக்கிருப்பிடமாம்.

முன்சொன்ன உருத்திரருள் நூறு உருத்திரர் பாஞ்சபௌதிகமான பிரமாண்டத்திற்குக் காவலாயிருப்பர். பிரமா விட்டுணுக்களுடனேகூடக் குணதத்துவத்திலிருக்கும் ஸ்ரீகண்ட உருத்திரர் மத்தியப் பிரளயம்வரையும் அதிகாரஞ்செய்து கொண்டிருந்து பின்பு அந்தப் பிரமா விட்டுணுக்களேயும் ஒடுக்கிக்கொண்டு தாம் மிச்சிராத்துவாவில் அராகதத்துவத்தில் இருப்பர். இவரோடேகூட **வீரபத்திரரும்** இருப்பர். பிரகிருதிமத்தகத்தில் எட்டு உருத்திரர் இருப்பர். கலே மத்தகத்தில் எட்டு உருத்திரர் இருப்பர். இவர்களோடு முன்சொன்ன ஸ்ரீகண்டர்

1. *பதினன்கு புவனம் : கீழேழு மேலேழு என்று சொல்லப்படும் பதினன்குமாம.*

2. *சகலர்—ஆணவம், கன்மம், மாயை என்னும் மூன்று மலமும் உடையவர்கள்.*

வீரபத்திரர் சத உருத்திரருமாக நூற்றுப்பதினெட்டு உருத்திரரும் பரமசிவன் அனுக்கிரகத்தால் பரமுத்தியை அடைவர்.

இந்த நூற்றுப்பதினெட்டு உருத்திரரும் மலபரி பாகத்தால் தீக்கைபெற்றுப் பரமசிவன் அருளால் பதங் களைப்பெற்றவர். சுத்தவித்தியாதத்துவத்தில் இருப்போர் மலபரிபாகத்தால் பரமசிவன் அருளால் பதம் பெற்றவர். இந்த சுத்த வித்தியாதத்துவவாசிகள் சரீரமும் வித்தியே சுரர் சரீரமும் வைந்தவம். நூற்றுப்பதினெட்டு உருத் திரர் சரீரம் மாயேயம். பிரமா விட்டுணு முதலியோர் சரீரம் பிரகிருதி சம்பந்தம். பரமசிவனுடைய எல்லாத் திருமேனியும் நூற்றுப்பதினெட்டு உருத்திரர் வடிவும் வித்தியேசுரர் வடிவும் போலத்தியானிக்கப்படும். பிரமா விட்டுணு சரீரம் பிராகிருதமாகலானும் முன் பரமசிவன் அனுக்கிரகம் இல்லாமையானும் பிரம விட்டுணுக்கள் சரீரம்போலப் பரமசிவனைத் தியானிக்கலாகாது. பிரம விட்டுணுக்கள் பதம் பசுத்தானம், உருத்திரர் பதம் [1]ஈசு ரர்பதம் இரண்டும் பதித்தானம்.

இந்த ஈசுரதத்துவத்திற்குமேல் **சதாசிவதத்துவம்.** இதற்குமேல் **சத்திதத்துவம்.** இதற்குமேல் **சிவதத் துவம்.** [2]இந்த ஐந்து தத்துவமும் பரமசிவனுக்கு

---

1. *ஈசுரர்—வித்தியேசுரர்.*

2. *இந்தத் தத்துவங்களின் இயல்பு சிருட்டிக் கிரமத் தில்* **சிவஞானசித்தியார்** I. 65, 66 *திருவிருத்தங்களிற் கூறப்பட்டன. ஆண்டு 'நித்தமென்றுரைப்பர் கால நீங்கிய நிலைமையாலே, வைத்திலர் முற்பிற்பாடு வருவித்தார் கருமத் தாலே' என வருதலின்* **தத்துவப் பிரகாசத்தில்,**

முறையே அதிகாரத்துவம் போகத்துவம் இலயத்துவம் எனப்பெயர் பெறுதற்கு நிமித்தமாயிருக்கும். இந்தத் தத்துவங்கள் [1]ஐந்திலும் **பரமசிவன்** ஒழிய வேறே கிருத்தியஞ்செய்யும் ஆன்மாக்கள் இல்லை. இலயம் போகம் அதிகாரம் என்னும் பதங்களை விரும்பி சாதகதீக்கை பெற்று மந்திரங்களைச் சாதித்த சாதகர் பின்பு பரமசிவன் அருளால் அந்தப் புவனத்தையடைந்து போகம்நுகர்ந்து

---

'पञ्चानामप्यो न हि क्रमोऽस्तीहकालहितत्वात् ।
व्यापारवशादेषां विहिता खलुकल्पना शास्त्रे ॥ (32)

எனவரும் சுலோக வியாக்கியானத்தில் **அகோர சிவாசாரியர்** 'सेयं अशास्त्रज्ञैः प्रक्षिप्तेत्युपेक्ष्यैव' என்று கூறும் குற்றம் பொருந்தாமை அறியப்படும்.

1. சில ஏட்டுப் பிரதிகளில் 'एतत् तत्वत्रितयं' என்றும் 'இந்த மூன்று தத்துவமும்' என்றும் பாடம் காணப்படுகின்றது : **சிவஞான பாடியத்து** II. 2-ஆவது அதிகாரத்தில் சுத்த மாயாகாரியம் கூறுமிடத்துச் 'சிவதத்துவம்... இலயித்த மாத்திரையாய் நிற்றலின் இலய தத்துவம்' எனவும், 'சத்திதத்துவம்...சிவதத்துவத்தின் இயல்பை நோக்கத் தூலமாகலின் தூல லயதத்துவம்' எனவும், 'சதாசிவதத்துவம்—போகமென்னும் அவத்தை யுடைமையின் போகதத்துவம்' எனவும், 'ஈசுரதத்துவம்... சூக்கும அதிகாரதத்துவம்' எனவும், 'சுத்தவித்தியாதத் துவம்—தூலவதிகாரதத்துவம்' எனவும் கூறப்படுதலின், 'ஐந்து' எனக் கொள்ளப்படினும், '........ இக்கருத்தே பற்றிச் சிவாகமங்களிற் சிவம் சத்தி சதாசிவ மென்னும் மூன்று தத்துவமுமே முதல்வனது இலய போக வதிகாரங் கட்கு முறையே இடமாமென்றும்.........கூறுமெனக் கொள்க' என வருதலின் அந்தப் பாடமும் பொருந்தும்.

வைராக்கியம் வருமளவாதல் மகாசங்காரம் வருமள வாதல் இருந்து பின்பு வித்தியேசுவரருடனே கூடப் பரமுத்தியைப் பெறுவர்.

சுத்தவித்தியாதத்துவத்தில் [1]அகரமுதலிய ஐம்பத் தோரக்கரமும் காமிக முதலிய இருபத்தெட்டுச் சங்கி தைகளும் [2]வைகரிவடிவாய் இருக்கும். ஈசுரதத்துவத்தில் பிரணவம் இருக்கும். சதாசிவ தத்துவத்தில் சகல விந் துவும் சகல நாதமும் இருக்கும். சத்திதத்துவத்தில் [3]சூக்குமை என்னும் பெயருடைத்தாய்ப் புத்தி காரண மாய் ஆன்மாக்கள் தோறும் வெவ்வேறாகிய சூக்கும நாதம் இருக்கும். சிவதத்துவத்திற்குக் காரணம் விந்து.

---

1. *அகரமுதலிய ஐம்பத்தோரக்கரம்—அகரம் முதல் க்ஷகரம் இறுதியாகவுள்ளவை.*

2. *வைகரி: நால்வகை வாக்கினி லொன்று. அத னிலக்கணம்,*

*'வைகரி செவியிற் கேட்ப நாயத்த வசன மாகி*
*மெய்தரு முதான வாயு மேவிட விசோத்த வன்னம்*
*பொய்யற வடைவு டைத்தாய்ப் புந்திகா ரணம தாகி*
*யையமில் பிராண வாயு வடைந்தெழுந் தடைவு*
*[டைத்தாம்'*

(சித்தியார் I. 20.) இரத்தினத்திரயத்து 72, 73 *சுலோகங் களும் அறியத்தக்கன.*

3. *சூக்குமை-சூக்குமவாக்கு. அதனிலக்கணம்* சிவ ஞானசித்தியார் I. 23-*ஆம்* இரத்தினத்திரயம் 76, 76½ *சுலோகத்திலும் கூறப்பட்டிருக்கிறது. சூக்கும வாக்காகிய நாதத்திற்குப் பற்றுக்கோடு சிவதத்துவமாயினும், 'சத்தி தத்துவம் சிவதத்துவத்தின் வேறன்மையான்' அது சத்தி தத்துவத்திலுள்ளதாகக் கூறப்பட்டது.*

விந்துவுக்கும் சிவதத்துவத்திற்கும் வேறுபாடில்லை. சிவ தத்துவங்களை யதிட்டித்து நிற்கும் பரமசிவனுடைய சத்தி சகளம் சகளநிட்களம் நிட்களம் எனவும், வியத்தம் வியத்தாவியத்தம் அவ்வியத்தம் எனவும், மகேசுரன் சதாசிவம் சிவன் எனவும் பெயர் பெற்றிருக்கும்.

இந்தமுப்பத்தாறு தத்துவங்களுக்குள் விந்துவானது நித்தியமாய் வியாபகமாய் அருவமாய்ப் பரமசிவனாலே நித்தியம் அதிட்டிக்கப்படுவதாய்ச் சொல்வடிவும் பொருள்வடிவுமாய் நாதமுதலியவற்றின் வழியால் ஆன்மாக்களுக்கு அறிவு விளங்குதற்குக் காரணமாய் மயக்கஞ் செய்யாததாய் மாயா காரியம் ஒழிந்த எல்லாப் பொருட்கும் உபதானகாரணமாய்ச் சடமாயிருக்கும்.

## 3. [1] அத்துவாப்பிரகரணம்.

இங்ஙனம் கூறப்பட்ட பிருதிவிமுதல் சிவதத்துவம் ஈருகிய முப்பத்தாறு தத்துவங்களும் **தத்துவாத்துவா.** காலாக்கினி புவனமுதல் அனசிருதபுவனம் ஈருகிய [2] இருநூற்று இருபத்துநான்கு புவனங்களும் **புவனத்துவா.** அகரமுதலிய ஐம்பத்தோரக்கரங்களும் **வன்னத்துவா.**

---

1. *அத்துவா—வழி. 'அத்துவா எனினும வழியெனினும் ஒக்கும். இவை ஒரோவொன்ருகக் கழித்துக்கொண்டு சிவபதத்திற் சேறற்கு வழி போறலின், அத்துவா எனப்பட்டன'* (சிவஞானபாடியம் II. 3) *'வழுவிலா வழியாரும்' என்பது* சிவஞானசித்தியார் VIII. 6.

2. *சில பிரதிகளில்* ' कालाग्निभुवनमारभ्य अनाश्रित-भुवनपर्यन्तानि भुवनानि द्विशतं पञ्चत्रिंशत् भुवनाध्वा ' *எனவும்*

வியோமவியாபி மந்திரவடிவான எண்பத்தொரு பதமும் **பதாத்துவா.** மூலப் பிரமாங்கங்களாகிய பதினொரு மந்திரமும் **மந்திராத்துவா.** நிவிர்த்தி முதலிய பஞ்சகலைகளும் **கலாத்துவா.**

---

*'காலாக்கினி புவன முதல் அநாசிருத புவனமீறாகிய இருநூற்று முப்பத்தஞ்சு புவனங்களும் புவனாத்துவா' எனவும் பாடம் காணப்படுகின்றன.* **சிவஞான சித்தியாரில்** *'புவன நூற்றெட்டு', 'புரமைம்பத்தாறு', 'புரமிருபத்தேழு', 'புரம் பதினெட்டு', 'புர மூவைந்து'* (viii. 7, 8, 9) *எனக் கூறப்பட்டிருப்பதாலும,* **இரத்தினத்திரயத்திலும்** 'पुराण्यष्टोत्तरशतं', 'वामादिभुवनानाञ्च विज्ञेयास्सप्तविंशतिः' 'दशाष्टौभुवनानि', 'पुराणि दशपञ्च च' (90, 99, 105, 109, 114 *சுலோகங்கள்) எனக் கூறப்பட்டிருப்பதாலும்,* **சிந்தியாகமத்தில்** 'इत्येकादशमन्त्रस्यादेकाशीतिपदं भवेत् । अक्षरस्त्वेकपञ्चाशत् चतुर्विंशशतद्वयम् । षट्त्रिंशत्त्वमेवंहि कला पञ्चकमुच्यते' *என மந்திரங்கள் பதினொன்று, பதங்கள் எண்பத்தொன்று, அக்ஷரங்கள் ஐம்பத்தொன்று, புவனங்கள் இருநூற்றிருபத்துநான்கு, தத்துவங்கள் முப்பத்தாறு, கலைகள் ஐந்து எனக் கூறப்பட்டிருப்பதாலும் இருநூற்றிருபத்துநான்கு என்ற பாடம் கொள்ளப்பட்டது. ஆயினும் 'இன்னும் சில புவனங்கள் உளவென்றும், உளவாகவே அவையுமுளப்படப் புவனாத்துவா இருநூற்று முப்பத்தாறும்' என்றும் மூலப்பகுதி முதலியவற்றின் வேறும் சில புவனங்கள் உளவென்பது* **மிருகேந்திரத்திற்** *கூறப்பட்டது என்றும்* **சிவஞானபாடியம்** II. 3-*ஆம் அதிகரணத்துக் கூறப்படுதலின் அப்பிரதிகளிற் காணப்படுவதும் பொருந்தும்.*

இவ்வாறனுள் கலை தத்துவம் புவனம் என்னும் மூன்று அத்துவாக்களும் திரவியவடிவாயிருக்கும். வன்னம் பதம் மந்திரம் என்னும் மூன்று அத்துவாக்களும் ஒலிவடிவாயிருக்கும். இவற்றுள் புவனம் தத்துவத்தைப் பற்றி நிற்கும். தத்துவம் கலையைப்பற்றி நிற்கும். வன்னம் பதம் மந்திரம் என்னும் மூன்று அத்துவாக்களும் புவனத்தில் தோன்றிய சரீரங்களைப்பற்றி நிற்கும். இந்த அத்துவாக்கள் ஆறுக்கும் மேலாகிய காரணம் **சுத்தமாயை** என்றுரைக்கப்படும். சுத்தமாயை [1]குண்டலினி சுத்தவித்தியை பிரமம் என்பன ஒரு பொருட்கிளவி. அங்ஙனமே அசுத்தாத்துவாவுக்கு மேலாகிய காரணம் **அசுத்தமாயை** என்றுரைக்கப்படும், இவ்வத்துவாக்களாறும் ஆன்மாக்களுக்குப் பந்தமாயிருக்கும்.

## 4. ஆத்மப்பிரகரணம்.

ஆன்மாக்கள் ஆறு அத்துவாவுக்கும் வேருய் நித்தியமாய் வியாபகமாய்ச் சேதனமாய்ச் சரீரந்தோறும் வெவ்வேருய் வினைகளைச் செய்து வினைப்பயன்களை நுகர்வோராய்ச் சிற்றறிவுஞ் சிறுதொழிலும் உடையவராய்த் தமக்கொரு தலைவனை உடையவராயிருப்பார். இந்த ஆன்

[1] ‘ शब्दतत्वमघोषा वाग्ब्रह्म कुण्डलिनीध्रुवं । विद्याशक्तिः परानादो महामायेतिदेशिकैः । (70,) बिन्दुरेवं समाख्याता व्योमानाहतमित्यपि ’ என்பது இரத்தினத்திரயத்திற் கூறப்பட்டது.

மாக்கள் பந்தவேறுபாட்டாற் [1]**சகலர், பிரளயாகலர் விஞ்ஞானகலர்** என மூவகைப்படுவர்.

## 5. பந்தப்பிரகரணம்.

இவர்களுக்கு **மாயாபந்தமாவது:** கலைமுதல்பிருதிவி ஈறுன தத்துவங்களும் புவனங்களும் புவனத்துப் பொருள்களுமாயிருக்கும். **கன்மபந்தமாவது:** சோதிட்டோமம் பிரமகத்தி முதலியவற்ருல் உண்டாவதாய் அபூர்வம் என்னும் பெயரையுடைய வாதனையாய்ப் புரியட்டகத்துள் புத்திதத்துவத்தைப்பற்றிச் சுகதுக்க மோகவடிவாயிருக்கும். **மலபந்தமாவது:** ஆன்மாக்களுடைய ஞானக்கிரியைகளை மறைப்பதாய் ஆன்மாக்கள் தோறும் வெவ்வேருய்த் தத்தம் காலவரையில் நீங்கும் அநேக சத்திகளை உடைத்தாய் நித்தமாய் வியாபகமாய்ச் சடமாயிருக்கும். **சுத்தமாயாபந்தமாவது:** வித்தைகள் வித்தியேசுரர் முதலியோர் சரீரங்களுக்குக் காரணமாயும் சகலர் போகம்புசித்தற்குக் கருவியாகிய சூக்குமை பைசந்தி மத்திமை வைகரி என்னும் வாக்குக்களுக்கு ஏதுவாயுமிருக்கும். **திரோதசத்திபந்தமாவது:** மாயை கன்மம் ஆணவம் வைந்தவம் என்னும் நால்வகைப் பாசத்தினுடைய அநாதித்தன்மை நிகழ்வதற்கு ஏதுவாயிருக்கின்ற சிவசத்தியே பாசமென்று உபசரித்துக் கூறப்படும். இங்ஙனம் ஐவகைப்பந்தங்களும் கண்டுகொள்க.

1. *சகலர், பிரளயாகலர் இவர்களதிலக்கணம் முற்குறிப்பிற் கூறப்பட்டது. விஞ்ஞானகலர் — ஆணவமலமாத்திரமுடையவர், பிரளயாகலர் விஞ்ஞானகலரின் பாகுபாடு* **சிவஞானபாடியத்திற்** *கூறப்பட்டது.*

சுத்தாத்துவாவில் இருப்போர் வைந்தவம் திரோதம் என்னும் இரண்டு பாசம் உடையர், மிச்சிராத்துவாவில் இருப்போர் இந்த இரண்டு பாசத்தினுடனே ஆணவமும் கன்மமும் ஆக நான்கு பாசம் உடையர். அசுத்தாத் துவாவில் இருப்போர் அந்த நான்குடனே மாயேயமுங் கூட ஐவகைப்பாசமும் உடையர், இவருள் சுத்தாத் துவாவில் இருப்போர்க்கு முத்தரைப்போல நிரதிசய இன்பமே அன்றித் துக்கத்தோடு கூடிய சுக துக்க மோகங்கள் இல்லாமையால் அந்த அத்துவா சுத்தம் என்று சொல்லப்படும். [1]மிச்சிராத்துவாவில் இருப் போர்களில் [2]நிரஞ்சனர் ஒழிய அஞ்சனமுடையோர் தம் எல்லையளவும் முற்றுணர்வுடையராயினும் சுக துக்க மோகங்களுடையராதலின் அந்த அத்துவா மிச்சிரம் என்று சொல்லப்படும். அசுத்தாத்துவாவிலிருப்போர் களுள் நிரஞ்சனர் ஒழிய அஞ்சனமுடையோரில் சிலர் தம் எல்லையளவும் முற்றுணர்வுடையோராயினும் மற் றுள்ளோரெல்லாம் சிற்றறிவும் சிறு தொழிலும் சுகதுக்க மோகங்களும் உடையராதலின் இந்த அத்துவா அசுத்தம் என்று சொல்லப்படும். இவற்றுள் மாயேயமும் வைந் தவமும் ஆதிபந்தம். கன்மம் [3]பிரவாகாநாதியாய்ப் போகத்தால் அழிவதாம். ஆணவம் மூலமாய் அநாதி பந்தமாய்த் தன்பாக முடிவில் பரமசிவன் திருவருளாகிய தீக்கையால் நீங்குவதாம். கன்மபாசம் ஞானத்தாலும்

---

1. *மிச்சிரம் - கலப்பு. அஃதாவது சுத்தமும் அசுத்த மும் கலந்தது.*

2. *அஞ்சனம் - மலம்; அஃதில்லாதவர் நிரஞ்சனர்.*

3. *பிரவாக அநாதி—நீரோட்டம்போல இடையறாது வருவது.*

யோகத்தாலும் சந்நியாசத்தாலும் போகத்தாலும் நசிக்கும்.

## 6. சாஸ்திரப்பிரகரணம்.

இந்த ஞான முதலாயின எல்லாம் சாத்திரவழியால் கிடைக்கும். அந்தச்சாத்திரங்கள் [1]லௌகிகமும் வைதிகமும் அத்தியான்மிகமும் அதிமார்க்கமும் மாந்திரமும் என ஐவகைப்படும்.

அவற்றுள் **லௌகிகமாவன:—** [2]ஆயுள்வேதமும் [3]தண்டநீதியும் முதலாயின. இவை யிம்மையிற் பலிக்கும் நூல்கள்.

**வைதிகநூலாவன :—** வேங்களில் கிரியாகாண்டத்தை மேற்கொண்டு [4]சோதிட்டோமம் முதலிய புண்

---

1. 'लौकिकं वैदिकंचैव तथाध्यात्मिकमेव च । अतिमार्गञ्च मन्त्राख्य तन्त्रमेतदनेकधा ।' *என்பது* **ஸ்ரீ காமிகாகமத்துத்** *தந்திராவதார படலத்திற் கூறப்பட்டது. 'சைவாகமங்களில் உலகநூல் வைதிகம அத்தியான்மிகம் அதிமார்க்கம மாந்திரம் என நூல்களை ஐவகைப்படுத்து' என்பது* **சிவஞான பாடியம்** *சிறப்புப்பாயிரவுரைப் பகுதி.*

2. *'எல்லாம் அநுட்டித்தற்குச் சாதனமான யாக்கையை நோயின்றி நிலைபெறச் செய்வது ஆயுள்வேதம்'*- **(சிவஞானபாடியம் I. 1.** *அதிகரணம்.)* **இஃது** *உபவேதம் நான்கனுள் ஒன்று.*

3. *தண்டநீதி—ஆசார வியவகார பிராயச்சித்தங்களை விதிக்கும் மிருதிநூல்; 'அவ்வவ்வருணங்கட்கும் நிலைக்குமுரிய தருமங்களை உணர்த்துவது மிருதிநூல்'*- **(சிவஞானபாடியம் I. 1.** *அதிகரணம்.) இது வேதத்திற்கு உபாங்கம் நான்கனுள் ஒன்று.*

4. *சோதிட்டோமம்—ஒரு வேள்வியின் பெயர்.*

ணியங்களாற் பெறப்படும் துறக்கமுதலியவற்றைச்சாதிப் பதாகிய [1]மீமாஞ்சை நூலும், வேதம் ஒரு புருடனாற் செய்யப்பட்டதெனச் சாதித்துப் பிரமாண முதலிய பதார்த்தங்களை ஆராய்ச்சிசெய்யும் முனிவராற் செய்யப் பட்ட [2]நியாய நூலும், வைசேடிக நூலும் என மூன்று வகைப்படும். இந்த மூன்றும் இம்மையினும் மறுமை யினும் பலிக்கும் நூல்கள்,

**அத்தியான்மிக நூலாவன** ;— சாங்கியம் பாதஞ் சலம் வேதாந்தம் என மூவகைப்படும். அவை உபநிட

---

1. *இது பிரமாணவியல், கருமபேதவியல், அங்காங்கி யியல், பிரயோகவியல் முறைமைப்பாட்டியல், பயனியல் (அதிகாரவியலுமாம்), மாட்டேற்றியல், ஊகவியல், விலக் கியல், பிரசங்கவியல் எனப் பன்னிரண்டு அத்தியாயங் களையுடையது. இதிலுள்ள சூத்திரங்கள் இரண்டாயிரத்து எழுநூற்று நாற்பத்தொன்று. இந்நூலுக்குப் பாடியம சபரமுனிவராற் செய்யப்பட்டது. சூத்திரத்திற்கும் பாடி யத்திற்கும் சிறுபான்மை வேறுபாடு கொண்டு பட்டாசாரி யன் சூத்திரம்பற்றி வழிநூல் செய்தான் : பட்டன் மாணாக் கனாகிய பிரபாகரன் பாடியமதம்பற்றி வழிநூல் செய் தான். பட்டாசாரிய மதத்திற்கும் பிரபாகர மதத்திற்கும் உள்ள வேறுபாடு* **சிவஞான சித்தியார்** *பரபக்கத்தில் அறியத் தக்கது.*

2. *நியாயமும் வைசேடிகமும் தருக்கமென்னும் பொதுப்பெயரான் வழங்கப்படும். நியாயநூல் ஐந்து அத்தியாயங்களுடையது. இதிலுள்ள சூத்திரங்கள் ஐந்நூற்று முப்பத்தொன்பது. வைசேடிக நூல் பத்து அத்தியாயங்களுடையது. இதிலுள்ள சூத்திரங்கள் முந் நூற்று எழுபத்து மூன்று.*

தங்களை எடுத்துக்காட்டி யிருடிகளாற் செய்யப்படுவன வாய் ஆன்மஞானத்தைப் பலிப்பிக்கும் நூல்கள்.

**அதிமார்க்க நூலாவன :—** உருத்திரர்களாற் செய்யப்பட்ட பாசுபதம் காபாலம் மகாவிரதம் என்பன.

**மாந்திர நூலாவது :—** சிவன் அருளிச்செய்த சித்தாந்த சாத்திரம்.

இவற்றுள் **மீமாம்சை** நூல் செய்தவன் **சைமினி பகவான்.** இந்நூல் வேதம் ஒருவராற் செய்யப்பட்டதன்றி நித்தியமாய் உள்ளதென்றும், பிரபஞ்ச நித்தமென்றும், இட்டிமுதலிய கன்மங்கள் செய்யவேண்டுமென்றும், கன்மம் செய்தவனுக்கு அந்த வினையே துறக்க முதலிய பலன்களைக் கொடுக்குமென்றும், பௌதிக சரீரேந்திரியங்களுக்கு வேறாய் ஆன்மாக்கள் உண்டு என்றும், ஆன்மாக்கள் பலர் என்றும், இந்த ஆன்மாக்களுக்கு வேறாய் ஈசுரன் ஒருவன் இல்லை என்றும் கூறப்படும்.

இனி [1]**வைசேடிக** நூலில் பிருதிவி அப்பு தேயு வாயு என்னும் நான்கு பூதங்களும் அநித்தியம் என்றும், இவற்றிற்குக் காரணம் அவ்வப்பெயர்களால்

---

1. *வைசேடிக நூலிற்கூறும் பொருளாவன : திரவியம் குணம் தொழில் சாதி விசேடம் சமவாயம் இன்மை என எழுவகைப்படும். இன்மை என்பது அபாவம். அது பிராகபாவம் பிரத்யும்சாபாவம் அத்தியந்தாபாவம் அந்யோந்யாபாவம் என நான்குவகைப்படும். இவை தமிழில் முன்னின்மை அழிவுபாட்டின்மை என்றுமின்மை ஒன்றினொன்றின்மை என வழங்கப்படும். இவற்றின் இலக்கணம் தருக்க நூல்களிற் காணப்படும். ஏனைய ஆறு பதார்த்தங்களும் இங்கே கூறப்பட்டி*

வேறுபட்ட பரமாணுக்கள் என்றும், இவற்றிற்கு வேருய்ச் சத்தியத்திற்குக் காரணமாய் நித்தமாகிய ஆகாசம் ஐந்தாம்பூதம் என்றும், இதற்கு வேருய்க் காலமும் திக்கும் ஆன்மாக்களும் நித்தமாய் அருவாய் வியாபகமாய் இருக்குமென்றும், ஆன்மா பரமான் மாவும் சீவான்மாவும் என இருவகைப்படுமென்றும், பரமான்மா ஈசுரனென்றும், சீவான்மா உடம்புதோறும், வேருய்ப் பலவாய் இருக்கும் என்றும், இவற்றிற்கு வேருய்ப் பலவாய் நித்தமாய் அணுவாய் ஞானத்துக் கேதுவாய் ஆன்மாக்கள்தோறும் வெவ்வேருய் இருப் பது மனம் என்றும், பிருதிவி அப்பு தேயு வாயு ஆகா யம் காலம் திக்கு ஆன்மா மனம் என்னும் இவ்வொன் பதும் திரவியம் என்றும், இவற்றிற்கு வேருகிய சுக்கில முதலியன [1]குணபதார்த்தம் என்றும், எழும் புதல் முதலியன கன்மபதார்த்தம் என்றும், குடத் தன்மை ஆடைத்தன்மை யென்ருற்போலும் சாதி சாமானியபதார்த்தம் என்றும், நித்தப்பொருள்களின் வேறுபாடுணரநிற்பது விசேடபதார்த்தம் என்றும், குடத்தில் குடத்தன்மை யென்ருற்போலும் சம்பந்தம் சமவாயபதார்த்தம் என்றும், இவ்வறுவகைப் பதார்த் தங்களுள் ஆன்மா என்னும் பதார்த்தத்துக்கு மனத் தோடு சையோகத்தால் ஞானம் உண்டாமென்றும், அதனுனே புண்ணிய பாவங்களாகிய கன்மானுட்டா னம் உண்டாமென்றும், அதனுனே சுவர்க்க நரகங்கள் சரீரமுதலாயின வுளவாமென்றும், எல்லாம் வல்லவன்

---

1. *குணங்கள் உருவம் சுவை நாற்றம் ஊறு முதலி யனவாக இருபத்துநாலு வகைப்படும்.*

ஈசுரன் என்றும், ஈசுரனுக்கு மனத்தோடு சையோகத்தால் ஞானம் உண்டாமன்றி இயற்கை ஞானம் இல்லை என்றும், இவ்வாறு பதார்த்தங்களுடைய பொதுவியல்பு வேற்றியல்புகளை யறியும் ஞானத்தால் ஆன்மாக்களுக்குக் கன்மம் நசிக்குமென்றும், கன்மம் நசிக்கவே மனத்தோடு சையோகத்தால் தோன்றும் ஞானமின்றிப் பாடாணம்போற் கிடப்பர் அதுவே முத்தியென்றும், வேதம் ஈசுரனாற் கூறப்பட்டதென்றும் சொல்லப்படும்.

இனி, **நியாயநூலில்** பிரமாண முதலிய [1]பதார்த்தங்கள் பதினாறு என்றும், பதார்த்த இலக்கணமும் முத்தி இலக்கணமும் வைசேடிக நூலிற் கூறியவாறே என்றும், ஈசுரன் செய்விப்பன் என்றுங் கூறப்படும். இவ்விரண்டு நூலுஞ் செய்தார் [2]**கணாதரும் அக்கபாதரும்** என உணர்க.

இனிச் [3]**சாங்கியநூலில்** பிரகிருதி நித்தமாய் வியாபகமாய்ச் சடமாய் எல்லாப்பொருட்குங் காரணமாய்ச்

---

1. *பிரமாண முதலிய பதார்த்தங்கள் பதினாறுவன: பிரமாணம், பிரமேயம், ஐயம், பிரயோஜனம், திருஷ்டாந்தம், சித்தாந்தம், அவயவம், தர்க்கம், நிர்ணயம், வாதம், ஜல்பம், விதண்டை, ஏத்துவாபாசம், சலம், சாதி, நிக்கிரகஸ்தானமென்பன.*

2. *வைசேடிகநூல் செய்தவன் கணாதமுனிவன். நியாயநூல் செய்தவன் அக்ஷபாதமுனிவன். இம்முனிவன் கௌதமப் பெயராலும் கூறப்படுவன்.*

3. *சாங்கியநூலில் கூறப்படும் சற்காரியவாதம் சைவ முதலிய சற்காரிய வாதநூல்கட்கும், இதிற் கூறப்படும் அத்தியாசவாதம் மாயாவாதத்துக்கும் உபகாரமாம்.*

சாத்துவிகம் இராசதம தாமதம என்னு முக்குணங் களுஞ் சமமாய்நின்ற அவதரமாய் அருவாய் இருக் கும் என்றும், இந்தப் பிரகிருதி இருபத்துநான்காம் தத்துவம் என்றும், இந்தப் பிரகிருதியின்காரியம் புத்தி தத்துவமுதற் பிரகிருதிதத்துவம் ஈருக இருபத்துமூன்று தத்துவம் என்றும், இந்த இருபத்துநான்கு தத்துவங் களுக்கும் வேருய் நித்தமாய் வியாபகமாய் அருவாய் [1]நானுபேதமாய் முற்றுணர்வும் தொழிலுமின்றி அறிவு மாத்திரமாயிருக்கும் ஆன்மாக்கள் இருபத்தைந்தாம் தத்துவம் என்றும், இந்த ஆன்மாக்களுக்கு முத்திகாலத் தும் பெத்தகாலத்தும் வேற்றுமை இல்லை என்றும், சொரூபத்தில் அழுக்கு இல்லை என்றும், அநாதியே புத்தியைச் சார்ந்த அவித்தை வசத்தால் சுகதுக்க ஞானம் தோன்றும் என்றும், அதனுல் பெத்தன் ஆயினு னென்றும், பிரகிருதியையும் புருடனையும் பகுத்தறியும் விவேக ஞானத்தால் அவித்தை நீங்கலே முத்தி என் றும், ஆன்மாக்களுக்கு வேருய் ஈசுரன் ஒருவன் இல்லை என்றும் கூறப்படும். இந்தநூல் செய்தவன் **கபிலமுனி.**

இனிப் [2]**பாதஞ்சலநூலில்** பிரகிருதியும் [3]பிராகிரு தங்களும் ஆன்மாக்களும் பெத்தமுத்திகளும் சாங்கிய நூலிற் கூறியவாறே என்றும், விவேகஞானம்போல

---

*இந்தச் சாங்கியம் நிரீசுவர சாங்கியம் அது* 'विंश्व निरीश्वरमिदं जगदाह सांख्य:' *எனவரும் சுருதிசூக்திப [illegible] யால அறியப்படும்.*

1. *நானு - பல.*
2. *இது யோக சாஸ்திரமென்றும் சொல்லப்படும்.*
3. *பிராகிருதம் - பிரகிருதியின் காரியம்.*

யோகமும் [1]யோகாங்கமும் முத்திக்குக் காரணம் என்றும், இருபத்தாரும் தத்துவம் ஈசுரன் ஒருவன் உண்டென்றும், அவன் எல்லாவற்றையும் அதிட்டித்து நின்று செய்வோனுகலானும் ஆன்மஞானத்தை உபதேசிப்பவனுகலானும் ஆன்மாக்களுக்கு வேறு என்றுங் கூறப்படும். இந்த நூல் செய்தவன் **பதஞ்சலி பகவான்.**

இனி [2]**வேதாந்தவாதிகள்** : பாற்கரியனும், மாயாவாதியும், சத்தப்பிரமவாதியும், கிரீடாப்பிரமவாதியும் என நான்கு வகைப்படுவர்,

இவருள் **பாற்கரியர்** ; சுரர் நரர் விலங்கு முதலிய சடசித்துக்களெல்லாம் பிரமத்தினுடைய பரிணமம் என்றும், 'இந்தப் பிரமம் சச்சிதானந்தமாய் நித்தமாய் வியாபகமாய் இருக்கும் அதுவே ஈசுரன் என்றும், பரிணமித்து விகாரப்பட்டதை அறியாமையினுற் பந்தமாயிற்று என்றும், பாரமார்த்தத்தில் ஒரு பொருளே என்றும், வேதாந்தஞானத்தால் சரீரத்திற்கு வேருகிய

---

1. *யோகாங்கம் - இமயம நியம முதலிய எண்வகை யோகவுறுப்புக்கள்.*

2. *வேதத்திற் கூறப்படும் கருமகாண்ட ஆராய்ச்சி செய்தற் கெழுந்த மீமாஞ்சை நூல் வேதாந்தமெனப்படும். பாசுபதமென்பது யோகப் பெயராற் சைவாகமங்கடகும் ரூடிப்பெயராற் பாசுபதாகமங்கட்கும் ஆமாறுபோல வேதாந்தமென்பது யோகப் பெயரான் வேதத்தின் முடிபாகிய உபநிடதங்களைக் கூறும் : ரூடிப் பெயரான் அவற்றை எடுத்துச் செய்த ஏகான்மவாத நூலைக் கூறும். ஆகவே இங்கே வேதாந்தமென்றது ஏகான்மவாதமாம்.*

ஆன்மருபம் விளங்கும் என்றும், அதுவே பரப்பிரமம் என்றறிந்து அதன்கண் இலயித்தலே முத்தி என்றும் கூறுவர்,

இனி, **மாயாவாதிகள்:** முன்சொன்ன பிரமமே பார மார்த்திகத்திலே மெய்ப்பொருள் என்றும், அஃது ஒழிந்து காணப்பட்ட பொருளெல்லாம் இப்பியில் வெள்ளிபோலப் பொய்ப்பொருள் என்றும், சகத்திற்கு உபாதானம் மாயை என்றும், [1]அந்த மாயை பிரமம் போல மெய்ப்பொருளும் அன்று முயற்கோடுபோலப் பொய்ப்பொருளும் அன்று என்றும், மாயைக்கு வேருகப் பிரமசொருபம் நான் என்றும், வேதாந்த ஞானத்தால் அறிவது முத்தி என்றும் கூறுவர்.

இனிச் **சத்தப்பிரமவாதிகள் :** காரணமான பரப்பிரமம் பிரளயகாலத்தில் சத்தவடிவாயிருக்கும் என்றும், சடசித்துக்களாய்த் தோன்றியழியும் எல்லாப் பொருள்களும் சத்தத்தினுடைய விகாரம் என்றும், சத்தரூபமே முழுதும் என்றறிவது முத்தி என்றும் கூறுவர்.

இனிக் **கிரீடாப்பிரமவாதிகள் :** முன் கூறப்படும் பிரமமே நான் என்றும், நான் ஒருபடித்தன்றிப் பல வகையாய் நானுவிதமான விகாரப்பொருள்களோடுங் கூடி விளையாடுகின்றேன் என்றும், இவ்வாறு அறிவதே முத்தி என்றும் கூறுவர்.

இந்த நான்கு மதங்களுக்கும் நூல் செய்தவன் **வேத வியாசன்** என அறிக.

மீமாஞ்சை வைசேடிகம் நியாயம் சாங்கியம்

1. *மெய்ப்பொருளுமன்ருய்ப் பொய்ப்பொருளுமன்ருய் இருப்பதை மாயாவாதிகள் அநிர்வசனீயம் என்பர்; அநிர்வசனீயம் - சொல்லொணுதது.*

பாதாஞ்சலம் வேதாந்தம் என்னும் இவ்வாறு நூலும் **வைதிகசாத்திரங்கள்.** இவ்வாறனுள் வேதாந்தம் ஒன்றுமே **அத்துவிதநூல்;** ஏனை ஐந்தும் **பேதநூல்கள்.**

இந்த அறுவகை நூலும் அன்றி வேதத்திற்குப் புறம்பான நூல்கள் **நாத்திகநூல்கள்;** அவையாவன ;— [1]உலோகாயதம், பௌத்தம், [2]ஆருகதம் என மூவகைப்படும்.

அந்த மூன்றனுள் **உலோகாயதநூலில் :** காட்சி ஒன்றே பிரமாணம் என்றும், காட்சிப் பொருளாகிய பிருதிவி அப்பு தேயு வாயு என்னும் நான்குமே மெய்ப்பொருள் என்றும், இந்த நான்கு பூதக்கூட்டமான சரீரமே ஆன்மா என்றும், உடல்வளர அறிவுவளரும் உடம்புதேய அறிவுதேயும் என்றும், ஈசுரன் என்று ஒருவன் இல்லை என்றும், சரீரம் நசித்தால் மேலைக்கு ஆவதொருவினை இருப்பது இல்லை என்றும், ஆதலால் உடம்பிற்கு வேருய் ஆன்மா ஒருவன் இல்லை என்றும் கூறப்படும். இந்த உலோகாயத நூல் செய்தவன் **பிருகற்பதிபகவான்.**

இனிப் [3]**பௌத்தநூலில்,** பிருதிவிமுதல் புத்திதத்துவம் ஈருகத் தத்துவம் இருபத்துமூன்று என்றும், இவற்

1. *உலோகாயதமதம் சார்வாக மென்றும் பெயர் பெறும்.*

2. *ஆருகதம், ஜைனம், சமணமென்பன ஒரு பொருட்சொற்கள்.*

3. *பௌத்தநூல் திரிபிடகமென்னும் பெயரால் கூறப்படும். அவை சுத்தபிடகம், விநயபிடகம், அபிதர்ம பிடகமென்னும் பெயரின.*

றுள் புத்திதத்துவம் பிரதானம் என்றும், பாஞ்ச பௌதிகமான சரீரத்தில் புத்திதத்துவமே உள்ளது என்றும், இந்தப் புத்திதத்துவ முதலிய எல்லாப் பொருளும் [1]கணபங்கம் என்றும், இவ்வாறின்றித் [2]திரமாகிய ஆன்மா என்பதும் ஈசுரன் என்பதும் இல்லை என்றும் கூறப்படும். இந்தநூல் செய்தவன் **ஆதிபுத்தன்**. இந்த நூலிற் கூறப்படும் முத்தியாவது தண்ணீர் ஓட்டம் போல அநித்தியமாய் அனுபவிக்கப்படும் ஞானசந்ததியே மோக்ஷமாம். இன்பத்துன்பத் தொடர்ச்சியின்றிச் சுத்தமான ஞானசந்ததியே முத்தியென்பர் சிலர். முறைமுறையாய் வளராநின்ற தீபம் எண்ணெயும் திரியும் தேய்ந்தவிடத்துக் கெடுவதுபோல ஞானசந்ததியினது நாசமே முத்தியென்பாரும் உளர்.

இந்தப் பௌத்தர்; [3]சௌத்திராந்திகன், வைபாடிகன், மகாயானிகன், மாத்தியமிகன் என்று நால்வகைப் படுவர். இவருள் ஒருசாரார் காணப்படும் பொருளெல்லாம் அசத்தியம் ஞானசந்ததி ஒன்றுமே சத்தியம் என்பர். மற்றொரு சாரார் இந்தப் பொருள் அனைத்தும் சத்தியமே கணபங்கம் என்பர்.

இனி [4]**ஆருகதநூலில் :** ஆருகதநூல் செய்தவன்

---

1. *கணபங்கம் - க்ஷணந்தோறும் அழிவது.*

2. *திரம் - ஸ்திரம்: நிலையாயுள்ளது.*

3. **சிவஞான சித்தியாரிலும் சிவஞானபாடியத்திலும்** *பௌத்தம் சௌத்திராந்திகம் யோகாசாரம் மாத்தியமிகம் வைபாடிகமெனா நால்வகைப்படுமென்று கூறப்படுதலின், இங்கே கூறிய மகாயானிகன் சௌத்திராந்திகனாதல் அறியப்படும்.*

4. *ஆருகத சமயத்தை அநுசரிப்பவர்கள் சுவேதாம்*

அருகன் என்றொரு கடவுள் அநாதியே உள்ளவன் என்றும், சீவன் என்றொரு பதார்த்தம் அநாதியே குற்றமுடைத்தாயிருக்கும் என்றும், இந்தச் சீவன் தூலதேகம் தேயத்தேயும் வளரவளரும் என்றும், மற்றை இந்திரியங்களும் உள என்றும், இவையெல்லாம் அத்திகாயம் நாத்திகாயம் என்று வழங்கப்படும் என்றும், ஆருகதநூற்பொருள் ஞானத்தாலும் அந்த நூலிற் கூறும் [1]சுடுபாறையிற் கிடத்தல் முதலிய தவங்களாலும் சீவன் உயிர்க்கொலை முதலிய பாவங்கள் நீங்கி அருகன்போலக் குற்றந்தீர்ந்தவன் ஆவனென்றும், இந்த நூலும் இந்தப்பதார்த்தமும் உண்டோ இல்லையோ என்று வினவினுல் உண்டாம் இல்லையாம் உண்டும் இல்லையுமாம் என்று [2]மூவகையாற் சொல்லப்படும் என்றும் கூறப்படும்.

உலோகாயதன் பௌத்தன் சமணன் என்னும் இம்மூவரும் ஆசாரமில்லிகளாகிய நாத்திகர், இவர்

---

*பார் திகம்பரரென இருவகைப்படுவர். மகததேசத்தில் தங்கியவர்கள் வெள்ளாடை தரித்தமையின் சுவேதாம்பரரெனவும், கர்நாடகஞ் சென்றவர்கள் பழைய நிர்வாணக் கோலமே தாங்கினமையின் திகம்பரரெனவும் வழங்கப்பட்டாரென* **R. C.** *தத்தர் கூறுகின்றார். இவர்கட்கு நூல் பன்னிரண்டு அங்கங்களென்ப.*

1. *சுடுபாறையிற் கிடத்தல் தலைமயிர் பறித்தல் முதலிய தவம் நிர்ச்சர பதார்த்தமெனப்படும்.*

2. *இம்மூன்றனோடு சொல்லொணுதநாம் என்பதும் கூட்டி ஏழுவகையாற் கூறப்படும். 'ஆம என்பது ஈண்டுச் சுற்றென்னும் பொருட்டாய தோரிடைச் சொல்' என்பது* **சிவஞான பாடியம்** *அவையடக்கம். இவ்வாறு கூறுவது சப்தபங்கி நியாயமெனப்படும்.*

ஈசுரன் என்ற அநாதிப்பொருள் ஒன்றில்லை என்பர். இந்த மதம் மூன்றும் வேதத்திற்குப் புறம். இவற்றிற்கு முன் கூறப்பட்ட ஆறு நூல்களும் வைதிக நூல்கள்.

இவ்வாறுக்கும் பிறப்பிடமாகிய **வேதங்கள் :** இருக்கும் எசுரும் சாமமும் அதர்வணமும் என நால்வகைப் படும்.

இவைகளுக்கு **அங்கமாவன :** சந்தோபிசிதியும் கற்பசூத்திரமும் சிக்கையும் வியாகரணமும் நிருத்தமும் சோதிடமும் என ஆறு வகைப்படும்.

வேதத்திற் கூறப்படும் விதிவிலக்குகளைப்பற்றிப் பிராமணர் முதலிய சாதிகளையும் பிரமசாரி முதலிய ஆச்சிரமங்களையும் விதிப்பதும், உபநிடதங்களைப் பற்றிப் பிரகிருதி புருடன் ஈசுரன் இலக்கணங்களைக் கூறுவதும், வேதத்திற் பெறப்படும் ஒழுக்கம் வழக்கு தண்டங்களை நியமிப்பதும் செய்வனவாகிய [1]மனு முதலிய **தருமசாத்திரங்கள்** பதினெட்டு வகைப்படும். இந்த மிருதிகளைச் செய்தவர் **மனு முதலிய இருடிகள்.**

இனி வாசுதேவனாற் செய்யப்பட்ட [2]**பாஞ்சராத்திரத்தில் :** இருபத்துநான்காம் தத்துவமாகிய குணதத்துவத்திற்குமேல் இருபத்தைந்தாம் தத்துவம் வாசுதேவன்

---

1. *மிருதி பதினெட்டாவன :—மனுஸ்மிருதி, நகஸ பதிஸ்மிருதி, தக்ஷஸ்மிருதி, யமஸ்மிருதி, கௌதமஸ்மிருதி, அங்கிரஸ்மிருதி, யாக்ஞவல்க்யஸ்மிருதி, பிரசேதஸஸ்மிருதி, சாதாதபஸ்மிருதி, பராசரஸ்மிருதி, சம்வர்த்தஸ்மிருதி, உசனஸ்மிருதி, சங்கஸ்மிருதி, லிகிதஸ்மிருதி, அத்திரிஸ்மிருதி, விஷ்ணுஸ்மிருதி, ஆபஸ்தம்பஸ்மிருதி, ஹாரிதஸ்மிருதி என்பன.*

2. *இந்தப் பாஞ்சராத்திரம் புறச்சமயங்களில் ஒன்று.*

என்ருெரு பரம்பொருள் உண்டென்றும், அந்தப் பரம் பொருளினின்றும் கிருட்டினனும் அனிருத்தனும் மகரத்துவசனும் ரௌகிணேயனும் என்ற நான்கு வியூகங்கள் சகத்தைப் படைத்தற்பொருட்டுத் தோன் றும் என்றும், இந்த நான்கு வகுப்பினுல் சடமும் சித் தும் ஆகிய எல்லா உலகும் படைக்கப்பட்டன என் றும், வேதாந்தவாதிகள் நால்வரில் பரிணுமவாதி சொல் வதுபோல எல்லாம் வாசுதேவன் வடிவு என்றும், வேதங்களில் உறுதிப்பயன் இல்லை பாஞ்சராத்திரத்தில் உறுதிப்பயன் உண்டு என்றும், ஆகையால் பாஞ்சராத்தி ரத்தின் முறையே தீக்கை செய்துகொண்டு வாசு தேவனை வழிபட்டு அவன்வடிவில் இலயமாதலே முத்தி என்றும் கூறப்படும்.

இனி, **இதிகாசபுராணங்களில்** [1]வைதிக கன்மங் களும் சாங்கியம் பாதஞ்சலம் பாஞ்சராத்திரம் பாசுபதம் சைவம் என்னு மிவற்றிற் கூறும் பொருள்களும் தோற்ற வொடுக்கங்களும் பாரம்பரியங்களும் வந்தரங்களும் பாரம்பரியக் கதைகளும் கூறப்படும்.

**இதிகாசமாவது** மகாபாரதம்.

**புராணங்கள்** பதினெட்டு வகைப்படும். ( குக் கருத்தன் **வேதவியாசன்.** இருபத்தைந்தாம் தத்து வம் ஆன்மா என்றும், தீக்கையான் முத்தியென்றும் புரா ணங்களிற் கூறப்படும்.

இனி அதிமார்க்கநூல் மூன்றனுள் [2]**பாசுபத**

1. *வடமொழி மூலப்பிரதிசிலவற்றில் ' वैदिकधर्माणाञ्च ' என்ற பாடம் காணப்படுகின்றது.*

2. *பாசுபதம் சங்கிராந்த சமவாதமென்று கூறப் படும்.*

**நூலில் :** ஆன்மாக்கள் பலவாய் நித்தமாய் வியாபக மாய்க் காரியகாரண சையோகத்தால் தோன்றும் ஞானத்தால் தனித்தனி வேறுபாடுடையனவாய் இருக் கும் என்றும், இவ்வான்மாக்களுக்கு ஆணவம் இல்லை என்றும், மாயை கன்மங்கள் என்று இரண்டு பாசங் கள் உண்டு என்றும், பாசங்களால் சுகதுக்கங்களை ம் என்றும், [1] வைராக்கிய முண்டாய்ச் சாத்திரத்திற் கூறியபடியே தீக்கைபெற்று ஆன்மாவி னிடத்துப் பரமேசுரனுடைய ஞானமுதலிய குணங்கள் சங்கிராந்தமாய்ப் பற்றும் என்றும், அப்போது குடும்ப பாரத்தைப் புத்திரரிடத்து வைத்துவிட்டுத் துறவறத் திற் செல்லுவார்போல ஈசுரனும் தன்னுடைய ஞானம் முத்தனிடத்துச் சங்கிரமிக்கச்செய்து தன்னதிகாரத்து ஒழிவு பெற்றிருப்பனென்றும் கூறப்படும்.

இனி, [2] **மகாவிரதநூலில் :** பாசுபதர் கூறிய முறையே மாயை கன்மங்களுடன் [3] ஆணவமலமும் உண்டென்றும், ஆன்மாக்களுக்குப் பெத்தத்தும் முத்தி யினும் ஞானசத்தியேயன்றிக் கிரியா சத்தி இல்லை என் றும், சாத்திரத்திற் கூறியபடியே தீக்கை பெற்று எலும் பணிதல் முதலிய சரியைகளை அனுட்டிப்போர் முத்த ராவ ரென்றும், இந்த முத்தருக்குக் கேவலம் ஞானசத்தி மாத்திரமே உண்டு, ஞானம் கிரியை என்னும் இரண்டு சத்தியும் பரமேசுரன் ஒருவனுக்கே என்றும் கூறப் ப(

1. *வைராக்கியம் - உவர்ப்பு.*

2. *மகாவிரதம் உற்பத்தி சமவாதமென்று கூறப் படும்.*

3. *பாசுபதர் ஆணவமலத்துண்மை கொள்ளார் ; மகாவிரதர் ஆணவமலத்துண்மை கொள்வர்.*

இனி [1] **காபாலிக நூலில் :** ஆன்ம இலக்கணமும் பந்த இலக்கணமும் பாசுபதர் மகாவிரதர் கூறியபடி என்றும், சாத்திரத்திற் கூறிய முறையே தீக்கைபெற்றுத் தினந்தினம் பச்சைக்கொடி ஒன்று பிடித்துக் கொண்டு மனிதர் தலையோட்டில் பிச்சையேற்று உண்ணவேண்டும் என்றும், மகாவிரதர் கூறிய முறையே முத்தி என்றும், கூறப்படும். பாசுபதம் மகா விரதம் காபாலிகம் என்னும் அதிமார்க்கசாத்திரம் மூன்றும் மாயை வித்தை காலம் என்னும் தத்துவங்களில் இருக்கும் உருத்திரர் மூவராற் செய்யப்பட்டன.

இனி மறுமையிற் பலிக்கும் சித்தாந்தசாத்திரத்தை இம்மையிலே தெளிவிப்பனவாய்க் [2] **காருடம் தக்கிணம் வாமம் பூதம்** என நான்கு நூல்கள் உள்ளன. அவை தற்புருடம், அகோரம், வாமம், சத்தியோசாதம் எனக் கீழ் உள்ள நான்கு முகங்களால் பரமசிவன் அனுக்கிரகஞ் செய்யப்பெற்று அந்தப் பெயர்கொண்ட விஞ்ஞானகலர் நால்வராற் செய்யப்பட்டன.

இவற்றுள் **காருடதந்திரத்தில் :** தற்புருடமே பிரமரூபமாகத் தியானம் செய்து பூசிக்கற்பாற்று எனக் கூறப்படும். இந்நூலில் எவ்வகைப்பட்ட பிணியும் கண்கூடாகத் தீர்க்கும் மந்திரங்களும் மருந்துகளும் கூறப்படும்.

1. *காபாலம் ஆவேச சமவாதமென்று கூறப்படும்.*

2. 'सिद्धान्तं गारुड वामं भूततन्त्रं च भैरवं। ऊर्ध्वपूर्वं कुबेरास्य याम्यवक्त्राद्यथाक्रमम्।' *என* ஸ்ரீ காமிகாகமத்திற் *கூறப்பட்டிருக்கின்றது (தந்திராவதார படலம்,* 21.)

இனித் **தக்கிணதந்திரத்தில் :** அகோரமே பிரம ரூபமாகத் தியானம் செய்து பூசிக்கற்பாற்று என்றும், யோகத்தை அனுட்டித்துப் பரமசிவனைக் காணவேண்டும் என்றும் கூறப்படும். பகைவரை வெல்லுதற்கு மந்திரங்களும் இதனுட் கூறப்படும்.

இனி **வாமதந்திரத்தில் :** வாமதேவமே பிரமரூபமாகத் தியானித்துப் பூசிக்கற்பாற்று என்று கூறப்படும். இதனுள் இரசவாதம் முதலியனவும் கூறப்படும்.

இனிப் **பூததந்திரத்தில் :** சத்தியோசாதமே பிரம ரூபமாகத் தியானித்துப் பூசிக்கற்பாற்று என்று கூறப்படும். பூதப்பிரேதப் பிசாசுகளை ஓட்டும் மந்திரங்களும் மருந்துகளும் இதனுட் கூறப்படும்.

இனிச் சத்திதத்துவத்தில் வசிக்கும் ஓர் ஆன்மாவால் செய்யப்பட்டது **சாத்தநூல்.** இந்தத் தந்திரத்தில் பாற்கரிய வேதாந்திபோலச் சடசித்துக்கள் எல்லாம் சத்தியின் பரிணமம் என்று கூறப்படும்.

இனிக் **'கௌளம் யாமளம்** முதலிய தந்திரங்கள் **மச்சேந்திரநாதர் முதலிய மானுட சித்தரால்** செய்யப் பட்டன.

---

1. *'கவுளர் அருவுருவப் பொருள் உயிரென்பர்' என்பது* **சிவஞானசித்தியார்** IV. 11-*ஆம்திருவிருத்தவுரை. இவர்கள் குணசாஸ்திர வாதிகளென* **ஸ்ரீ காமிகாகமத்து** *ஆசாரியாபிஷேக விதி படலத்திற் கூறப்பட்டது (சுலோகம்,* 20). *தந்திராவதார படலத்தில்* 26-*ஆவது சுலோகத்திலும் இப்பெயர் கூறப்பட்டிருக்கிறது. ஆயினும் இது வேறென்றும தெரியவருகிறது.*

இனி [1] உலோகாயத ஞானிகள் பிருதிவி அப்பு தேயு வாயு என்னும் நான்கு பூதங்களையும் அறிந்தமையால் அவர்களுக்கு அவற்றின் கீழ்ப்பட்ட புவனங்களிற் பிறவி ஒழியும். ஆருகதருக்குக் குணதத்துவத்தின் கீழ்ப்பட்ட தத்துவங்களிற் பிறவி ஒழியும். நையாயிக வைசேடியர்களுக்கும் புத்திதத்துவம் வரையும் பிறவி ஒழியும். புத்தருக்குப் புத்திதத்துவத்தின் கீழ்ப் பிறவி ஒழியும். சாங்கியருக்குப் பிரகிருதியையும் புருடனையும் விவேகித்தறிதலால் பிரகிருதிவரையும் பிறவி ஒழியும். பிரகிருதிக்கு மேற்பட்ட மிச்சிராத்துவாக்களை அறியாமையால் கன்மசேடம் உடையவர்கள் ஆதலான் இவர்களுக்கு விஞ்ஞான கேவலத்தன்மை வ ரா து. பாஞ்சராத்திரிகளுக்குப் பிரகிருதிக்குக் கீழ்ப்பட்ட புவனங்களிற் பிறவி ஒழியும். வேதாந்திகள் புருட தத்துவத்தை அடைவர். பௌராணிகர் அராக தத்துவத்தை அடைவர். காபாலிகர் காலதத்துவத்தை அடைவர். பாசுபதர் மாயாதத்துவத்தை அடைவர். மகாவிரதர் வித்தியாதத்துவத்தை அடைவர். காருடம் தக்கிணம் வாமம் பூதம் என்னும் தந்திரங்களில் தீக்கை பெற்றவர் சத்திதத்துவத்திலுள்ள நிவிர்த்தி பிரதிட்டை வித்தை சாந்தி என்னும் புவனங்களை முறையே அடைவர். சுத்தமாகிய சாத்தநூலார் சத்திதத்துவத்தை அடைவர்.

---

1, '*அவ்வத் தெய்வங்கள் நிலைபெறும் தத்துவமே அவ்வச்சமயத்தார்க்கு முத்தித்தான மென்பதூஉம் இதனாற் பெறுதும். அவ்வவற்றின்மேலுள்ள தத்துவங்கள் அவ்வச் சமயத்தார்க்குணர்ச்சி செல்லாமையின், அவ்வத்தத்துவத்தின் அளவினன்றி அவருக்கு மேற்சேறல் கூடாமையறிக*' *என்பது* **சிவஞான சித்தியார் II. 73**-*ஆம் திருவிருத்தவுரை.*

கௌளம் யாமளம் முதலிய சாத்திரங்களிற் பெண் புணர்ச்சி கொலை முதலியன உண்மையால் இவர்கள் பிசாசபதத்தை அடைவார்கள்.

இனிச் **சித்தாந்த சாத்திரமாவன:** விந்துவினின்றும் நாதம் தோன்றி விந்துவும் பிரணவமும் வன்னங்களும் ஆகமுறையே பரிணமித்து அனுட்டுப்புச்சந்தசாய்ச் செய்யப்பட்டன. அவை சிவபேதமும் உருத்திரபேத மும் என இருவகைப்படும். விஞ்ஞானகலரில் பரம சிவன் அனுக்கிரகத்தைப்பெற்ற பிரணவர் முதலிய பெயருடைய [1] பத்துச் சிவன்களுக்கும் சத்தியோசாதம் வாமதேவம் என்னும் திருமுகங்களான் அருளிச்செய்த காமிக முதலிய அபரஞானம் பத்தும் **சிவபேதம்** எனப் படும். இவ்வாறு பரமசிவன்பால் உபதேசம்பெற்ற [2]உருத்திரர் பதினெண்மருக்கும் அகோரம் தற்புருடம் ஈசானம் என்னும் திருமுகங்களான் அருளிச்செய்த விசயம் முதலிய பதினெட்டும் **உருத்திரபேதம்** எனப் படும். இந்த இருபத்தெட்டுச் சிவாகமங்களும் ஒவ் வொன்றிற்குக் கோடிகிரந்தமாக இருபத்தெட்டுக்

---

1. *பத்துச் சிவன்களாவார்: பிரணவர், சுதர், சுதீப்தர், காரணர், சுசிவர், ஈசர், சூக்ஷமர், காலர், அம்பு, தசேசர் என்பவர்.*

2. *உருத்திரர் பதினெண்மராவார்:— அநாதிருத்திரர், தசார்ணர், நிதகேசர், வியோமர், தேஜசு, ப்ராம்ஹணேசர், சிவர், சார்வாத்மகர், அநந்தர், பிரசாந்தர், சூலி, ஆலயேசர், பிந்து, சிவநிஷ்டர், சோமர், ஸ்ரீதேவி, தேவவிபவர், சிவர் என்பவர். இவ்வாறு* **ஸ்ரீ காமிகாகமத்துத்** *தந்திராவதாரபடலத்திற் கூறப்பட்டது.*

கோடி கிரந்தங்களாம். இந்தச் சைவாகமம் இருபத்தெட்டிற்கும் **சித்தாந்தம்** என்று பெயர்.

இவை ஞானபாதம், யோகபாதம், கிரியாபாதம், சரியாபாதம் என்று தனித்தனி நான்கு பாதங்கள் உடையனவாய் இருக்கும்.

இவற்றுள் **ஞானபாதத்தில்:** பரமசிவனுடைய சொரூபமும் விஞ்ஞானகலர் பிரளயாகலர் சகலர் என்னும் ஆன்மாக்களின் சொரூபமும், ஆணவம் கான்மியம் மாயேயம் வைந்தவம் திரோதானசத்தி என்னும் பாசங்களின் சொரூபமும், சத்தியின் சொரூபமும் சிவதத்துவமுதல் பிரகிருதி தத்துவம்வரை முப்பத்தாறு தத்துவங்களினது உற்பத்தியும் இவை ஆன்மாக்கள் போகம் புசிக்கைக்குக் கருவியாம் முறைமையும் புவனங்கள் புவனேசுரர் சொரூபங்களும் புவனங்களின் யோசனைப்பிரமாணங்களும், அதமப்பிரளயம் மத்திமப்பிரளயம் மகாபிரளயங்களின் சொருபங்களும், அந்தப் பிரளயங்களின் பின்னர்ச் சிருட்டியாம் முறைமையும், பாசுபதம் மாவிரதம் காபாலிகம் முதலிய மதங்களின் சொருபங்களும் கூறப்படும்.

இனிக் **கிரியாபாதத்தில்:** மந்திரங்களினது உச்சாரணம் சந்தியாவந்தனம் பூசை செபம் ஓமங்களும், [1]சமயம் [2]விசேடம் [3]நிருவாணம் ஆசாரியாபிடேகங்களும்,

1. *சமயதீக்ஷை சைவாசாரத்திற்கு அதிகாரமளிப்பது.*
2. *விசேடதீக்ஷை சிவபூசைமுதலியவற்றிற்கும், யோகநெறிக்கும், சிவாகமம் ஓதுதற்கும் அதிகாரமளிப்பது.*
3. *நிர்வாணதீக்ஷை சிவாகமங்களின் உண்மைப பொருள் ஆராய்வதற்கு அதிகாரமளிப்பது.*

[1]புத்தி முத்திகளுக்கு உபாயமான தீக்கையும் கூறப் படும்.

இனி **யோகபாதத்தில் :** இந்த முப்பத்தாறு தத் துவங்களும், தத்துவேசுரரும் ஆன்மாவும் பரமசிவனும் சத்தியும் சகத்திற்குக் காரணமான மாயை மாமாயை களைக் காணும் வல்லமையும், அணிமாதி சித்திகள் உண்டாம் முறைமையும், இயமம், நியமம் ஆசனம் பிராணுயாமம் பிரத்தியாகாரம் தாரணம் தியானம் சமாதிகளினுடைய முறைமையும், மூலாதார முதலிய ஆதாரங்களின் முறைமையும் கூறப்படும்.

இனிச் **சரியாபாதத்தில் ;** பிராயச்சித்த விதியும், பவித்திர விதியும், சிவலிங்க இலக்கணமும், உமா மகேசுரர் முதலிய வியத்தாவ்வியத்த இலிங்கங்களின் இலக்கணமும், நந்திமுதலிய கணநாதர் இலக்கணமும், செபமாலை யோகப்பட்டம் தண்டம் கமண்டலம் முத லியவற்றின் இலக்கணமும், அந்தியேட்டி விதியும் சிராத்த விதியும் கூறப்படும்.

### எ. [2]தீக்ஷாப்பிரகரணம்.

**சமயதீக்கை** பெற்றோர் உருத்திரபதம் அடைவர். **விசேடதீக்கை** பெற்றோர் மகேசுரபதம் அடைவர். ஈண்டு உருத்திரபதமென்றது குணதத்துவ மத்தகத்தி லிருக்கும் உருத்திரபதமே ஆம். ஈசுரபதம் என்றது பிரகிருதிக்குமேல் மிச்சிராத்துவாவில் முந்தின தத்துவ மான அராகதத்துவபதமே யாம். ஈசுரனுல் அதிட்டிக்

1. *புத்தி - போகம்.*
2. *தீக்ஷை.*

கப்படுவதாகலான் அந்தத் தத்துவத்தை அடைவதே ஈசுரபதத்தை அடைவது என்று சொல்லப்படும் சாங்கியம் பாதஞ்சலம் வேதாந்தம் பாஞ்சராத்திரங் களிற் கூறும் வழிக்கு மேற்பட்ட நிருவாண தீக்கை யைப் பெற்றவர் பரமசிவனோடு சாமியமான முத்தியை அடைவர்.

இனி **நிர்வாணதீக்கை :** சத்திய நிருவாணம், அசத் திய நிருவாணம் என இருவகைப்படும். அவற்றுள் சத்திய நிருவாணதீக்கை பெற்றோர் தீக்கை பெற்ற போழ்தே சரீரம் நீங்கி முத்தியைப் பெறுவர். அசத் தியநிருவாணதீக்கை பெற்றோர் தீக்கையில் சஞ்சித மும் ஆகாமியமும் சோதித்துச் சரீரம் நிற்பதற்கு ஏது வாய்ப் புசிக்கப்படும் பிராரத்தகன்மம் சோதிக்கப் படாமையால் ஆயுள்முடிவில் சரீரம் நீங்கி முத்தியை அடைவர்.

சாதகதீக்கை பெற்றுச் சிவபத்தி சிவபூஜை செய்துகொண்டு பின்பு வித்தியேசுரர் முதலியோர் பதங்களை விரும்பினவர் அந்தப் பதங்களைப் பெறுவர். அப்பதங்களில் இருப்பவர்க்குள் பற்றற்றவர் அப் பொழுதே முத்தியை அடைவர் ; அல்லாதார் மகாசங் கார காலத்து முத்தியைப் பெறுவர்.

**நிர்ப்பீசதீக்கையாவது :** தீக்கை செய்ததன்பின் அனுட்டிக்கப்படும் சந்தியாவந்தனம் சிவலிங்கார்ச்சனை முதலிய சமயாசாரங்களைத் தீக்கை செய்யும்பொழுதே சோதித்து ஒழிப்பது ஆகலான் பாலர்[1] வாலீசர்

1. *'பாலரொடு வாலீசர் விருத்தர் பணிமொழியார் பலபோகத் தவர் வியாதிப்பட்டவர்க்குப் பண்ணும் சீல மது நிர்ப்பீசம்'*—என்பது **சிவஞான சித்தியார்** VIII. சூ.

விருத்தர் பணிமொழியார் பலபோகத்தவர் வியாதிப் பட்டவர்க்குப் பண்ணுவதாம்.

**சபீசதீக்கையாவது ;** [1]வல்லமையுடைய சமயி புத்திரர் சாதகாசாரியர்க்குப் பண்ணுவதாம். இந்தத் தீக்கையில் சஞ்சிதம் ஆகாமியம் என்னும் இருவகைக் கன்மங்களும் இந்தக் கன்மங்களுக்கு ஈடான எல்லாச் சரீரங்களும் சுத்தி செய்யப்படும். சரீரம் இல்லாமையால் போகங்களும் நசிக்கும். இந்தச் சரீரங்களுக்கு ஏதுவான பிராரத்தகன்மம் சுத்திசெய்யப்படாமையால் சரீரத்துக்குள்ள சுகதுக்கங்கள் அனுபவிக்கப் படும். இவ்வாறு மூவகைக் கன்மங்களும் நாசமாம். ஆகவே தீக்கையானபின் மரணமளவும் சாத்திரங்களின் விதித்த நியமங்களின் வழுவாமை ஆசரிக்க வேண்டும். பரமசிவனது திருவருளாகிய தீக்கையானன்றி மற்றென்றனும் முத்தி இல்லை.

தீக்கை செய்துகொண்டபின்பு ஆசாரத்தில் வழுவினல் புத்திபூர்வமாகச் செய்த பாவம் பிராயச்சித்தத்தினலும் மந்திராதி திரவியங்களின் உபாயங்களாலும் பவித்திர விதியினலும் சுத்தியாம். அபுத்தி பூர்வமாக வழுவினல் அந்தியேட்டிக் கிரியையால் சுத்தியாம்.

தீக்கை செய்துகொண்டபின்பு **ஆவசியகமாக**

---

*4ஆவது திருவிருத்தம்* ' बालबालीशवृद्धस्त्रीभोगभुग्व्याधितात्मनां । यथाशक्तिददीतैतान् समर्थस्यसमग्रकान् '
*என்பது* சோமசம்பு பத்ததி, *விசேஷ தீக்ஷாவிதி*, 24.

1. *'ஓதியுணர்ந் தொழுக்கநெறி யிழுக்கா நல்ல வுத்தமர்க்குச் செய்வதுயர் பீசம்' என்பது ஷை சூத்திரத்து 5-ஆவது திருவிருத்தம்.*

**அனுட்டிக்கப்படும் கன்மங்களாவன:** இயம நியமங்களும் சந்தியாவந்தனம் சிவலிங்கபூசை அக்கினிகாரியங்களும் குருவசனபரிபாலனமும், இயன்றமட்டும்மகேசுர பூசை முதலாயினவுமாம்.

**அனுட்டிக்கலாகாத கன்மங்களாவன:** நிர்மாலியம் புசித்தல், சிவநிந்தை, சிவசாத்திர [1] விதிதாசார நிந்தை, தேவதிரவியங்களை உபயோகஞ்செய்தல், உயிர்க்கொலை முதலாயினவாம்.

இவ்வாறு தீக்கைபெற்று விதித்தபடி அனுட்டித்து முத்தனாகிய ஆன்மாவுக்கு ஆணவம் கான்மியம் மாயேயம் வைந்தவம் திரோதானசத்தி என்னும் பாசங்களினின்று நீங்குதலும், பரமசிவன்போல முழுதுமுணர்தல், முழுதுஞ் செய்தல், சித்தமகிழ்ச்சி, அநாதியாகிய சுதந்திரத்தன்மை, கெடாதசத்தியுடைமை, அளவிறந்தசத்தியுடைமை என்னும் சாட்குண்ணியத்தின் சொரூபத்தைப் பெறுதலும் இலக்கணமாம். இந்தக் குணங்களைப் பெற்றவர்க்குப் [2] பரமசிவனைப் போலப் பஞ்சகிருத்தியம் செய்தல் கூடாது. பரமசிவனே பஞ்சகிருத்தியத்தால் பிறருக்கு அனுக்கிரகம் செய்வர் என அறிக.

சர்வாத்மசம்பு சிவாசாரியராற் செய்யப்பட்ட வடமொழிச் சித்தாந்தப் பிரகாசிகை திருவாவடுதுறைச் சிவஞானமாதவனுற் **சித்தாந்தப்பிரகாசிகை** யெனத் தென்மொழியாற் செய்யப்பட்டது.

ம்பலம்.

1. *விதிதம்—விதிக்கப்பட்டது.*

2. *'உம்பர்பிரா னுற்பத்தி யாதிகளுக் குரிய னுயிர் தானுஞ் சிவானுபவ மொன்றினுக்கு முரித்தே'* என்பது **சிவஞானசித்தியார்**, XI. 10-*ஆவது திருவிருத்தம்.*

சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# மெய்கண்டசாத்திரம்

## 5.

(பழையவுரையுடன்)

திருத்துறையூர்—
ஸ்ரீ அருணந்திதேவ நாயனுர்
1954

திருச்சிற்றம்பலம்

தணவிலா மலத்தின் குருடனேற் குடலந்
தானொரு கோலெனக் கொடுத்துச்
சத்தமே யாதி விடயமோ ரைந்தின்
றன்வழி புசித்திடத் தந்து
குணவழி நடவார் குணவழி நடந்து
குணத்தினைத் திருப்புவார் போலக்
கொடுவினை யொப்புச் சத்திநி பாதங்
கூர்மல பாகமுங் குறித்தே
இணையிலா வின்ப வடிவமா மூன்றோ
டென்னையு மிரண்டற வைத்தாய்
ஏழையே னுன்ற னடியருக் கடியா
னென்னவும் பற்றிலே னரவின்
அணைதுயி லெழுந்தே யருவிகண் பொழியு
மரியரிக் குரைத்தகூத் துடையாய்
ஆவடு துறைசை யம்பல வாணா
வடியவர்க் கருளுமா நிதியே.

திருச்சிற்றம்பலம்

—உலகுடைய நாயனார்.

சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# திருத்துறையூர்-அருணந்திதேவநாயனுர்

அருளிச்செய்த

# இருபாவிருபது

நேரிசை வெண்பா

**கண்ணுதலும் கண்டக் கறையும் கரந்தருளி**
**மண்ணிடையின் மாக்கள் மலமகற்றும்—வெண்ணெய்நல்லூர்**
**மெய்கண்டான் என்றொருகால் மேவுவரால் வேறின்மை**
**கைகண்டார் உள்ளத்திற் கண்.** (1)

இதன் பொருள்

என்பது :—கண் நுதலும் கண்டம் கறையும் கரந்தருளி—பூரண கர்த்தாவாக இருக்கப்பட்ட ஸ்ரீ கண்டபரமேசுவரன் ஆசாரிய விக்கிரகமாகத் திருமேனிகொண்டு எழுந்தருளும் அவதாரத்து நெற்றியில் திருநயனமும், திருமிடற்றில் தரித்தருளின நஞ்சமாகிய கறுப்பினையும் மறைவுசெய்தருளி,— மண்ணிடையில் மாக்கள் மலம் அகற்றும்—பூமியின் கண்ணே வியாபரிக்கப்பட்ட ஆன்மாக்களுக்கு உண்டாய பாசத்தைத் தீட்சாக்கிரமங்களினுலே போக்குகிற,— வெண்ணெய் நல்லூர் மெய்கண்டான்— திருவெண்ணெய் நல்லூர் என்கிற திருப்படைவீட்டிலே திருவவதாரம் செய்த மெய்கண்டதேவன் என்கிற திருநாமத்தினையும் தரித்தருளினவனே ! ,— என்று ஒரு கால் மேவுவரால்—என்று ஒருகால் சென்று பொருந்தி நினைத்தவர்கள்,— வேறு இன்மை கைகண்டார் உள்ளத்தில் கண்—உயிருக்குயிராயிருக்கிற சிவனைத் தங்களிடத்திலே புலப்படக் கண்டவர்கள் என்பதாம்.

(கருத்து) கடவுள் வணக்கமாகிய குருதுதி. என்கவே சிவம் என்றும் ஆசாரியர் என்றும் வேறாய் இராது இரண்டும் ஒரு முதல் என்பது கண்டு கொள்க என்றவாறு.

அப்படியானால், இந்தச்சிவன் இப்படி மானிட வேடமாக வர வேண்டுவானேன்? எனில், அஃதாவது விஞ்ஞானகலர் பிரளயா கலர் சகலர் என்னப்பட்ட மூவகை ஆன்மாக்களையும் சிவன் இரட் சிக்குமிடத்து யாதாமொருபட்சிகளை மிருகங்களைப்பிடிக்க வேண்டி னவர்கள் அதற்கதற்கு ஏற்ற இனப்பார்வைகளைக்காட்டிப் பிடித் தாற்போல ஆன்மாக்கள் எடுக்கப்பட்ட உருவத்துக்குத்தக்க திரு மேனிகொண்டருளுவன்; என்பதற்குப் பிரமாணம்:— "எவ்வுல கத்து மூர்த்தி எதுகொண் டிவனி யங்கும், அவ்வுல கத்து மேனி அதுகொண்டங் கமரு மீசன் (ஞானபூசாகரணம்—13) என்பது கண்டு கொள்க.

இனி, சகலராயுள்ள மானிடரை இரட்சிக்குமிடத்து அவர் களைப்போல மானிடச்சட்டை சாத்தி ஆசாரிய விக்கிரகமாக எழுந் தருளுவன் என்பதற்குப் பிரமாணம்:—

"நன்னெறிவிஞ் ஞானகலர் நாடுமல மொன்றினையும்
அந்நிலையே உண்ணின் றறுத்தருளிப்—பின்னன்பு
மேவா விளங்கும் பிரளயா கலருக்குத்
தேவாய் மலகன்மம் தீர்த்தருளிப்—பூவலயம்
தன்னின்று நீங்காச் சகலர்க் கவர்போல
முன்னின்று மும்மலம்தீர்த் தாட்கொள்கை—அன்னவனுக்
காதிகுணம் ஆதலினால் ஆடும் திருத்தொழிலும்
சோதி மணிமிடற்றுச் சுந்தரமும்—பாதியாம்
பச்சை யிடமும் பவளத் திருச்சடைமேல்
வைச்ச நதியும் மதிக்கொழுந்தும்—அச்சமுற
ஆடும் அரவும் அழகார் திருநுதல்மேல்
நீடுருவ வன்னி நெடுங்கண்ணும்—கேடிலயம்
கூட்டும் தமருகமும் கோல எரியகலும்

பூட்டரவக் கச்சும் புலியதளும்—வீட்டின்ப
வெள்ளத் தழுத்தி விடுந்தா ளினுமடியார்
உள்ளத்தி னும்பிரியா ஒண்சிலம்பும்—கள்ளவினை
வென்று பிறப்பறுக்கச் சாத்தியவீ ரக்கழலும்
ஒன்றுமுருத் தோன்றாமல் உள்ளடக்கி—என்றும்
இறவாத இன்பத் தெமையிருத்த வேண்டிப்
பிறவா முதல்வன் பிறந்து—நறவாரும்
தாருலா வும்புயத்துச் சம்பந்த நாதனென்று
பேரிலா நாதனொரு பேர்புனைந்து—பாரோர்தம்
உண்டி உறக்கம் பயமின்பம் ஒத்தொழுகிக்
கொண்டு மகிழ்ந்த குணம்போற்றி.''
(போற்றிப்பஃறொடை 60–70) எனவும்;

''அருபாத் தொருவன் அவனியில் வந்து
குருபா னாகி அருளிய பெருமையைச்
சிறுமை யென்றிக ழாதே'' (திருவாசகம்) எனவும்;

''உணர்வாய் நின்ற ஞானக் கூத்தனொரு மூர்த்தி கொடு குறுகி'' எனவும், ''இறையருளுருவாய் வந்து கூட்டிடும்'' (சிவப்பிரகாசம்) எனவும் வரும் ஏதுக்களைக் கொண்டு கண்டுகொள்க.

இவ்வுதாரணங்களைக் காட்டியது இந்நூலாசிரியரை முன்னிலைக் கர்த்தாவாக நாட்டி வருகையால் ஆசாரியருக்கும் கர்த்தாவுக்கும் வேற்றுமையில்லை என்னும் கருத்தைப்பற்றி என அறிக.

இந்நூற்பயன் புறச்சமயத்தாரால் மயங்காமை. இந்நூற் காரணம் பொருள் நிச்சயமுற்று நிட்டைகூடல்.

நேரிசை ஆசிரியப்பா

**கண்ணகன் ஞாலத்துக் கதிரவன் தானென**
**வெண்ணெய்த் தோன்றிய மெய்கண்ட தேவ!**
**காரா கிருகக் கலியாழ் வேனைநின்**

பேரா இன்பத் திருத்திய பெரும !
5 வினவ லாறு துடையேன் எனதுளம்
நீங்கா நிலைமை ஊங்கும் உளையால்
அறிவின் மைமலம் பிறிவின் மையெனின்
ஓராலினை யுணர்த்தும் விராய்நின் றனையேல்
திப்பியம் அந்தோ ! பொய்ப்பகை யாகாய்
10 சுத்தன் அமலன் சோதி நாயகன்
முத்தன் பரம்பரன் எனும்பெயர் முடியா
வேறுநின் றுணர்த்தின் வியாபக மின்றாய்ப்
பேறும் இன்றாம் எமக்கெம் பெரும !
இருநிலம் தீநீர் இயமானன் காலெனும்
15 பெருநிலைத் தாண்டவம் பெருமாற் கிலாதலின்
வேறோ உடனோ விளம்பல் வேண்டும்
சீறி யருளல் சிறுமை யுடைத்தால்
அறியாது கூறினை அபக்குவ பக்குவக்
குறிபார்த் தருளினம் குருமுத லாயெனின்
20 அபக்குவ மருளினும் அறியேன் மிகத்தகும்
பக்குவம் வேண்டிற் பயனிலை நின்னால
பக்குவ மதனாற் பயன்நீ வரினே
நின்னைப் பருவம் நிகழ்த்தா தன்றே !
தன்னைப் பாரிலி யென்பதுந் தகுமே !
25 மும்மலஞ் சடமனு மூப்பிள மையின்நீ
நின்மலன் பருவம் நிகழ்த்திய தார்க்கோ ?
உணர்வெழு நீக்கத்தை ஓதிய தெனினே
இணையிலி யாயினை என்பதை அறியேன்
யானே நீக்கினுந் தானே நீங்கினும்
30 கோனே வேண்டா கூறல் வேண்டும்
காண்பார் யார்கொல் ? காட்டாக் காலெனும்
மாண்புரை உணர்ந்திலை மன்ற பாண்டியன்
கேட்பக் கிளக்குமெய்ஞ் ஞானத்தின்
ஆட்பா லவர்க்கருள் என்பதை யறியே. (2)

1. என்பது : *கண் அகல் ஞாலத்து கதிரவன் தான் என வெண்ணெய் தோன்றிய மெய்கண்டதேவ – இடமகன்ற பூமியி*

னிடத்து உண்டாகிய இருளைக் கடிவது பொருட்டாக ஆகாசமார்க் கத்திலே தோன்றப்பட்ட ஆதித்தனைப்போல ஆன்மாக்களுக்கு உண்டாகிய அஞ்ஞானமாகிய இருளைக் கடிவது பொருட்டாகத் திருவெண்ணெய் நல்லூராகிய திருப்பதைவீட்டிலே திருவவதாரம் செய்தருளின மெய்கண்ட நாதரே!,—காராகிருக கலி ஆழ்வேனை நின்பேரா இன்பத்து இருத்திய பெரும—அஞ்ஞானம் ஆகிய சிறைச் சாலைப்பட்டு விலங்காகிய தேகத்தில் கிடந்து அழுந்துகிற அடியேனை நின்னுடைய அசைவற்ற பேரின்பமான அநுபவத்திலே இருத்திய தம்பிரானே!,—வினவல் ஆனுது உடையேன்—அடியேனுக்கு ஒரு வினு தேவரீர் சந்நிதியிலே விண்ணப்பம் செய்யவேணுமென்று அநவரதமும் உண்டாயிருந்தது; அது எது? என்று கேட்டருளு மாகில்,—

எனது உளம் நீங்கா நிலைமை ஊங்கும் உளே ஆல்—அடியேன் உள்ளத்தைவிட்டு நீங்காமல் நிற்கிற முறைமை அநாதியே தொடங்கி மிகவும் உண்டாயிருக்குமிடத்தும்,—

அறிவு இன்மை-அடியேனுக்கு அறியாமைவருவானேன்? என்று கேட்கில்,—மலம் பிறிவு இன்மை எனில்—அஃது ஆன்மாவி ஞேடும் அநாதியே கூடி வரப்பட்ட ஆணவமலம் உன்னைவிட்டு நீங் காதபடியினலே காண் உனக்கு அறியாமை உண்டானது என்று தேவரீர் அருளிச்செய்யில்,—

ஓராவினை உணர்த்தும்—அடியேனைவிட்டுத் தேவரீர் நீக்கமாக ஒதுங்கி நின்றருளும் என்கிறதை உண்டாக்கும்,—

விராய் நின்றனையேல்—அப்படி நம்மை நீக்கமாகச் சொல்லாது நாமும் உன்னேடு கூடியே நிற்போம் என்று அருளிச் செய்யில்,—

திப்பியம் அந்தோ—அப்படித் தேவரீர் அருளிச்செய்தது தெய் வீகமானதோர் ஆச்சரியமாக இருந்தது: அது என்ன? என்று கேட்டருளுமாகில்,—

பொய் பகை ஆகாய்—அப்படி அஞ்ஞானத்தோடு கூடியிருக்கப்பட்ட அடியேனோடு தேவரீரும் கூடியிருக்குமாகில் பொய் என்கிற அஞ்ஞானத்தைச் சேதிக்கிறவன் என்று தேவரீரைச் சொல்லவேண்டுவது இல்லையாம்; அன்றியும்,—

சுத்தன் அமலன் சோதி நாயகன் முத்தன் பரம்பரன் எனும் பெயர் முடியா—அநாதி சுத்தனாய் இருக்கிறவன் என்றும், நின்மலன் என்றும், எல்லாவற்றிற்கும் மேலான ஆதியந்தம் இல்லாத பேரொளியாய் இருக்கப்பட்ட கர்த்தா என்றும், சர்வ உபாதி சூனியங்கள் எல்லாம் கழன்று அப்பாற்பட்டவன் என்றும், வஸ்து என்று சொல்லப்பட்டதற்கெல்லாம் அப்பாற்பட்ட வஸ்து என்றும் இங்ஙனம் சொல்லப்பட்ட திருநாமங்களும் தேவரீருக்கு உண்டாகா: அது எப்படி? எனில், மலரகிதன் மலசம்பந்தியாய் இருக்கிறவனோடுகூடி நில்லான் என்றும் சீடன் வினவ; அப்படியல்ல,—

வேறு நின்று உணர்த்தின்—நாம் உன்னோடுகூடி நிற்பதில்லை உன் அறிவுக்கு அறிவாக வேறே நின்றே உன்னை அறிவித்து நிற்போம் என்று தேவரீர் அருளிச்செய்யில்,—

வியாபகம் இன்றாய் பேறும் இன்றாம் எமக்கு எம்பெரும—என்னுடைய பெருமானே! அப்பொழுது தேவரீருக்குச் சர்வ வியாபி என்கிறதும் இல்லையாய் அடியேனுக்குச் சாயுச்சியம் என்கிற பேறும் இல்லையாம்: அன்றியும்,—

இருநிலம் தீ நீர் இயமானன் கால் எனும் பெருநிலைத் தாண்டவம் பெருமாற்கு இல் ஆதலின்— "இருநிலனாய்த் தீயாகி நீருமாகி இயமானனாய் எறியும் காற்றுமாகி—அருநிலைய திங்களாய் ஞாயிறாகி ஆகாயமாய் அட்டமூர்த்தியாகி" என்னும் திருத்தாண்டகத்தின் படி பூரணநிலையாகிய திருக்கூத்தும் தேவரீருக்கு இல்லையாக வேணும்: ஆகையால்,—

வேறா உடனா விளம்பல் வேண்டும்—தேவரீர் அடியேனை அறிவிக்குமிடத்து வேறாய் நின்று அறிவிக்குமோ கூடி ஒன்றாய்

நின்று அறிவிக்குமோ இவை இரண்டினுள் ஒன்று தீர அருளிச் செய்தருள வேண்டும்,—

சீறி அருளல்—அப்படி அடியேன் கேட்ட வினவுக்கு விடை அருளாமல் திருவுளக்கேடாக வேண்டுவதில்லை; அது என்னென்று கேட்டருளுகில்,—

சிறுமை உடைத்தால்—அடியேன் தற்போதன் ஆகையால் தோன்றினதை விசாரியாமல் விண்ணப்பம் செய்தேன் அதற்கு உத்தரம் அருளிச் செய்து தெளிவிக்கையே வேண்டுவது,—

அறியாது கூறினை—அப்படி நீ கேட்ட வினவுக்கு உத்தரம் சொல்லாமல் கோபித்துக் கொண்டோம் என்று நீ அறியாமற் சொன்னாய். அப்படியானால், தேவரீர் திருவுளக் கேடாவானேன்? என்று நீ கேட்கில்,—

அபக்குவ பக்குவக் குறி பார்த்துஅருளினம் குருமுதலாய் எனின்—நாம் ஆசாரியமூர்த்தம் ஆகையாலே அபக்குவனைக் கண்டால் கோபிக்கிறதும் பக்குவனைக் கண்டால் பிரியப்படுகிறதும் ஆசாரியனுக்கு முறைமையாம் தன்மைபோல நாம்சொன்ன அர்த்தங்களை நீ மாறுபாடாகக் கொள்ள நாம் கோபித்துக் கொண்டதாயிருக்கும் என்னில்; அப்படித் தேவரீர் சொன்ன அர்த்தங்களை அடியேன் அறியுமிடத்து,—

அபக்குவம் அருளினும் அறியேன்—அடியேன் அபக்குவன் ஆகையாலே தேவரீர் அருளிச்செய்கிற அர்த்தங்களை அறியப் போகிறதில்லை, அதுவன்றியும்,—

மிக தகும் பக்குவம் வேண்டில்—மிகுந்த சத்தி நிபாதத்துக்கு உரிய பக்குவனாயிருக்கவேணும் என்று அருளிச்செய்யில்,—

பயன் இலை நின்னால்-பக்குவனுக்கு ஒருவா சாதாரணமாக வந்து அறிவிக்கவேண்டாததுகொண்டே தேவரீரால் ஒரு பிரயோசனமும் இல்லையாம்; அல்லது,—

பக்குவம் அதனால் பயன் நீ வரினே—ஆன்மாக்கள் பக்குவத்துக்குத் தக்க பயனாகத் தேவரீர் எழுந்தருளுமாகில்,—

நின்னை பருவம் நிகழ்த்தாது—அந்தப் பக்குவம் என்று சொல்லப்பட்டது சடம் ஆனபடியினாலே அது தேவரீரை அடியேனுக்கு உண்டாக்கமாட்டாது,—

அன்றோ—அதல்ல! அந்தப்பக்குவமே உண்டாக்கும் என்கிலோ,—

தன் ஒப்பார் இலி என்பதும் தருமே—தேவரீரை ஒத்தாரும் மிக்காரும் இல்லாதவர் என்று சிவாகமங்கள் சொல்லுகிறதும் வழக்கல்லவாம்; அதன்றியும்,—

மும்மலம்சடம் அணு மூப்பு இளமையில் நீ நின்மலன் பருவம் நிகழ்த்தியது யார்க்கோ—ஆணவம் மாயை காமியம் என்னும் மூன்று மலங்களும் சடமாய் இருப்பது கொண்டு பக்குவம் வேண்டுவதில்லை, ஆன்மா அச்சுமாறி எடுத்த உடல்தோறும் அடுத்தநின் தன்மையாய் மூப்பு இளமை வருதலால் மூப்புஇளமை இல்லாதவனுக்குப் பக்குவம் கூடாது; தேவரீரோ என்றால், தேக சம்பந்தம் இல்லாமல் அமலனாய் இருக்கையினாலே அது சொல்ல ஒண்ணாது; ஆதலால், ஆர்க்கு ஆயது என்று வினாயவிடத்து,—

உணர்வு எழும் நீக்கத்தை ஓதியது எனின் ஏ—உனக்கு ஓர் அறிவு உண்டாமிடத்து அந்த மலங்கள் நீங்குகிற அவதாரத்தால் புண்ணிய பாவம் துலை ஒப்புண்டாய்ப் பாசம் நீங்கினது தானும் பக்குவம் என்றது என்று தேவரீர் அருளிச்செய்யில்,—

இணை இலி ஆயினை என்பதை அறியேன்—தேவரீரை ஒப்பாரும் மிக்காரும் இல்லாதவர் என்கிறதை அடியேன் இன்று விட்டேன் ; அது ஏன்? என்று கேட்டருளுகில்,—

யானே நீக்கினும் தானே நீங்கினும் கோனே வேண்டா—அந்த மலங்களை அடியேன்தானே நீக்கிக் கொள்ளினும் அவை தாமேநீங்கினும் கோனாகிய தேவரீர் வேண்டா; ஆகையால், தேவரீர் நீக்க விகாரியல்லீர் என்று வினாவிய இடத்து,—

கூறல் வேண்டும்—அடியேன் விண்ணப்பம் செய்யத்தக்கது ஒன்றுஉண்டு : அது எது? என்று கேட்டருளுகில்,—

காண்பார் யார்கொல் காட்டாக்கால் எனும் மாண்பு உரை உணர்ந்திலே—"காண்பாரார் கண்ணுதலாய் காட்டாக்கால்" என்னும் அழகிய திருத்தாண்டகத்தின் உரையைத் தேவரீர் இன்று இங்கு அருளிற்றில்லையாம்,—

மன்ற—அறுதிப்பட்டு நிச்சயமாக: அடியேனுக்கு முறைமை யாவது,—

பாண்டியன் கேட்ப கிளக்கும் மெய் ஞானத்தின் ஆட்பால வர்க்கருள் என்பதை அறியே—பாண்டியராசாவானவன் கேட்கத் தக்கதாகத் திருஞானசம்பந்த சுவாமிகள் அருளிச்செய்த " ஆட்பால வர்க்கருள் " என்னும் உண்மைஞான உபதேசத்திருப்பாட்டின் உரையாகிய சிவஞானத்தை அறிந்தேனில்லே; நிச்சயமாக அது வே அறிவென்று அடியாராய் உள்ளவர்களுக்குத் தேவரீர் நாயன் என்று கண்டிருக்கிறதொழிய வேறொன்று விகற்பித்துக் கேட்க வழக்கில்லை என்கிற முறைமையே அறிவாயுள்ளது என்று விளு வற்றேன் என்பதாம்.

(கருத்து) பதிஒன்று உண்டு; என்றும் அப்பதி தொழிற்படுத்தி ஞலன்றி யாவும் தொழிற்படாது என்பதாம்.

'மலம் பிறிவின்மை யெனின்' என்பதற்கு ஆன்மாவினேடும் அநாதியே கூடிவரப்பட்ட ஆணவமலம் உன்னைவிட்டு நீங்காதபடி யினுல் என்று பொருள் கூறியதற்குப் பிரமாணம் :—சித்தியார்: " அறிவிலன் அமூர்த்தன் நித்தன் " என்னும் செய்யுளில் 'பிறி விலன் மலத்தினேடும்' என்றது கண்டுகொள்க. 'விராய் நின்றனே யேல்' என்பதற்கு அப்படி நம்மை நீக்கமாகச்சொல்லாது நாமும் உன் ஞேடு கூடியே நிற்போம் என்று பொருள்கூறியதற்குப் பிரமாணம்:- சிவஞானபோதம்: "மெய்ஞ்ஞானம் தன்னில் விளையா தசத்தாதல்"

என்ற பாடத்தில் ' தண்கடனீர் உப்புப்போல் தானே யுளமுளவாத் தான்' என்றது கண்டுகொள்க. 'வேறு நின்று உணர்த்தின்' என்பதற்கு நாம் உன்னோடு கூடிநிற்பதில்லை உன் அறிவுக்கு அறிவாக நாம் வேறே நின்றே உன்னை அறிவித்து நிற்போம் என்று பொருள்கூறியதற்குப் பிரமாணம் :—சிவஞானபோதம் : "மன்னு சிவன் சந்நிதியில் மற்றுலகம் சேட்டித்த, தென்னும் மறையின் இயல்மறந்தாய்—சொன்னசிவன், கண்ணாறு வுளம்வினையால் கண்டறிந்து நிற்கும்காண், எண்ணான் சிவனசத்தை இன்று" என்றது கண்டுகொள்க. 'சிறுமையுடைத்தால்' என்பதற்கு ஆசாரியன் மேல் வைத்து ஆன்மா அவனுக்குச் சிறுமையாம் என்று பொருள் உரைப்பாரும் உளர். அது குருசிஷக்கிரமத்திற்குப் போதாது; ஆகையால், பொருளாகாது என அறிக. 'பக்குவம் அதனால் பயன் நீ வரினே' என்பதற்கு ஆன்மாக்கள் பக்குவத்துக்குத்தக்க பயனாகத் தேவரீர் எழுந்தருளுமாகில் என்று பொருள் கூறியதற்குப் பிரமாணம் :—சிவப்பிரகாசம்: "நாடியசத் திநிபாதம் நாலுபாதம் நண்ணும்வகை எண்ணரிய ஞான பாதம், கூடுமவர் தமக்குணர்வாய் நின்ற ஞானக் கூத்தன் ஒரு மூர்த்திகொடு குறுகி மோகம், நீடியகே வலசகலம் நிகழா வாறு நிறுத்திமலம் அறுக்கும் இது நிலையார் சுத்தம், கேடில்புகழ் தரும்சரியை கிரியாயோகக் கேண்மையரேல்இவை உணர்த்தக் கிளக்கும் நூலே." என்றது கண்டுகொள்க. 'உணர்வெழு நீக்கதனை ஓதியது' என்பதற்கு உனக்கு ஓர் அறிவுண்டாமிடத்து அந்தமலங்கள் நீங்குகிற அவதாரத்தால் புண்ணியபாவம் துலையொப்புவந்து உண்டாய்ப் பாசம் நீங்கினதுதானும் பக்குவம் என்றதற்குப் பிரமாணம் :—சிவப்பிரகாசம்: "எண்ணரிதாய்" என்ற விருத்தத்தில் 'மலபாகம் பொருந்தியக்கால் அருளால் உண்ணிலவும் ஒளியதனால் இருளகற்றிப் பாத முற்றிடும்' என்பது கண்டுகொள்க. 'பாண்டியன் கேட்பக் கிளக்கும் மெய்ஞ்ஞானத்தின் ஆட்பாலவர்க்கருள் என்பதை அறியே' என்பதற்குப் பாண்டியராசா வானவன் கேட்கத்தக்கதாகத் திருஞானசம்பந்தசுவாமிகள் அருளிச் செய்த ஆட்பாலவர்க்கருள் என்னும் உண்மைஞான உபதேசப் பாட்டின் உரையாகிய சிவஞானத்தை அறிந்தேனில்லை நிச்சயமாக

*அதுவே அறிவென்று அடியார்களாய் உள்ளவர்களுக்குத் தேவரீர் நாயன் என்று கண்டிருக்கிறதொழிய வேறொன்று விகற்பித்துக் கேட்க வழக்கில்லை என்கிற முறைமையே அறிவாயுள்ளது என்று விறைவற்றேன் என்றதற்குப் பிரமாணம்:— திருக்கடைக்காப்பு: "ஆட்பாலவர்க்கருளும் வண்ணமும் ஆதிமாண்பும், கேட்பான்புகில் அளவில்லை கிளக்க வேண்டா" என்றது கண்டுகொள்க.*

இங்ஙனம் பதி இலக்கணம் கேட்ட மாணவகன் பசு இலக்கணம் கேட்கும் வினா மேல் அருளிச்செய்கின்றது.

நேரிசை வெண்பா

அறிவறி யாமை யிரண்டும் அடியேன்
செறிதலான் மெய்கண்ட தேவே!—அறிவோ?
அறியேனோ? யாதென்று கூறுகேன் ஆய்ந்து
குறிமாறு கொள்ளாமற் கூறு. (3)

என்பது:—*அறிவு அறியாமை இரண்டும் அடியேன் செறிதலால்—ஓர் அவதாரத்திலே அறிந்தும் ஓர் அவதாரத்திலே அறியாமலு மாக இந்த இரண்டு பகுதியும் அடியேன் கூடிவருகையினால்,—*

*மெய்கண்டதேவ—மெய்கண்டதேவனே,—*

*அறிவோ அறியேனோ யாது என்று கூறுகேன்—அடியேனை அறிவு என்று சொல்லப்பட்டிருக்குமோ? அறியாதவன் என்று சொல்லப்பட்டிருக்குமோ? இவை இரண்டினுள் யாதென்று விண்ணப்பம் செய்வேன்?,— ஆய்ந்து—இவ்விரண்டு பகுதியும் திருவுள்ளத்திலே ஆராய்ந்துபார்த்தருளி,— குறி மாறுகொள்ளாமல் கூறு—தேவரீர் அருளிச் செய்கிற அர்த்தத்தின் குறிப்புக்கு அடியேன் மறுத்து விண்ணப்பம் செய்யாமல் அருளிச்செய்தருளும் என்பதாம்.*

(கருத்து) *ஆன்மா சத்துமல்ல அசத்துமல்ல கூடினது தானும் தன்மையால் சதசத்து என்னும் சிறப்பினை உடைத்தாம்: அதாவது*

அறிவித்தால் அறிகிறவன் என்றவாறு. இதற்கு உதாரணம்:— சித்தியார்: "அறிவிக்கப்படும் சித்தும் இவன்" எனவும், சிவஞான போதம்: "அறிவிக்க அன்றி அறியா உளங்கள்" எனவும், திருவாசகம்; 'அறிவிலாமை அன்றேகண்ட தாண்டநாள்" எனவும் வருவது கண்டுகொள்க.

பசுஇலக்கணம் கேட்ட மாணவகன் மேல் பாசஇலக்கணம் கேட்கும் வினா அருளிச்செய்கின்றது.

நேரிசை ஆசிரியப்பா

கூறிய மூன்று மலத்தின் குணக்குறி
வேறு கிளக்கின் விகற்பம் கற்பம்
குரோதம் மோகம் கொலையஞர் மதநகை
விராயெண் குணனுமா ணவமென விளம்பினை
5 அஞ்ஞா னம்பொய் அயர்வே மோகம்
பைசா சூனியம் மாற்சரி யம்பயம்
ஆயவேழ் குணனும் மாயைக் கருளினை
இருத்தலும் கிடத்தலும் இருவினை யியற்றலும்
விடுத்தலும் பரநிந்தை மேவலென் றெடுத்த
10 அறுவகைக் குணனும் கருமத் தருளினை
ஆங்கவை தானும் நீங்காது நின்று
தன்வழிச் செலுத்தித் தானே தானாய்
என்வழி யென்பதொன் றின்று மன்ன
ஊரும் பேரும் உருவும் கொண்டென
15 ஊரும் பேரும் உருவும் கெடுத்த
பெண்ணை சூழ்ந்த வெண்ணெயம் பதியிற்
சைவ சிகாமணி! மெய்யர் மெய்ய!
மும்மலஞ் சடமென மொழிந்தனை அம்ம !
மாறுகோள் கூறல் போலும் தேறும்
20 சடஞ்செய லதனைச் சார்ந்திடு மெனினே
கடம்பட மதனுட் கண்டிலம் விடம்படும்
ஊன்திரள் போன்ற தாயில் தோன்றி
அணைந்தாங் ககறல் வேண்டும் குணங்களும்

பன்மையின் ருகும் எம்மைவந் தணைதரத்
25 தாளே மட்டா தியாளே செய்கிலன்
நீயோ செய்யாய் நின்மல னுயிட்டு
இயல்பெனிற் போகா தென்றும் மயல்கெடப்
பந்தம் வந்த வாறிங்
கந்த மாதி யில்லாய் ! அருளே. (4)

என்பது:—*கூறிய மூன்று மலத்தின் குணம் குறி வேறு ளக்கின்—அடியேனுக்கு முன்னே உபதேசக்கிரமமாகப் பதி பசு பாசம் ஆகிய திரிபதார்த்தங்களையும் தேவரீர் அருளிச் செய்கிற அவதாரத்து ஆணவம் மாயை காமியம் என்னப்பட்ட மூன்று மலங்களினுடைய குணங்களையும் குறிகளையும் வெவ்வேருகச் சொல்லுமிடத்து,—*

*விகற்பம் கற்பம் குரோதம் மோகம் கொலை அஞர் மதம் நகை விராய் எண்குணனும் ஆணவம் என விளம்பினை—ஆன்மபோதமானது யாதாமொன்றுக்குத் தன்னை விகற்பித்துத் தன்னை யொழிய மற்ருெருவரும் ஒவ்வாதவர் என்று நிற்கிறதும், யாதொன்றினைச் சங்கற்பித்துக்கொண்டு நிற்கிறதும், யாதொன்றுக்குக் கோபம் பண்ணிக்கொண்டு நிற்கிறதும், விரோதம் நினைக்கிறதும், யாதொன்றுக்கு ஆசைப்படுகிறதும், யாதோர் உயிர்களைக் கொல்லுதலும், யாதொருதுன்பங்கள் தன்னிடத்தில் வந்துற்ருல் அதற்கு விதனப்படுகிறதும், யாதொன்று சொல்லுமிடத்தும் செய்யுமிடத்தும் அகங்காரமாய் நிற்கிறதும் யாதொன்றுக்கும் சிரித்துக்கொண்டு திரிகிறதுமாக இங்ஙனம் கூறப்பட்ட குணங்கள் எட்டும் ஆணவமலத்தினுடையது என்று அருளிச்செய்தீர்: அன்றியும்,—*

*அஞ்ஞானம் பொய் அயர்வே மோகம் பைசாசுந்நியம் மாற்சரியம் பயம் ஆய ஏழ் குணனும் மாயைக்கு அருளினை—பொய்யை மெய்யென்று கொள்ளுதலோடு பொல்லாங்கு செய்தலும் பொய் சொல்லுதலும்; கண்டதை மறந்து மயங்கி வருந்துகிறதும், காம ஆசையால் மூர்ச்சிக்கையும், ஆசைஉண்டாய் அதனை இல்லையாக ஒளித்தலும், ஆன்மாக்களைக் கொல்ல அடிக்க எழும் நினைவும், பிறர்க்கு*

அழுக்காறு செய்து கேடு நினைக்கிறதும், பிறரோடு வயிராக்கியம் பாராட்டுகிறதும், உயிருக்கு இறுதிவரும் என்று அச்சப்பட்டுத் திரி கையுமாக இங்ஙனம் சொல்லப்பட்ட குணங்கள் எழும் மாயாமலத்தி னுடையன என்று அருளிச்செய்தீர்,—

இருத்தலும் கிடத்தலும் இருவினை இயற்றலும் விடுத்தலும் பரகிந்தை மேவல் என்று எடுத்த அறுவகை குணனும் கருமத்து அருளினை—ஒவ்வொரு தலங்களைப்பற்றி இருத்தலும், நோயாய்க் கிடத்தலும், புண்ணியபாவங்களைச் செய்தலும், ஒவ்வொரு பற்றுக் களாய் நின்ற தொந்தனைகளைவிடுதலும், சர்வரையும் நிந்தித்து நடக்கிறதே தொழிலாகப் பொருந்தியிருக்கிறதும், உடல்மாறிப் பிறத்தலும், இகழ்ந்தாருடன் பொருந்தலுமாக இங்ஙனம் சேர்ந்திருக் கும் அறுவகைக் குணங்களையும் கன்ம மலத்தினுடையன என்று அருளிச்செய்தீர்,—

ஆங்கு அவை தானும் நீங்காது நின்று—முன் சொல்லப்பட்ட காரணமலங்களினின்றும் விரியப்பட்ட காரியமாகிய இருபத்தொரு வகையும் அடியேனை விட்டு நீங்காமல் அனவரதமும் நின்று,—

தன் வழிச் செலுத்தி—தனக்கு உண்டாகிய தொழில்களின் முறைமையிலே அடியேனையும் காரியப்படுத்தி.—

தானே தான் ஆய்—அடியேன் என்று ஒரு முதல் இல்லை எனும்படி மேலிட்டு நின்றுகொண்டு,—

என்வழி என்பது ஒன்று இன்றும் மன்ன—தம்பிரானே! அடி யேன் இச்சைவழி என்கிறது சற்றும் வருகிறதில்லையாம்,—

ஊரும் பேரும் உருவும் கொண்டு என் ஊரும் பேரும் உருவும் கெடுத்த – அடியேனுக்கு உண்டாயிருக்கப்பட்ட மலங்களை நீக்கு கைப் பொருட்டாக ஊரும் பேரும் உருவும் இல்லாத தேவரீர் ஊரும் பேரும் உருவும் கொண்டு அடியேனுக்கு உண்டாயிருக்கப் பட்ட ஊரினையும் பேரினையும் உருவத்தினையும் கெடுத்தீர்; என்னவே, மேல் ஒரு சனனம் எடாத வண்ணம் கெடுத்துப்போட் டவர் என்பது கருத்து,—

பெண்ணை சூழ்ந்த வெண்ணெய் அம் பதியில் சைவ சிகாமணி —பெண்ணையாற்று நீர் சூழப்பட்ட திருவெண்ணெய் நல்லூரிலே எழுந்தருளியிருப்பதாய சைவசமயத்துக்கு ஓர் அபிஷேக ரத்தின மாய் உள்ளவரே,—

மெய்யர் மெய்ய – பிரபஞ்சமாகிய பொய்யைக் கடியப்பட்ட சத்தியவான்களுக்கு உண்மையாய் உள்ளவரே,—

மும்மலம் சடம் என மொழிந்தனை—அடியேனுக்கு முன்னே உபதேசக்கிரமமாக அருளிச் செய்கிற அவதாரத்தில் ஆணவம் மாயை கன்மம் என்னப்பட்ட மூன்று மலங்களையும் சடமாகிய அசேதனம் என்று அருளிச்செய்தீர்,—

அம்ம—அடியேன் விண்ணப்பம் செய்கிறதை அழகிய தாகக் கேட்பீராக,—

மாறு கோள் கூறல் போலும்—முன்னே அடியேனுக்கு அரு ளிச்செய்கிற அவதாரத்திலே அசித்தாகிய மலங்களைச் சடம் என்று மாறுபாடாக அருளிச் செய்ததாயிருக்கும்; அப்படி அல்லகாண்,—

தேறும் சடம்—அறுதியாக வந்த மலங்கள் சடமே தப்பாது என்று தேவரீர் அருளிச்செய்யில், அவை சேட்டைப் படுவானேன்,—

செயலதனைச் சார்ந்திடும் எனினே—நீ அறிவுள்ளவன் ஆகை யால், உன்னோடு கூடுகையில் அந்த மலங்களும் சேட்டைப் பட்ட தாய் இருக்கும் என்று தேவரீர் அருளிச் செய்யுமாகில்,—

கடம் படம அதனுள கண்டிலம்— கடபடாதிகளாய் உள்ள சால் குடம் புடவை சீலை முதலாயுள்ளவை அடியேனோடு கூடின அவதாரத்து அப்படிச் சேட்டைப்படக் கண்டோமில்லை,—

விடம் படும் ஊன் திரள் போன்றது ஆயின்—அந்த மலங்கள் கடபடாதிகள் போலல்ல, விடத்தையுடைய வசநாவி முதலாயுள்ள

நஞ்சுகள் சடமாய் இருந்தாலும் அறிவாய் இருந்த ஆன்மாக்கள் புசித்த அவதாரத்து அந்த அறிவை அழித்துத் தன்குணம் மேலிட்டு மயக்கினாற்போல, அந்த மலங்களும் சடமாய் இருந்தாலும் அறிவாய் உள்ள உன்னோடு சம்பந்தமான அவதாரத்து அவையும் அப்படி மேலிட்டு மயக்கும்; அப்படியானால்,—

தோன்றி அணைந்த ஆங்கு அகறல் வேண்டும்—அந்த நஞ்சானது புசித்தவர்களை மறைத்து மேலிட்டு நின்று மீளவும் விட்டுப் போனாற் போல, இந்த மலங்களும் அப்படிச் செய்யவேணும்; அப்படிக் கண்டோமில்லையே; அன்றியும்,—

குணங்களும் பன்மை இன்றாகும்—இந்த மலங்களுக்கு உவமை யாகச் சொல்லப்பட்ட நஞ்சுகளுக்கு இந்த மலங்களைப் போலப் பல குணங்கள் செய்யக் கண்டதில்லை; ஆகையால், அது திருட் டாந்த விரோதம் என்று கண்டு கொள்க; அன்றியும் அந்த மலங்கள் தான்,—

எம்மை வந்து அணைதர தானோ மாட்டாது—சடமே யானால் அடியேனை வந்து பொருந்துகைக்குத் தானாகமாட்டாது,—

யானோ செய்கிலன்—அடியேனுக்குக் குற்றமாயுள்ளது வேணு மென்று அடியேன்தானே உண்டாக்கிக் கொள்வது மில்லை,—

நீயோ செய்யாய் நின்மலன் ஆயிட்டு—தேவரீர் மலரகிதராய் இருக்கையால் அஞ்ஞானம் ஆகிய மலங்களை அடியேனுக்கு உண் டாக்கப் போகிறதில்லை; இந்த மூன்றுவகையும் அன்றி,—

இயல்பு எனில்—அந்தமலங்கள் ஆன்மா உள்ள அன்றே சுபாவ மாக உள்ளது என்று அருளிச்செய்யில்,—

போகாது என்றும்—பாலில் வெளுப்பும் கரியில் கறுப்பும் போல இயல்பாய் உள்ள சுபாவத்துக்கு ஒருகாலத்திலும் அழிவு இல்லையாம்,—

மயல் கெட—அடியேனுக்கு இந்தச் சந்தேகம் தீரத்தக்கதாக,—

பந்தம் வந்தவாறு இங்கு அந்தம் ஆதி இல்லாய் அருளே—முடிவும் முதலும் இல்லாத தம்பிரானே! மயக்கம் தீர இந்தப் பாசபந்தங்கள் அடியேனோடு வந்து பொருந்தினமுறை எப்படி? என்று அருளிச் செய்யவேணும் என்பதாம்.

(கருத்து) பாசம் நெல்லுக்கு உமி போலவும், செம்பிற் களிதம் போலவும் நின்ற நிலைமை கண்டதல்ல நீக்கம் கூட்டமில்லை என்பதாம்.

இதற்கு உதாரணம் :—சிவஞானபோதம்; "நெல்லிற் குமியும் நிகழ்செம்பி னிற்களிம்பும், சொல்லில் புதிதன்று தொன்மையே" எனவும், சித்தியார் : 'மும்மல நெல்லி னுக்கு முளையொடு தவிடுமிப்போல்" எனவும், சிவப்பிரகாசம்: "நெல் லுமுளை தவிடுமி போல் அநாதியாக நிறுத்திடுவர்" எனவும் சொன்ன முறைமை கண்டுகொள்க.

'தேறும் சடம்' என்பதற்கு அறுதியாகவந்த மலங்கள் சடமே தப்பாது என்று பொருள் கூறியதற்குப் பிரமாணம் :— உண்மை நெறி விளக்கம்; "மலஞ்சடமென்றல் காட்சி" எனவும், சிவப்பிரகாசம்; "மாயைதான் அசித்துருவாய் மருவமாட்டாது" எனவும் சித்தியார்; 'உலகத்துக் கோர் வித்துமாய் அசித்தாய்" எனவும், வருவது கண்டுகொள்க, 'செயலதனைச் சார்ந்திடும்' என்பதற்கு நீ அறிவுள்ளவன் ஆகையால் உன்னோடு கூடுகையில் அந்தமலங்களும் சேட்டைப்பட்டதாய் இருக்கும் என்று பொருள்கூறியதற்குப் பிரமாணம் :— சிவப்பிரகாசம்: "அன்னியமா னவையுணர்த்தி அநந்நியமாய் நிறைந்த அறிவறியா மையினனும் அருள்நிலவும் காலம், தன்னிலவ னேயாவு மாய்நின்ற தொன்மை தாமுணர்த லானுமுயிர் தானென வொன்றிலதாய், மன்னியிடும் மலம்" என்றது கண்டுகொள்க.

*இவை மூன்று செய்யுளானும் கர்த்தா அறிவிப்போன் என்றும், ஆன்மா அறிவித்தால் அறிகிறவன் என்றும், பாசம் அறிவித்தாலும் அறியாது என்றும் கூறியவாறு காண்க.*

இங்ஙனம் பதியிலக்கணம், பசுவிலக்கணம், பாசவிலக்கணம் சொல்லிப் பாசதரிசனம் சொன்னபின் ஆன்மதரிசனம் சொல்ல வேண்டுகையாலும், மலதரிசனம் வேறே சொல்லாதபடியினாலும் தேவரீர் அருள் முன்னே பாசம்நில்லாது அடியேனுக்குச் சுதந்திரமாய்க்காண அறிவும் இல்லை இந்தமலத்தைக் கண்ட முறைமை எப்படி? என்னும் வினா மேல் அருளிச்செய்கின்றது.

நேரிசை வெண்பா

அருள்முன்பு நில்லா தடியேற்குக் கண்ணின்
றிருள்கண்ட வாறென்கொல்? எந்தாய்! – மருள்கொண்ட
மாலையா! வெண்ணெய்வாழ் மன்னவா! என்னுடைய
மாலையா! மாற்று மதி. (5)

என்பது:—*அருள் முன்பு நில்லாது–அந்த மலங்கள் அஞ்ஞான மாகையாலே தேவரீர் சந்நிதியிலே நில்லாது,—*

*அடியேற்கு கண் இன்று—அடியேனுக்குச் சுதந்திரமாகக் காணும் அறிவும் இல்லையாம்; அப்படியிருக்க,—*

*இருள் கண்டவாறு என் கொல்? எந்தாய்— தம்பிரானே! அடியேன் அந்த இருள்மலம் ஆகிய அஞ்ஞானத்தை அறிந்தபடி எப்படி ? ,—*

*மருள்கொண்ட மாலையா—மருளாகிய பண்ணை வண்டுகள் இருந்து பாடப்பட்ட மாலையினையுடையானே ! ,—*

*மருள்—குறிஞ்சி யாழ்த்திறம் என்பர்.*

*வெண்ணெய் வாழ் மன்னவா—வெண்ணெய் நல்லூரிலே எழுந்தருளியிருக்கப்பட்ட தம்பிரானே ! ,—*

*என்னுடைய மால்—அடியேனுக்கு உண்டாயிருக்கப்பட்ட இந்த மயக்கத்தை,—*

*ஐயா—அடியேனுக்குச் சுவாமியாய் உள்ளவரே!*

*மாற்ற மதி-போக்கத்தக்கதாகத் திருவுள்ளத்திலே அடைத் தருளுவீராக என்றவாறு.*

*(கருத்து) மலதரிசனத்தைப் பரமசுகத்திலே அழுந்து மிடத்து இதுவரையும் மலசம்பந்தத்தினுலே அல்லவோ சுகத்தைப் பெறு திருந்தோம் என்னும் அநுமானத்தினுலே அறிக என்பதாம்.*

*இதற்கு உதாரணம்:—சிவப்பிரகாசம்; "அன்னிய மானவை யுணர்த்தி ... ... ..." என்பது கண்டு கொள்க.*

இங்ஙனம் பாசதரிசனம் சொல்லிப் பசுதரிசனம் எப்படி? என்னும் வினு மேல் அருளிச் செய்கின்றது.

நேரிசையாசிரியப்பா

மதிநுதல் பாக ளுகிக் கதிதர
வெண்ணெய்த் தோன்றி நண்ணியுள் புகுந்தென்
உளம்வெளி செய்துன் அளவில் காட்சி
காட்டிஎற் காட்டினை எனினே நாட்டிஎன்
5 நுண்மையும் பெருமையும் நுவலின் அண்ணல்
பாதாள சத்தி பரியந்த மாக
ஓதி யுணர்ந்த யானே ஏக
முழுதும்நின் றனனே முதல்வ முழுதும்
புலன்கடைப் பூழை நுழைந்தனன் கலங்கி
10 ஆங்கைந் தவத்தையும் அடைந்தனன் நீங்கிப்
போக்கு வரவு புரிந்தனன் தூக்கி
எவ்விடத் துண்மையும் இவ்விடத் தார்தலும்
செல்லிடத் தெய்தலும் தெரித்த மூன்றினுள்
ஒன்றெனக் கருளல் வேண்டும் என்றும்
15 இல்ல திலதாய் உள்ள துளதெனும்
சொல்லே சொல்லாய்ச் சொல்லுங் காலைச்
சிறுத்தலும் பெருத்தலும் இலவே நிறுத்தி
யானை எறும்பி னுனது போலெனின்

ஞான மன்றவை காய வாழ்க்கை
20 மற்றவை அடைந்தன வுளவெனின் அற்றன்று
விட்ட குறையின் அறிந்து தொன்று
தொட்டுவந் தனவென வேண்டும் நட்ட
பெரியதிற் பெருமையும் சிறியதிற் சிறுமையும்
உரியது நினக்கே உண்மை பெரியோய்!
25 எனக்கின் றுகும் என்றும்
மனக்கினி யா! யினி மற்றது மொழியே. (6)

*என்பது:—மதிநுதல் பாகன் ஆகி — சந்திரனைப்போலத் திரு நெற்றியினையுடைய பரமேசுவரியை ஒருபாகத்திலே வைத்திருக்கப் பட்ட தேவரீர்,—*

*கதி தர வெண்ணெய் தோன்றி—அடியேனுக்கு மோட்சத்தைத் தருவது பொருட்டாகத் திருவெண்ணெய் நல்லூரிலே திருவவதாரம் செய்தருளி,—*

*நண்ணி உள் புகுந்து—அடியேனிடத்திலே வந்து பொருந்தி,—*

*என் உளம் வெளிசெய்து—அடியேனிடத்து உண்டாகிய அஞ்ஞானத்தை நீக்கிச் சிவஞானத்தைப் பிரகாசிப்பித்து,—*

*உன் அளவு இல் காட்சி காட்டி—ஆன்மபோதத்தால் அளவு படுத்த ஒண்ணாத தேவரீருடைய இயல்பினையும் அடியேனுக்குத் தரிசனப்படுத்தி,—*

*என் காட்டினை—அடியேனுடைய இயல்பினையும் தரிசனப் படுத்தினீர்,—*

*எனினே—அப்படித் தரிசனப்படுத்தினீர் ஆனாலும்,—*

*காட்டி என் உண்மையும் பெருமையும் நுவலில்—தேவரீர் அறுதிப்படுத்தி அருளிச்செய்யப்பட்ட அடியேனுடைய நேர்மையை யும் பெருத்த வியாத்தத்தையும் விண்ணப்பம் செய்யுமிடத்து,—*

*அண்ணல்—தம்பிரானே!*

*பாதாள சத்தி பரியந்தம் ஆக—பாதாளசத்தி முடிவாக,—*

ஓதி உணர்ந்த யானே எக முழுதும் நின்றனனே—நூல்களைக் கற்றறிந்த அடியேன் அறிவு சென்று அறியப்பட்ட இடம் எல்லாம் அடியேன்தானே முழுவதும் வியாத்தமாய் நின்றதுண்டே,—

முதல்வ—சர்வ ஆன்மாக்களுக்கும் ஒரு முதலாக நின்று உணர்த்துகிற கர்த்தாவே!

முழுதும்—அப்படி ஓதியுணர்ந்த இடமெங்கும் அடியேன் வியாத்தமாயிருக்கச் செய்தேயும்,—

புலன் கடை புழை நுழைந்தனன்—ஒன்றை அறியுமிடத்துச் சோத்திராதிகளாயுள்ள அற்பத்துவாரங்களாகிய புலன்களோடும் கூடி அறிந்தேன்; அன்றியும்,—

கலங்கி ஆங்கு ஐந்தவத்தையும் அடைந்தனன்—அடியேன் அறிகிற அறிவையும்விட்டு நீங்கி மயங்கிய இடத்திலே சாக்கிரம் சொப்பனம சுழுத்தி துரியம் துரியாதீதம் என்னப்பட்ட ஐந்தவத்தையும்பட்டு நின்றேன்; அன்றியும்.—

நீங்கி போக்கு வரவு புரிந்தனன்—அப்படிக்கூடி வாதனை செய்து நிற்கிற சரீரத்தையும் விட்டு நீங்கி மீளவும் ஒவ்வொரு சரீரத்தையும் வந்து எடுப்பதும் செய்தேன்,—

தூக்கி—இவையிற்றைத் திருவுள்ளத்திலே ஆராய்ந்து பார்த்தருளி,—

எவ்விடத்து உண்மையும்—அடியேன் ஓதியுணர்ந்த இடமெங்கும் அடியேன் வியாத்தமாய் இருக்கிறதும்,—

இவ்விடத்து ஆர்தலும்—இப்பொழுது இந்தச் சரீரத்தோடும் கூடிநின்று சீவிக்கிறதும் அவத்தைப்படுகிறதும்,—

செல் இடத்து எய்தலும்—இந்தச்சரீர தொந்தனை விட்டுப் புண்ணிய பாவங்களுக்கு ஈடான சுவர்க்க நரகங்களிலே சென்று அநுபவிக்கிறதும்,—

தெரித்த மூன்றினுள் ஒன்று எனக்கு அருளல் வேண்டும்—தேவரீர் இவை மூன்று பகுதியினும் இதுவாயிருக்கும் ஆன்மாவின்

உண்மை என்று ஒன்றை அடியேனுக்குத் தெரிய அருளிச்செய்ய வேணும்: அப்படி ஒன்றைச் சொல்லுகிறதென்ன? அவை மூன்று பகுதியும் ஆன்மாவுக்கு உடையதல்லவோ என்று திருவுளம் செய் தருளுமாளுல்,—

என்றும் இல்லது இலதாய் உள்ளது உளது என்னும் சொல்லே சொல்லாய் சொல்லும் காலே—எக்காலத்தும் ஒவ்வொன்றின் இயல்பு களைச் சொல்லுமிடத்து இல்லது இல்லாததே உள்ளது உளதே என்று சொல்லுகிற சொல்லே அறுதிப்பட்ட சொல்லாகச் சொல்லு மிடத்து,—

சிறுத்தலும் பெருத்தலும் இலவே—ஒருமுதலாய் இருக்கப் பட்ட ஆன்மா ஓர் அவதாரத்தில் அணுவாகச் சிறுததும் ஓர் அவத ரத்திலே மகத்தாகப் பெருத்தும் வர வழக்கில்லையே; அது நிற்க,—

நிறுத்தி யானை எறும்பின் ஆனது போல்—அப்படிச் சிறுத்தும் பெருத்தும் வாராது எப்பொழுதும் ஒருதன்மையாகிய வியாத்த மாய் நிற்கச் செய்தேயும் யோனி சம்பந்தம் செய்து அதுவதுவாய் இருக்கிறது யானையாய்நின்ற ஆன்மா எறும்பானுற்போலிருக்கும்,—

எனில்—என்று தேவரீர் அருளிச் செய்யில்,—

ஞானம் இன்று அவை காயவாழ்க்கை—தேவரீர் அருளிச் செய்தது அடியேன் கேட்ட அறிவல்ல, சரீரத்தின் வழக்கைச் சொல்லலாம்,—

மற்று அவை அடைந்தன உள—அதனைநாம் அப்படிச்சொன்ன தும் அறிவாயுள்ள ஆன்மாக்கள் கன்மத்துக்கு ஏற்ற ஒவ்வொரு சரீரங்களோடும் கூடினுல் அதற்கு அதற்குத்தக்கதாக அறிவு சீவித்து நிற்கும் என்றே சொன்னேம்,—

எனில்—என்று அருளிச்செய்யில்,—

அற்றன்று—அஃது அப்படி யன்று; அது என்னென்று கேட் டருளுமாகில்,—

விட்ட குறையின் அறிந்து தொன்று தொட்டு வந்தன வேண்டும்–அப்படிக் கூடின யோனிக்குத்தக்க அறிவாய் இருக்குமேயானல் முன்னே எடுத்து விட்டு வந்த யோனிகளை இன்னது இன்னது அல்லவோ என்று அடியேன் அறிய வேணும்; அப்படியல்ல, கூடின யோனிக்குத் தக்கதாக ஆன்மா அறிந்து சேவிக்கும் என்று நான் சொன்னது அந்தந்த அவதாரந்தோறும் எடுக்கப்பட்ட சிறிய யோனிக்கும் பெரியயோனிக்கும் தக்க அறிவாக அறிந்து சேவிக்கிறதாய் இருக்கும் என்று தேவரீர் அருளிச்செய்யில்,—

நட்ட பெரியதில் பெருமையும் சிறியதில் சிறுமையும் உரியது நினக்கே உண்மை—தேவரீர கூடினதின் தன்மை என்று நாட்டப்பட்ட பெரிய யோனிக்குத்தக்கதாகப் பெருத்த அறிவும் சிறிய யோனிக்குத் தக்கதாகச் சிறுத்த அறிவும் அப்படி வருகிற சுதந்திரம் அணுவுக்கு அணுவும் மகத்துக்கு மகத்துமாயிருக்கிற தேவரீருக்கே உள்ளது,—

பெரியோய்–மகத்தாயிருக்கப்பட்ட தம்பிரானே !

எனக்கு இன்றாகும்—அந்த வழக்கு அடியேனுக்கு இல்லையாம்,—

என்றும் மனக்கு இனியாய்—எக்காலத்தும் எம்மனத்துக்கு இனியையாக இருக்கப்பட்ட தம்பிரானே! ,—

இனி மற்று அது மொழியே-இனியாகிலும் அடியேன் முன்னே கேட்ட வினவுக்கு விடை அருளிச்செய்யவேண்டும் என்பதாம்.

(௧௫௩) ஆன்மாவின் இயல்பு எப்படி? என்னில், படிகம் போல அடுத்ததின் தன்மையாக இருக்கும் என்றும், வசிப்பைப்பற்றின வியாபகம் என்றும், அதுவதுவாய் நிற்பது என்றும் சொல்லப்படும்.

இதற்கு உதாரணம் :— சிவப்பிரகாசம் : ஓரிடத் துணருமுண்மை ஒளிதரு முபலம் போலும் "எனவும்; சித்தியார்:" வசிதமிட வரும்வியாபி எனும்வழக் குடைய ஞகி" எனவும் வருவது கண்டுகொள்க. அவை மூன்று பகுதியும் ஆன்மாவுக்கு உடைய

*தல்லவோ என்று திருவுளம் பற்றினதற்குப் பிரமாணம்:-சித்தியார்: "சூக்கும தேகி யாகித் தூலரூ பத்தின் மன்னிச், சாக்கிர முதலா யுள்ள அவத்தையுட் டங்கி எங்கும், போக்கொடு வரவும் எல்லாம் புரிந்துபுண் ணியங்கள் பாவம், ஆக்கியும் பலன்கள் எல்லாம் அருந் தியும்நிற்கும் ஆன்மா." என்பது கண்டுகொள்க. சிறுத்தலும் பெருத் தலும் இலவே என்பதற்கு ஒரு முதலாயிருக்கப்பட்ட ஆன்மா ஓர் அவதாரத்தில் அணுவாகச் சிறுத்தும் ஓர் அவதாரத்திலே மகத்தாகப் பெருத்தும் வர வழக்கில்லை என்று பொருள் கூறிய தற்குப் பிரமாணம் :— சிவஞானபோதம்: "மாயா தனுவிளக்காய் மற்றுள்ளம் காணுதேல், ஆயாதாம் ஒன்றை அதுவதுவாய்" என் பது கண்டு கொள்க. மற்றவை அடைந்தன உள என்பதற்கு நாம் அப்படிச் சொன்னதும், அறிவாய் உள்ள ஆன்மாக்கள் கன்மத்துக்கு ஏற்ற ஒவ்வொரு சரீரங்களோடு கூடினால் அதற்கு அதற்குத்தக்க தாக அறிவு சீவித்து நிற்கும் என்று பொருள் கூறியதற்குப் பிரமா ணம் :— "சிவப்பிரகாசம்: செறிந்திடும் உடலுள் மன்னிச் சேர் புலன் வாயில் பற்றி, அறிந்ததில் அழுந்தும்" என்பது கண்டு கொள்க.*

இங்ஙனம் சொல்லப்பட்ட ஆன்மா அவத்தைப் படுமிடத்து ஓர் அவத்தையைக் கண்டதொழிய மற்றுள்ள அவத்தை நாலும் அடியேனால் அறியப்பட்டதில்லையே! என்றும் வினு மேல் அருளிச் செய்கின்றது.

### நேரிசை வெண்பா

மொழிந்த அவத்தை முதலடியேன் நின்றுங்
கொழிந்தன நான்கும் உணர—இழிந்தறிந்
தேறிற்றிங் கில்லை எழில்வெண்ணெய் மெய்த்தேவே!
தேறிற்றென் கொண்டு தெரித்து. (7)

என்பது:— *மொழிந்த அவத்தை—சொல்லப்பட்ட அவத்தைகள் ஐந்திலும்,—*

*முதல் அடியேன் நின்று—முதல் அவத்தையாகிய சாக்கிரத்திலே அடியேன் நின்றதுண்டு,—*

*ஆங்கு ஒழிந்தன நான்கும்—அந்தச் சாக்கிரத்தைத் தவிர மற்று உண்டான சொப்பனம் சுழுத்தி துரியம் துரியாதீதம் என்னப் பட்ட நான்கவத்தையும்,—*

*உணர இழிந்து அறிந்து ஏறிற்று இங்கு இல்லை—அடியேன் அறிவுக்கு நினைவு உண்டாம்படி ஒவ்வொன்ருக இறங்கினதும் இல்லை, பின்னும் அறிந்து இவ்விடத்தில் ஏறியதும் கண்டதில்லை,—*

*எழில் வெண்ணெய் மெய்த்தேவே—அழகினையுடைய திருவெண்ணெய் நல்லூரிலே எழுந்தருளியிருக்கப்பட்ட மெய்கண்ட நாதனே!*

*தேறிற்று என் கொண்டு தெரித்து—அந்த அவத்தை நாலும் உண்டென்று அடியேனுக்கு அறுதிப்பட்டு வாக்குறுதி வந்தது எந்தப்பிரமாணங் கொண்டு? அறிந்தது என்றவாறு.*

(கருத்து) *'பிறிந்திட ஐந்தவத்தை பெருகிய மலத்தாற் பேணி' யுறும் ஆகையாலே சுத்ததத்துவங்கள் நீங்கின இடத்திலே ஐந்தவத்தையும் படும் என்று அநுமானப் பிரமாணத்தினலே அறிக என்றது.*

இங்ஙனம் சொல்லப்பட்ட ஆன்மாஒன்றுஉண்டு என்கிறதைத் தரிசித்த வழி ஏது? என்னும் வினு மேல் அருளிச் செய்கின்றது.

நிலைமண்டல ஆசிரியப்பா

**தெரித்ததென் கொண்டெனை உருத்திர பசுபதி!**
**செடிய னேனையும் அடிமை செய்யப்**
**படிவங் கொண்டு வடிவுகாட் டில்லாப்**
**பெண்ணை யாளும் வெண்ணெய் மெய்ய!**
**5 அவத்தையிற் றெரித்தன ஞயின் அவத்தை**
**தெரித்தாங் கிருத்தலு மிலனே திருத்துங்**
**காலம் முதலிய கருவி யாயின்**

மாலும் பிரமனும் வந்தெனை யடையார்
ஓதும் காலை ஒன்றையொன் றுணரா
10 சேதன மன்றவை பேதைச் செயலிச்
சேதன வாறற் செயல்கொள வேண்டும்நற்
போத மிவற்றைப் புணர்வதை யறியேன்
கருவித் திரளினும் காண்பதோ ரொன்றும்
ஒருவுவ தறியேன் உணர்வில னாதலின்
15 நிற்கொடு கண்டன னாயின் எற்குக்
கருவி யாயினை பெருமையு மிலவே
யானே பிரமம் கோனே வேண்டா
இன்னுங் கேண்மோ! மன்ன! நின்னின்
முன்னம் என்றன் உணர்வில னாதலின்
20 என்னைக் காண்பினுங் காண்பல காணா
துன்னைக் காண்பினுங் காண்பல உன்னோ
டொருங்கு காண்பினும் காண்பல அருந்துணை
கண்ட வாறே தெனது கண்ணே
அண்ட வாண! அருட்பெருங் கடலே.! (8)

*என்பது:—'தெரித்தது என்கொண்டு எனை உருத்திர பசுபதி செடியனேனையும் அடிமை செய்ய படிவம் கொண்டு வடிவுகாட் டில்லா பெண்ணை ஆளும் வெண்ணெய் மெய்ய' அந்நுவயம்.*

*உருத்திர பசுபதி—உருத்திர மூர்த்தியுமாய் ஆன்மாக்களுக் கெல்லாம் உயிர்க்குயிராய் நின்று இரட்சித்தருளுகிற கர்த்தாவா யிருக்கப்பட்டவரே !*

*செடியனேனையும் – மூடலையாக்கையோடும் கூடிச் சனன மரண துக்கத்திலே கிடந்து அழுந்துகிற பாவியாய் இருக்கப்பட்ட என்னையும்,—*

*அடிமை செய்ய படிவம் கொண்டு—தேவரீர் திருவடிக்கு உரித் தாக்கிக்கொள்ளவேண்டி அடியேனைப் போல வடிவை எடுத்துக் கொண்டு,—*

*வடிவு காட்டில்லா பெண்ணை ஆளும் வெண்ணெய் மெய்ய— தேவரீருக்கு உண்டாயிருக்கப்பட்ட உண்மை வடிவை ஒருவருக்கும்*

காட்டாத நீ பெண்ணையாற்றை ஆட்சியாகவுடைய திருவெண்ணெய்நல்லூரிலே எருந்தருளியிருக்கப்பட்ட மெய்கண்ட நாதனே;

தெரித்தது என் கொண்டு எனை—அடியேன் என்று ஒருமுதல் உண்டு என்கிறதை அறியப்பட்டது ஏது பிரகாரம் என்று அருளிச் செய்யவேணும்,—

அவத்தையில் தெரித்தனன் ஆயின்—அடியேன் சாக்கிராதி பஞ்சாவத்தைப்பட்டு வருகையினாலே அது கொண்டே அடியேன் என்று முதலை அறியப்பட்டது என்று அருளிச்செய்யுமாகில்,—

அவத்தை தெரித்தாங்கு இருத்தலும் இலனே—அடியேன் அப்படி அவத்தைப்பட்டு வருகிறதே உண்டாமாகில் அப்படி மறைக்கப்பட்டு வருகிற அந்த அவத்தையும் இன்னது இன்னது என்று கண்டு அவ்விடங்களிலே அவற்றை அடியேன் அறிந்து நீக்கிக் கொண்டேனுமில்லை,—

திருத்தும் காலம் முதலிய கருவி ஆயின்— அப்படி அந்த அவத்தையின் மறைப்பை நீக்குகிறது காலம் நியதி முதலிய கருவிகள் என்று அருளிச் செய்யுமாகில்,—

மாலும் பிரமனும் வந்து எனை அடையார்—அப்பொழுது சிருட்டிக்கும் திதிக்கும் கர்த்தாவாய் இருக்கப்பட்ட பிரமனும் விஷ்ணுவும் அடியேனைக் கூடிநின்று உணர்த்துகிறதில்லையாம்; அன்றியும்,—

ஓதும் காலை ஒன்றை ஒன்று உணரா—அந்தக் கருவிகளின் இயல்பைச் சொல்லுமிடத்து ஒரு கருவியை ஒரு கருவி அறியாது! அன்றியும்,—

சேதனம் அன்று அவை பேதைச் செயல்—அந்தக் கருவிகள் அறிவுள்ளதல்ல, அறியாமையாய் இருப்பதோர் செயல்; அப்படியல்ல, ஆன்மா அறிவாய் இருப்பது கொண்டு அந்தக்கருவிகளோடும் கூடில் அவை சேட்டைப்படும் என்று அருளிச்செய்யில்,—

இ சேதனவானால் செயல் கொளவேண்டும் நல் போதம் இவற்றை புணர்வதை அறியேன்—அப்படி அடியேன் அறியும்

பகுதிக்கு உரியவனுமாய் அந்தக்கருவிகளின் பயனைக் கொள்ளத் தக்கவனுமாய் இருக்கில் அடியேனுடைய அறிவு அந்தக் கருவி களைக் கூட்டுகிறதை அறிகின்றேனில்லை; அன்றியும்,—

கருவி திரளினும் காண்பது ஓர் ஒன்றும்—அந்தக் கருவிகள் எல்லாம் கூடின சாக்கிரத்திலும்சத்தாதிவிடயங்களை அறியுமிடத்து ஒவ்வொன்றாக அறிகிறதொழிந்து ஐந்தையும் ஒக்க அறிகின்றதில்லை; அன்றியும்,—

ஒருவுவது அறியேன் உணர்வு இலன் ஆதலின்—அப்படி நின்று சீவிக்கிற அவதாரத்து அந்தக் கருவிகள் நீங்குகிறதையும் அறிகின் றேனில்லை; அறிவில்லாதவன் ஆகையாலே,—

அப்படி ஓரொன்றினை அறியுமிடத்தும் நீயாகத் தனித்து ஒன் றையும் அறியமாட்டாய்: நாம் அறிவித்தால் அறிவை என்று அருளிச் செய்யில்,—

நின் கொடு கண்டனன் ஆயின் எற்கு கருவி ஆயினை பெரு மையும் இல ஏ—அப்படி அடியேன் அறிகிறதெல்லாம் தேவரீர் அறி வித்தால் அறிவேனுமாகில் அப்பொழுது தேவரீரை அடியேனுக்குக் கருவியென்று சொல்லப்படும்; கர்த்தா என்கிற பெருமையும் தேவ ரீருக்கு இல்லையாம்: ஆகையாலே,—

யானே பிரமம் கோனே வேண்டா—அடியேன்தானே கர்த்தா என்று சொல்லப்படும், தேவரீரை அடியேனுக்குக் கர்த்தா என்ன வேண்டுவதும் இல்லை; அதுவன்றியும்,—

இன்னும் கேண்மோ மன்ன—தம்பிரானே! அடியேன் விண் ணப்பம் செய்யத்தக்கது இன்னமும் ஒன்றுண்டு; அது ஏது? என்று தேவரீர் கேட்டருளுமாகில்,—

நின்னின் முன்னம் என்றன் உணர்வு இலன் ஆதலின் — அப் படித் தேவரீர் அறிவிக்க அடியேன் அறிந்தேனுமாகில் அங்ஙனம் நின்று அறிவிக்கிற தேவரீரை எதிர்ப்பட்டு நின்று இது அல்லவோ நம்மை அறிவிக்கிற முதல் என்று அறிய மாட்டுகிறேனில்லை, அடி யேன் அறிவில்லாதவன் ஆகையினாலே,—

என்னவே, இரண்டாய் நிற்கலாகாது என்பது கருத்து.

என்னை காண்பினும் காண்பு அல காணுது உன்னை காண்பினும் காண்பு அல உன்னோடு ஒருங்கு காண்பினும் காண்பு அல— இரண்டாய் இப்படி நின்று அடியேனை அறிய என்றாலும் அறியப் படும் பகுதியும் இல்லை; அதுவன்றியும், தேவரீரை அறிய என்றா லும் அறியப்படும் பகுதியும் இல்லை; தேவரீரோடு அடியேனும் கூடி அறிய வேணும் என்றாலும் அறியப்படும் பகுதியும் இல்லை,—

'அரு துணை கண்டவாறு ஏது எனது கண்ணே அண்டவாண அருள் பெரும் கடலே' என்பதனைப் பொருளுக்கு ஏற்க மாறிக் கொள்க. பொருளாவது : அடியேனுக்கு அரியதுணையாய் இருக் கப்பட்டவரே! அடியேனுக்கு அறிவாகிய கண்ணாய் இருக்கப்பட்ட வரே! தேவர்களுக்கும் கர்த்தாவாய் இருக்கப்பட்டவரே! அருள் அமுத வெள்ளத்தை நம் அடியவர்க்குக் கொடுத்தருளுகிற சமுத் திரமாய் இருக்கப்பட்டவரே! அடியேன் என்னைத் தரிசிக்கப்பட் டது ஏது பிரகாரம் கொண்டு என்பதாம்.

(கருத்து) இப்படி, கிருபை தாற்பரியமாகத் திருமேனிகொண்டு அறிவிக்க ஆன்மா தனக்குச் சுதந்திரமில்லை என்கிறதை அறிந்து தான் அந்த ஞானமாய் நிற்கவே தன்னைத் தரிசிக்கலாம் என்று அருளியவிடத்தன்றி யான் அறியும்பகுதி ஒன்றுமில்லை என்றவாறு.

ஆன்மா தனக்குச் சுதந்திரமில்லை என்கிறதை அறிந்து தான் அந்த ஞானமாய் நிற்கவே தன்னைத் தரிசிக்கலாம் என்றதற்கு உதாரணம் : சிவப்பிரகாசம் ; "தன்னறி வதனால் ஏதும் தனக்கறி வில்லை யேனும், தன்னறி வாக எல்லாம் தனித்தனிப் பயனருந்தும், தன்னறி வறியும் தன்மை தன்னாலே தனையறிந்தால், தன்னையும் தானே காணும் தானது வாகி நின்றே." எனவும்; பட்டினத்துப் பிள்ளையார் திருவிடைமருதூர் மும்மணிக் கோவை : "மாயப் படலம் கீறித் தூய, ஞான நாட்டம் பெற்றனன் பெற்றபின், நின் பெருந் தன்மையும் கண்டேன் காண்டலும், என்னையும் கண்டேன் பிறரையும் கண்டேன், நின்னிலை அனைத்தினும் கண்டேன் என்னை" எனவும்; சித்தியார் ; "அடிஞானம் ஆன்மாவில் தோன்

றும் தோன்றத் தூரியனும் சிவந்தோன்றத் தானும் தோன்றும்" எனவும் வந்தன கண்டுகொள்க.

'அவத்தையில் தெரித்தனன் ஆயின்' என்பதற்கு சாக்கிராதி பஞ்சாவத்தைப்பட்டு வருகையினாலே அஃதுகொண்டே அடியேன் என்று ஒரு முதலை அறியப்பட்டதென்று பொருள் கூறியதற்குப் பிரமாணம் :— சித்தியார் : "படைகொடு பவனி போதும் பார்மன்னன் புகும்போ தில்லில், கடைதோறும் விட்டு விட்டுக் காவலு மிட்டுப்பின்னை, அடைதரும் தனியே யந்தப் புரத்தினில் அதுபோ லான்மா, உடலினில் அஞ்சவத்தை உறுமுயிர் காவலாக" என்பது கண்டுகொள்க. 'திருத்துங் கால முதலிய கருவியாயின்' என்பதற்கு அப்படி அந்த அவத்தையின் மறைப்பை நீக்குகிறது காலம் நியதி முதலிய கருவிகள் என்று பொருள் கூறியதற்குப் பிரமாணம்:— சிவப்பிரகாசம்: " இத்தகைமை இறையருளால் உயிர் அறியும் அறிவுக் கீடாக வாடாதே யீரிரண்டில் உரைத்த, வித்தை முதல் ஐவரான் விளங்கு ஞானம் மேவியிடும் எனவுரைப்பர் அசுத்த மாயை, வைத்தகலை தான்மூல மலஞ்சிறிதே நீக்கி மருவும்வகை தெரிவிக்கும் வாயில்களின் பயனைப், புத்திதா வித்தையிடை நின்ற நிலை உயிர்க்குப் பொருந்தியிடும் வகைபுணரும் புனித சத்தி புணர்ந்தே" என்பது கண்டுகொள்க.

ஆன்மா அறிவாயிருப்பது கொண்டு அந்தக் கருவிகளோடும் கூடில் அவை சேட்டைப்படும் என்றருளியதற்குப் பிரமாணம் :— சிவப்பிரகாசம் : " தனக்கென அறிவி லாதான் தத்துவ வன்னரூபன், தனக்கென அறிவானுலிச் சகலமும் நுகரும் தானே" எனவும் கண்டு கொள்க. அறிவில்லாதவன் ஆகையாலே அப்படி ஒரோன்றினை அறியுமிடத்து நீயாகத் தனித்து ஒன்றையும் அறியமாட்டாய் நாம் அறிவித்தால் அறிவை என்று அருளிச் செய்ததற்குப் பிரமாணம் :— சிவப்பிரகாசம் : " இருள்நனி இரவி தான்வந் திரித்தலும் இரவில் எண்ணும், பொருள்நிலை கண்டு மாந்தர் பொருந்திடுமாறு போல, மருள்நிலை எங்கும் நீங்க மகிழ்ந்துயிர் தன்னுள் மன்னும், அருளையும் ஒழிய ஞாலத் தறிதவா றறியும் அன்றே" என்பது கண்டு கொள்க. (8).

இங்ஙனம் சொல்லப்பட்டு வருகிற ஆன்மா மூலாதாரத்திலே ஒடுங்கி அதீதப்பட்டுக் கிடக்கும் அவதாரத்து உணரும் முறைமை எப்படி ? என்னும் வினு மேல் அருளிச்செய்கின்றது.

நேரிசை வெண்பா

**கடலமுதே! வெண்ணெய்க் கரும்பே! யென்கண்ணே!**
**உடலகத்து மூலத் தொடுங்கச்—சடலக்**
**கருவியா தாங்குணர்த்தக் காண்பதுதான் என்னே**
**மருவியா தென்றுரைக்க மன். (9)**

என்பது : *கடல் அமுதே வெண்ணெய் கரும்பே-சமுத்திரத்தில் உண்டாயிருக்கப்பட்ட அமுதம் போலவும் திருவெண்ணெய நல்லூரிலே உண்டாயிருக்கப்பட்ட கரும்பு போலவும் இனியவனே !,—*

*என் கண்ணே — அடியேனுக்குக் காட்டாய் இருக்கப்பட்ட கண்போல உரியவனே ! அடியேன் அவத்தைப்படும் அவதாரத்து,—*

*உடலகத்து மூலத்து ஒடுங்க—சரீரத்துக்குள்ளே மூலாதாரத்திலே ஒரு கருவிகளும் கூடாமல் அதீதப்பட்டுக் கிடக்கிற அவதாரத்து அடியேன் உணருகைக்கு,—*

*சடல கருவி யாது ஆங்கு உணர்த்த—சரீரக் கூட்டமாக நின்று உணர்த்தின கருவி எது ? சடக்கென விரைவிலே உணர,—*

*காண்பதுதான் என்னை மருவி—அடியேன் அறிகிறதுதான் எதனுடன்கூடி,—*

*யாது என்று உரைக்க மன்—தேவரீர், அடியேன் விண்ணப்பம் செய்தற்கு இது என்று விளங்க அருளிச்செய்தருள வேண்டும் என்பதாம்.*

(கருத்து) *ஆன்மதத்துவம்*–24, *வித்தியாதத்துவம்*–7, சிவ *தத்துவம்*–5 *இவற்றிற்கு முறையே* போககாண்டம் *என்றும்,* போக்கியகாண்டம் *என்றும்,* பிரேரகாண்டம் *என்றும் பெயர்.*

இவற்றுள், ஆன்மதத்துவம் இருபத்துநாலும் உட்கருவியும் புறக் கருவியுமாய்த் தேகமாய்ப் பொருந்தி, சிவதத்துவங்கள் கலாதி களைப் பிரேரித்து அறிவிக்கும் என்க.

இதற்கு உதாரணம் :—சித்தியார் : "வாயாதி சோத்தி ராதி புறத்துவாழ் கருவி யாகும், ஓயாத மனாதி காயத் துணருமுட் கருவி யாகும், ஆய்வார்கட் கராக மாதி அவற்றினுட் கருவி என்பர், மாயாள்தன் வயிற் றிவற்றால் துடக்குண்டு வாழும் ஆன்மா." எனவும்;

போற்றிப்பஃறொடை : "மூலவருங் கட்டி லுயிர் மூடமா யுட் கிடப்பக், காலம் நியதி யதுகாட்டி—மேலோங்கும், உந்திவியன் கட்டில்உயிர் சேர்த்துக் கலைவித்தை, அந்த அராகம் அவைமுன்பு- தந்த, தொழிலறி விச்சை துணையாக மானின், எழிலுடைய முக் குணமும் எய்தி—மருளோடு, மன்னும் இதயத்துச் சித்தத்தாற் கண்டபொருள், இன்ன பொருளென் றியம்பவொண்ணு—அந்நிலை போய்க், கண்டவியன் கட்டிற் கருவிகளீ ரைந்தொழியக், கொண்டு நிய மித்தற்றை நாட்கொடுப்பப்—பண்டை, இருவினையால் முன் புள்ள இன்பதுன் பங்கள், மருவும்வகை யங்கே மருவி" எனவும் சொன்ன முறைமைகளைக் கண்டுகொள்க.

இங்ஙனம் சரீரநோந்தனைப்பட்டு நிற்கிற அடியேனுக்குத் தேவரீர் தீக்ஷாக்கிரமங்களினாலே பாசமோசனம் பண்ணியிருக்க வும் அடியேன் மீளவும் மலமாயாதி கன்மங்களோடு தொந்தித்து நிற்கைக்கு வழிஏது? என்னும் வினு போல் அருளிச்செய்கிறது.

நேரிசை ஆசிரியப்பா

மன்னிய கன்மச் சமத்திடை மலங்களை
அன்னிய மாக்கி அருள்வழி யதனால்
என்னுள் புகுந்தனை யெனினே முன்னைத்
திரிமலந் தீர்த்த தேசிக ! நின்னே
5 டொருவுத லின்றி யுடைந்தையே யாகும்

பெருநிலை யாகல் வேண்டும் மருவிடும்
மும்மல மதனால் எம்முள்நின் றிலையெனின்
அம்மலத் திரிவும் செம்மலர்த் தாள்நிழற்
சேர்தலு மிலவாய்ச் சார்பவை பற்றிப்
10 பெயர்வில னாகும் பெரும! தீர்வின்
றமைந்த கருமத் தியைந்தவை யல்லது
சமைந்தன இலவெனச் சாற்றின் அமைந்த
மாயேயங் கன்ம மாமல மூன்றும்
மாயா தாகவே ஆச்சந மாயையின்
15 உற்பவந் தீரா தொழுகுமென் றொன்றின்
நிற்சம மாயி னல்லது நிற்பெறல்
இல்லென மொழிந்த தொல்லறந் தனக்கும்
ஏயா தாகும் நாயே னுளத்து
நின்றனை யென்பனோ நின்றிலை யென்பனோ
20 பொன்றிய பொன்றிற் றிலமல மென்பனோ
ஒன்றினை உரைத்தருள் மன்ற குன்றாப்
பெண்ணைப் புனல்வயல் வெண்ணைக் கதிபதி!
கைகண் தலைவாய் கால்செவி மூக்குயர்
மெய்கொண் டென்வினை வேரறப் பறித்த
25 மெய்கண்ட தேவே! வினையிலி!
மைகொண்ட கண்ட! வழுவிலென் மதியே! (10)

என்பது :— *மன்னிய கன்ம சமத்திடை மலங்களை அநநியம் ஆக்கி—அநாதியே அடியேனோடும் கூடி நிலைபெற்றுவருகிற கன்மம் ஆகிய புண்ணிய பாவங்கள் தன்னில் சமமாகத் துலையொத்த அவ தாத்து அடியேனோடும் கூடியிருக்கப்பட்ட மலங்களைத் தேவரீர தீக்ஷாக்கிரமங்களினாலே வேறுபடுத்தி,—*

*அருள் வழி அதனால் என் உள் புகுந்தனை எனினே—தேவரீர் அநுக்கிரகத்தின் முறைமையாலே அடியேன் உள்ளத்திலே எழுந் தருளினதே உண்டாமாகில்,—*

*மலம் தீர்த்த தேசிக நின்னோடு ஒருவுதல் இன்றி உடந்தையே ஆகும் பெருநிலை ஆகல் வேண்டும்—குருமூர்த்தியாய்*

இருக்கப்பட்ட தம்பிரானே! அடியேனுக்கு அநாதியாய் இருக்கப் பட்ட மூன்று மலங்களையும் நீக்கின தேவரீரை அடியேன் விட்டு நீங்காமல் உடந்தையாய்க் கலந்து நிற்கும் பேரின்பம் ஆகிய திரு வருட்'பிரகாசம் உண்டாகவேண்டும்; அது நிற்க, முன்னே என் னிடத்தில் தேவரீர் இல்லையாம்,—

மருவிடும் மும்மலம் அதனால் எம்முள் நின்றிலை எனில்–அடி யேனோடு கூடிவருகிற ஆணவம் மாயை காமியம் என்னும் மூன்று மலங்களினோடு வாதனை செய்து நிற்கையினால் அடியேன் உள் ளத்திலே தேவரீர் எழுந்தருளிநின்றது இல்லையாமாகில்,—

அ மலதிரிவும் செம்மலர் தாள் நிழல் சேர்தலும் இல ஆய் சார்பு அவை பற்றி பெயர்வு இலன் ஆகும் பெரும நீர்வு–அந்த மலங்களைத் தேவரீர் போக்கினதும் இல்லையாய், அடியேனும் சிவந்த தாமரை மலர்போன்ற ஸ்ரீ பாதத்திலே வந்து பொருந்தினதும் இல்லையாய், பிரபஞ்ச வாதனையாலே வந்து பொருந்தின கன்மங் களைப் புசித்து, அதனாலே புண்ணிய பாவங்களில் கட்டுப்பட்டு, சநந மரண துக்கத்தைவிட்டு நீங்குகைக்கு வழியில்லாதவனாகும்; தம்பிரானே! இது நிச்சயம் தப்பாது: அப்படியல்ல,—

இன்று அமைந்த கருமத்து இயைந்தவை அல்லது சமைந்தன இல என சாற்றின்–இப்பொழுது அடியேன் எடுத்த உடலுக்கு அடுத்த பிராரத்துவம் அநுபவிக்கிறதொழிய மேல் உடல் எடுக் கைக்கு உள்ள ஆகாமிய கன்மம் ஏறாது என்று அருளிச்செய்யில்,—

அமைந்த மாயேயம் கன்ம மாமலம் மூன்றும் மாயாது–அடி யேனுக்கு அமைந்த பிராரத்துவத்துக்கு ஈடாக எடுத்த மாயேயம் என்னப்பட்ட காரியமாகிய உடல் உள்ள அளவும் அதன் காரணம் ஆகிய மாயை போகாது, மாயை உண்டாகவே கன்மமும் போகாது, அப்படி மாயையும் கன்மமும் உண்டாகவே ஆணவமலம் உண்டு எனப்படும்,—

ஆகவே ஆர்ச்சனம் மாயையின் உற்பவம் தீராது ஒழுகும்–ஆக இங்ஙனம் மூன்று மலங்களும் உண்டாகவே ஆகாமியங்களை ஆர்ச்

சித்து மாயையின் தோற்றமாய் உள்ள சரீர தொந்தனை விடாமல் மேன்மேலும் தொன்றுதொட்டு வரும்; அன்றியும்,—

ஒன்றொன்றினில் சமமாயின் அல்லது நின்பெறல் இல் எனல் ஒழிந்த தொல் அறம் தனக்குமே யாதாகும்—இருவினையாகிய புண் ணியபாவங்கள் ஒன்றுக்கொன்று தம்மில் சமமாகத் துலையொத்தா லொழியத் தேவரீரை அடியார் பெறுகிறதில்லை என்று சொல்லப் பட்ட பகையதாகிய சிவசாத்திரத்துத் தன்மமாகிய திருவாக்கும் பொருந்ாது; ஆகையால்,—

நாயேன் உளத்து நின்றனை என்பனோ? நின்றிலை என்பனோ? பொன்றிய பொன்றிற்றில மலம் என்பனோ? ஒன்றினை உரைத் தருள் மன்ற—அடியேன் உள்ளத்துத் தேவரீர் கூடிநின்றதென்று விண்ணப்பம் செய்வனோ? அந்த மலங்கள் கெட்டுப் போனதென்று விண்ணப்பம் செய்வனோ? கெடாமல் நின்றது என்று விண்ணப்பம் செய்வனோ? இவையிற்றில் ஒன்றை அருளிச்செய்யவேண்டும், அடி யேனுக்கு அறுதிப்பட,—

குன்றா பெண்ணை புனல் வயல் வெண்ணெய்க்கு அதிபதி— வளப்பங்கள் குறைவுபடாத பெண்ணையாற்று நீர் பாயப்பட்ட வயல் களையுடைய திருவெண்ணெய்நல்லூருக்குக் கர்த்தாவாய் இருக்கப் பட்டவரே!

கை கண் தலை வாய் கால் செவி மூக்கு உயிர் மெய் கொண்டு என் வினை வேர் அற பறித்த மெய்கண்டதேவே—கரசரணாதியாய் உள்ள அவயங்களோடு கூடியிருக்கப்பட்ட திருமேனியெடுத்துக் கொண்டு அடியேனுக்கு உண்டாகிய கன்மங்களைக் கிளைப்பு அறப் பறித்துப் போட்ட மெய்கண்ட தேவரே!

வினை இலி—அப்படி ரூபீகரித்திருக்கச் செய்தேயும் கன்ம தொந்தனை இல்லாதவரே!

மை கொண்ட கண்ட—நஞ்சமாகிய கறுப்பினைக் கண்டத்தில் தரித்தருளின கறைமிடற்றரே!

வழு இல் என்மதியே-அடியேனுக்குக் குற்றமற்ற அறிவாய் இருக்கப்பட்ட தம்பிரானே! இவ்வினைத்தன்மையை எனக்கு அருளுவீராக என்பதாம்.

(கருத்து) ஓர் ஊருக்குஇருவழிப்பகுதி தோன்றின இடத்துச் செல்வானுக்குத் திகைப்பு உண்டானாற் போல, கன்மம் துலையொப்பிலே சத்திக்குத் திகைப்பு வரும்; அதுவே சத்தி தன் தொழில் செலுத்தாதிருத்தலாம்; அவ்வவதாம் தேவரீர் அறிவதல்லது யாவர்? அறிவர் என்பதாம்.

அடியேனோடு கூடியிருக்கப்பட்ட மலங்களைத் தீக்ஷாக்கிரமங்களினாலே வேறுபடுத்தித் தேவரீர் அநுக்கிரகத்தின் முறைமையாலே அடியேன் உள்ளத்திலே எழுந்தருளினதே உண்டாமாகில் என்பதற்குப் பிரமாணம்:— சித்தியார்: "சகலர்க்குக் கன்மவொப்பில், தரையிலா சான்மூர்த்தி யாதாரமாகித் தரித்தொழிப்பன் மலம்சதுர்த்தா சத்திநிபா தத்தால்" எனவும்; "நிறுத்துவதோர் குணமில்லான் தன்னையொரு வர்க்கும் நினைப்பரியான் ஒன்றுமிலான் நேர்படவந் துள்ளே, பொறுப்பரிய பேரன்பை அருளியதன் வழியே புகுந்திடுவன் எங்குமிலாப் போகத்தைப் புரிந்தே" எனவும் கண்டு கொள்க. மருவிடும் மும்மலம் அதனால் எம்முள் நின்றிலை எனில் என்பதற்கு அடியேனோடு கூடிவருகிற ஆணவம் மாயை காமியம் என்னும் மூன்று மலங்களினோடும் வாதனை செய்து நிற்கையினாலே அடியேன் உள்ளத்திலே தேவரீர் எழுந்தருளிநின்ற தில்லையாம் என்று பொருள் கூறியதற்குப்பிரமாணம்:- சிவஞானபோதம்: "அருக்கனேர் நிற்பினும் அவ்விருளே காணார்க், கிருட்கண்ணே பாகத்தார்க் கீசன்" எனவும்; "தன்னுணர்வு, நேசத்தர் தம்பால் நிகழும் தநிநெய்போல், பாசத்தார்க் கின்றாம் பதி." எனவும்; போற்றிப்பஃறொடை: "என் உள்ளமென்று நீங்கா தொளித்திருந்து" எனவும் வருவது கண்டு கொள்க. இன்றமைந்த கருமத்தியைந்தவை அல்லது சமைந்தன இலஎனச் சாற்றின் என்பதற்கு இப்பொழுது அடியேன் எடுத்த உடலுக்கடுத்த பிராரத்துவம் அநுபவிக்கிறதொழிய மேல் உடல் எடுக்கைக்குள்ள ஆகாமிய கன்மம்

ஏறுது என்று அருளிச்செய்யில் என்று பொருள் கூறியதற்குப் பிர மாணம் :— திருவருட்பயன் : "என்றவினை யுடலோ டேகுமிடை யேறும்வினை, தோன்றில் அருளே சுடும்" எனவும்; சிவப்பிரகாசம்: "தொல்லையில் வருதல் போலத் தோன்றிரு வினைய துண்டேல், அல்லொளி புரையும் ஞானத் தழகுற அழிந்து போமே." எனவும்; சித்தியார் ; "என்றவுடற் கன்மமனு பவத்தினால் அறுத்திங் கினிச் செய்கன்ம மூலமல ஞானத்தா லிடிப்பன்" எனவும்; சிவஞான போதம் : "பின்செய்வினை மாயையுடன் நில்லாது" எனவும் கண்டுகொள்க.

அமைந்த மாயேயம் கன்மம் மாமலம் மூன்றும் மாயாது என்ப தற்கு அடியேனுக்கு அமைந்த பிராரத்துவத்துக்கு ஈடாக எடுத்த மாயேயம் என்னப்பட்ட காரியமாகிய உடல் உள்ள அளவும் அதன் காரணம் ஆகிய மாயை போகாது, மாயை உண்டாகவே கன்மமும் போகாது, அப்படி மாயையும் கன்மமும் உண்டாகவே ஆணவ மலம் உண்டு எனப்படும் என்று பொருள்கூறியதற்குப் பிரமாணம் : சித்தியார் : "அங்கித்தம் பனைவல்லார்க் கனல்சுடா தாகும் ஔடத மந் திரமுடையார்க் கருவிடங்கள் ஏறு, எங்கித்தைக் கன்மமெலாம் செய்தாலும் ஞானிக் கிருவினைகள் சென்றணையா முற்செய்வினை யிங்குத், தங்கிப்போம் பாத்திரமும் குலாலன்வினை தவிர்ந்த சக்கர மும் கந்தித்துச் சுழலு மாபோல், மங்கிப்போய் வாதனையால் உழல் விக்கும் எல்லா மலங்களும்பின் காயமொடு மாயு மன்றே" எனவும் வருவது கண்டு கொள்க.

வாதனை தோஷத்தினாலே அக்கினியைச் சேர்ந்த வித்தைப் போலவும், ஆயன் வெட்டின மரம் போலவும், புடம் பண்ணின பணம் போலவும், வெந்தபடம் போலவும் உருவமாத்திரமல்லாமல் பெந்தம் இல்லை; ஆகையால், காரணமலங்களும் சரீரத்தோடுதேய்ந்து அறும் என்பது கருத்தாகக் கொள்க.

தேவரீரை அடியார் பெறுகிறதில்லை என்று சொல்லப்பட்ட பழையதாகிய சிவசாத்திரத்துத் தன்மமாகிய திருவாக்கும் பொருந்

தாது என்பதற்குக் கருத்தாவது: புண்ணியபாவம் ஒன்று சமத்துவ மாறுலல்லவோ தேவரீரைப் பெறுவது என்று சொன்ன பழைய திருவாக்கு புண்ணிய பாவத்துக்கு ஏற்ற தேகம் நிற்கவே வினை ஒத்தது எப்படி? என்று சீடன் வினயதற்கு இருவினையொப்புக்குச் சரீரம் முன்னிலை அல்ல, புண்ணியத்திலேயும் பாவத்திலேயும் இரண்டிலேயும் சமமாக வெறுப்புவந்ததே இருவினையொப்பு; அப்போது ஆசாரிய மூர்த்தமாக வந்து சிவன் இரட்சிப்பன்: இதற்குப் பிரமாணம்:— போற்றிப்பஃறொடை: "எல்லை இரண்டும் இடையொப்பில்—பல்பிலவி, அத்தமதில் அன்றோ அளவென்று பார்த்திருந்து, சத்தி பதிக்கும் தாய்போற்றி" என்பது கண்டு கொள்க. நாயேன் உள்ளது நின்றனை என்பனோ? நின்றிலை என்பனோ? என்பதற்கு அடியேன் உள்ளத்துத் தேவரீர் கூடிநின்றதென்று விண்ணப்பம் செய்வனோ? கூடிநின்றதில்லையென்று விண்ணப்பம் செய்வனோ? என்று பொருள் கூறியதற்குப் பிரமாணம்:— சித்தியார்: "எங்குந்தான் என்னின் நாம் எய்தவேண்டா எங்குமிலன் என்னின் வே றிறையும் அல்லன், அங்கம்சேர் [illegible] என்னின் அங்கத் தவயவங்கள் கண்போலக் காணு ஆன்மா, இங்கு நாம் [illegible] ஈதல்சுடர் இழந்த, துங்கவிழிச் சோதியுமுட் சோதியும்பெற் றாற்போல் சோதிக்குட் சோதியாய்த் தோன்றிடுவன் காணே" என்பது கண்டு கொள்க.

பொன்றிய பொன்றிற்றில மலம் என்பனோ என்பதற்கு அந்த மலங்கள் கெட்டுப் போனதென்று விண்ணப்பம் செய்வனோ? கெடாமல் நின்றதென்று விண்ணப்பம் செய்வனோ? என்று பொருள் கூறியதற்குப் பிரமாணம்:— சித்தியார்: "நெல்லினுக்குத் தவிடுமிகள் அநாதி யாயே நெல்லைவிட்டு நீங்கும் வகை நின்றநிலை நிகழ்த்தீர், சொல்லியிடில் துகளற்ற அரிசியின்பால் இல்லை தொக்கிருந்து மற்றொரு நெல் தோன்றி டாவாம், மெல்ல இவை விடும் அறவே இவைபோல அணுவை மேவும் மலம் உடல்கன்மம் அநாதி விட்டே நீங்கும், நல்லசிவம் முத்தியின்கண் பெத்தான் மாவை

நணுகி நிற்கும் ஆதலால் நாசமும் இன்றாமே" எனவும்; சிவப் பிரகாசம்: "அழிந்திடும் பாச மென்னில் நித்தமென் றுரைத்தல் வேண்டா, அழிந்திடா தென்னின் ஞானம் அடைவது கருத வேண்டா, அழிந்திடும் சத்தி நித்தம் அழிந்திடா ஒளியின் முன்னர், அழிந்திடும் இருளும் நாசம் அடைந்திடா மிடைந்தி டாவே" எனவும் வருவது கண்டுகொள்க. (10)

## நேரிசைவெண்பா

**மதிநின்பால் இந்த மலத்தின்பால் நிற்க**
**விதியென்கொல் வெண்ணெய்வாழ் மெய்ய!—பதிநின்பால்**
**வந்தால் இதின்வரத்தில் வந்திரண்டும் பற்றுகிலேன்**
**எந்தாய்! இரண்டாமா றென். (11)**

என்பது:— *மதிநின்பால் — அடியேனுக்கு உண்டாயிருக்கப் பட்ட அறிவு தேவரீர்பகுதியிலே உண்டானது; அப்படியிருக்கவும்,—*

*இந்த மலத்தின்பால் நிற்க விதி என் கொல்-அடியேன் இந்த மலத்தின் பகுதியிலே கூடி மயங்கி நிற்கைக்கு முறைமை ஏது?*

*வெண்ணெய் வாழ் மெய்ய—திருவெண்ணெய் நல்லூரிலே எழுந்தருளியிருக்கப்பட்ட மெய்கண்டநாதனே!*

*பதி நின்பால் வந்தால்-கர்த்தாவாய் இருக்கப்பட்ட தேவரீரை அடியேன் வந்து கூடினால்,— இந்த வரத்து இல்—இந்த மலத்திலே மீள வருகைக்கு வழக்கில்லை,—*

*வந்து இரண்டும் பற்றுகிலேன்—தேவரீரை வந்து கூடினால் அந்த அருளோடும் இந்த மலத்தோடும் ஒக்க நிற்கிறது அடியேனுக்கு உண்டாகாது,—*

*எந்தாய் இரண்டு ஆம் ஆறு என்—அடியேனுக்குச் சுவாமியாய் இருக்கப்பட்டவரே! அடியேன் ஒருத்தன் தேவரீரோடும் கூடி அறிந்தும், இந்த மலத்தோடும் கூடி அறியாமலுமாய் இரண்டோடும் கூடி அது அதுவாய் நிற்கைக்கு வழக்கு ஏது என்பதாம்.*

(கருத்து) அறிவு மிகுத்தவனும் ஆகாமல் அறிவில்லாத மூடனும் ஆகாமல் கதிபெறவேண்டும் என்கிற நடுவாந்தன்மையாகியவன் தான் பாசத்தினிடத்தும் பதத்தினிடத்தும் ஆசைபற்றிய பொழுது இரண்டிலும் அன்றிப் பற்றியது அதுவதுவாய் நிற்பன் என்க.

உதாரணம் :— சித்தியார் : "பாசிபடு குட்டத்திற் கல்லினை விட்டெறியப் படும்பொழுது நீங்கியது விடும்பொழுது பாக்கும், மாசுபடு மலமாயை அறுங்கன்மம் அனைத்தும் அரனடியையுணரும்போ தகலும்பின் அணையும், நேசமொடும் திருவடிக்கீழ் நீங்காதே தாங்கும் நினைவுடையோர் நின்றிடுவர் நிலையிதுவே யாகும், ஆசையொடும் அங்குமிங்கும் ஆகியலம் வருவோர் அரும்பாசம் அறுக்கும்வகை அருளின்வழி யுரைப்பாம்" என்பது கண்டுகொள்க.

'மதிநின்பால் இந்த மலத்தின்பால் நிற்கவிதி என்கொல்' என்பதற்கு அடியேனுக்கு உண்டாயிருக்கப்பட்ட அறிவு தேவரீர் பகுதியிலே உண்டாயிருந்தும் அடியேன் இந்த மலத்தின் பகுதியிலே கூடி மயங்கி நிற்கைக்கு முறைமை ஏது? என்னும் வினவுக்குக் கர்த்தா கன்மத்தின்வழி நடத்துவன் என்பது கருத்து. இதற்குப் பிரமாணம் :— சிவஞானபோதம் : "அவையே தானே ஆயிரு வினையில், போக்கு வரவு புரிய ஆணையின், நீக்கமின்றி" என்பது கண்டுகொள்க. (11)

தேவரீர் அனவரதமும் உயிர்க்குயிராய் நின்று அறிவிக்கும் என்று இருக்கையிலே அடியேனுடும் ஒருகால் கூடியும் ஒருகால் நீங்கியும் வருகைக்கு வழி ஏது? என்று மாணவகன் கேட்கும் வினு மேல் அருளிச்செய்கின்றது.

### நேரிசை ஆசிரியப்பா

**எண்டிசை விளங்க இருட்படாம் போக்கி**
**முண்டக மலர்த்தி மூதறி வருளும்**
**மேதினி யுதய ! மெய்கண்ட தேவ !**

கோதில் அமுத! குணப்பெரும் குன்ற!
5 என்னின் ஆர்தலும் அகறலும் என்னைகொல்?
உன்னி லுன்னி உறுவிடிற் பெயர்குவம்
என்னும் அதுவே நின்னியல் பெனினே
வியங்கோ ளாளனு மாகி இயங்கலும்
உண்டெனப் படுவை எண்தோள் முக்கண்
10 யாங்கணும் பிரியா தோங்குநின் நிலையின்
யான்வந் தணைந்து மீள்குவ னாயின்
ஆற்றுத்துய ருற்றோர் அணிநிழல் நசைஇ
வீற்றுவீற் றெழுதர வேண்டலும் வெறுத்தலும்
இன்றிச் சாயைக்கு நன்றுமன் னியல்பே
15 அனையை ஆகுவை நினைவருங் காலை
இந்நிலை அதனின் ஏழையேற் கிரங்கி
நின்னை வெளிப்படுத் தொளிப்பை நீயேல்
அருள்மா றுகும் பெருமஃ தன்றியும்
நிற்பெற் றவர்க்கும் உற்பவ முண்டெனும்
20 சொற்பெறும் அஃதித் தொல்லுல கில்லை
அவ்வவ் வமைவும் சோர்வும் மயர்வறச்
சொல்லிற் சொல்லெதிர் சொல்லாச்
சொல்லே சொல்லுக சொல்லிறந் தோயே! (12)

என்பது: *எண்திசை விளங்க இருள் படாம் போக்கி முண்டகம் மலர்த்தி மூதறிவு" அருளும் – எட்டுத்திக்கிலும் உள்ள அந்தகாரங்களை நீக்கித் தாமரை முகிழையும் மலர்த்தும் ஆதித்தனைப் போல அடியேன் தேவரீரைப் பெற வேண்டுகைக்கு விசாரித்தறிய வேண்டும் பகுதிக்கெல்லாம் விளக்கம் செய்யத்தக்கதாக அடியேனை மறைக்கப்பட்ட அஞ்ஞானமாகிய போர்வையை நீக்கி அடியேன் இருதயகமலத்தையும் அலர்த்துவித்து அநாதியாய் இருக்கப்பட்ட திருவருளையும் அடியேனுக்குக் கடாக்ஷித்தருளிய,—*

*மேதினி உதய—பூமியிலே தோன்றியருளின ஞானாதித்தனே!*

*மெய்கண்ட தேவ—மெய்கண்டதேவர் என்கிற திருநாமத்தினையுடையவரே!*

கோது இல் அமுத—குற்றமற்ற அமுதமாயிருக்கப்பட்டவரே!

குண பெரு குன்ற—நற்குணங்களெல்லாம் உடைய பெரிய மலையே! என்னவே, மலைபோலும் பெருமையை உடையவரே! எனக,

என்னின் ஆர்தலும் அகல்தலும் என்னை கொல்—எங்கும் பூரண ஞய் இருக்கிற தேவரீர் அடியேஞேடும் ஓர் அவதாரத்திலே கூடியும் ஓர் அவதாரத்திலே நீங்கியும் நிற்கிறது எது பிரகாரம்? என்று அருளிச் செய்யவேண்டும்,—

உன்னிற்று உன்னி உஞு விடில் பெயர்குவம் என்னும் அதுவே நின் இயல்பு எனின் ஏ—அப்படித் தேவரீர் கூடியும் பிரிந்தும் நிற்கிறது அடியேன் நினைக்கும் பொழுது கூடியும் நினையாதபொழுது நீங்கியும் இருக்கிறதே தேவரீருக்கு முறைமையாம் என்று அருளிச் செய்யில்,—

வியங்கோளாளனும் ஆகி இயங்கலும் உண்டு எனப்படுவை—அப்பொழுது தேவரீர் அடியேனுக்கு ஏவற்ருெழில் செய்கிறவருமாய்ப் பூரணமில்லாத போக்குவரவு செய்யப்பட்ட ஏகதேசி என்று சொல்லவும்படும். அப்படியல்ல, நாம் அசைவறநிற்க நீதானே கூடியும் பிரிந்தும் வருகுவை என்னில்,—

எண் தோள் முக்கண் யாங்கணும் பிரியாது ஓங்கும் நின் நிலையின் யான் வந்து அணைந்து மீள்குவன் ஆயின்—எட்டுத் திருப்புயமும் மூன்று திருநயனமும் உடைத்தாய் எவ்விடமும் நீங்காமல் உயர்ந்த நின்னுடைய பூரணநிலையிலே அடியேன் வந்து கூடி மீளவும் பிரிவேஞமாகில்,—

ஆறு துயர் உற்ருேர் அணி நிழல் நசைஇ வீற்று வீற்று எழுதர வேண்டலும் வெறுத்தலும் இன்றி சாயைக்கு நன்று மன் இயல்பே—வழிநடக்கிறவர்கள் பொடிச் சூட்டிஞல் வருத்தப்பட்ட அவதாரத்து அழகிதாகக் குளிர்ந்த நிழலுக்கு ஆசைப்பட்டுச் சென்று வேண்டத்தக்க இடங்களிலே இருந்து இருந்து போமிடத்து இவர்கள் இங்ஙனம் வந்திருக்கப்பெற்றதே என்கிற பிரியமும், நம்மை

விட்டுப் போனார்கள் என்கிற அப்பிரியமும் அந்த விருக்ஷத்திற்கு இல்லையானாற் போல ஒப்புச் சொல்லாத தேவரீருக்கு உண்டான முறைமையும் நன்று,—

அனையை ஆகுவை நினைவரும் காலை—தேவரீர் சர்வஞ்ஞன் என்று இருக்கும் அவதாரத்தும் அங்ஙனம் அருளிச் செய்ததே தாம்; விசாரிக்குமிடத்து அப்படியல்ல, நீயும் நாமும் போக்குவரவின்றி நின்றநிலை அதனிலே நீ நினைக்கும்பொழுது நாம் பிரகாசித்தும் நீ நினையாதபொழுது மறைந்தும் நிற்போம் என்னில்,—

இ நிலை அதனின் ஏழையேற்கு இரங்கி நின்னை வெளிப்படுத்து ஒளிப்பை நீயேல் - இப்பொழுது இங்ஙனம் நின்ற நிலைதன்னில் கொச்சையாய் இருக்கப்பட்ட அடியேனுக்காகக் கிருபை சனித்து அடியேனிடத்திலே எழுந்தருளி மீளவும் மறைந்து நிற்குமாயின்,—

அருள் மாறு ஆகும் பெரும—தம்பிரானே! தேவரீர் அநுக்கிரகவான் என்கிறதற்கு மாறுபாடு உண்டாம்; அஃது அன்றியும் — அப்படியன்றியும்,—

நின் பெற்றவர்க்கும் உற்பவம் உண்டு எனும் சொல் பெறும்—அப்படி அநுக்கிரகவானல்ல என்கிற தன்றியும் தேவரீர் திருவடியை அடைந்தவர்களுக்கு மீளவும் சனனம் உண்டு என்கிற சொல்லையும் உடைத்தாயிருக்கும்,—

அஃது இ தொல் உலகு இல்லை-அப்படி அநாதியே தொடங்கித் தேவரீர் திருவடியைப் பெற்ற பெரியோர் என்று சிலர் உண்டாகப் போகிறதும் இல்லை; ஆகையால்,—

அ அ அமைவும்—அடியேன் விண்ணப்பம் செய்யும் அந்தந்த நிறைவும்,—

சோர்வும் மயர்வு அற—அடியேனுக்கு மயக்கமும் தீரத்தக்கதாக,—

சொல்லில்—தேவரீர் அருளிச் செய்யில்,—

சொல் எதிர் சொல்லா சொல்லே சொல்லுக — அடியேன் மறுத்து எதிர் உத்தரம் விண்ணப்பம் செய்யாதபடி அருளிச் செய்ய வேண்டும் ,—

சொல் இறந்தோயே—வாக்கினால் உச்சரித்தற்கும் அப்பாற் பட்டதம்பிரானே ! என்பதாம்.

(கருத்து) அவ்வவ்விடத்திலே சிவன் நிறைந்திருக்கிறதும், ஆன்மா பொருந்தியிருக்கிறதும் எப்படி ? என்னில் :—

1. உடலும் உயிரும் போலும், கண்ணும் ஆதித்தனும் போலும், ஆன்மாவும் ஆன்மஞானமும்போலும் விட்டு நீங்காமற் பொருந்தியிருக்கும். அப்படியிருக்க விட்டும் பற்றியும் வருவானேன் ? என்னில், அநாதியே மலசம்பந்தன் ஆகையாலே நீ நினைத்த இடத்திலே பிரகாசிப்போம் நினையாத இடத்திலே நீங்கி நிற்போம் என்று திருவுளம்பற்றினது.

2. விட்டுநீங்காத பரிபூரண நிலையிலே ஆன்மா வந்து பொருந்தி நீங்குவன் என்று சொன்னது மலபோதம் நீங்கின இடத்திலே சிவனைப் பொருந்துவன் என்றும், போதம் மேலிட்ட காலத்திலே சிவனை இழந்து நிற்பன் என்றும் சொன்னது.

3. ஏழையாயுள்ள அடிமைக்கு இரங்கி அநுக்கிரகம் பண்ணி நிற்போம் என்றது, பத்தியினாலே வழிபடுகிற அடியார்களுக்கு மனோபீஷ்டம் தீர்த்து நீங்கி நிற்போம் என்று திருவுளம் பற்றினது. ஆகையாலே, விட்டும் பற்றியும் வருகிறது மூன்று பிரகாரமாகத் திருவுளம்பற்றினதும் கண்டு கொள்க.

உன்னிற்று உன்னி உறைவிடில் பெயர்குவம் என்றும் அதுவே நின் இயல்பு எனினே என்பதற்குத் தேவரீர் கூடியும் பிரிந்தும் நிற்கிறது அடியேன் நினைக்கும்பொழுது கூடியும், நினையாதபொழுது நீங்கியும் இருக்கிறதே தேவரீருக்கு முறைமை என்று பொருள் கூறியதற்குப் பிரமாணம் :— தேவாரம் : பன்னில் ஊறும் பழத்

திலும் இன்சுவை, என்னில் ஊறி எனக்கே களிதரும், உன்னில் உன்னும் உறுவிடில் விட்டிடும், என்னுள் ஈசன் இருந்த இயற்கையே" என்பது கண்டுகொள்க. 'எண்டோள் முக்கண் யாங்கணும் பிரியா, தோங்கிநின் நிலையின் யான்வந் தணைந்து, மீள்குவன் ஆயின்' என்பதற்கு எட்டுத் திருப்புயங்களும் மூன்று திருநயனமும் உடைத்தாய் எவ்விடமும் நீங்காமல் உயர்ந்த நின்னுடைய பூரண நிலையிலே அடியேன் வந்து கூடி மீளவும் பிரிவேனுமாகில் என்று பொருள் கூறியதற்குப் பிரமாணம்:— சிவஞானபோதம்: "ஐம்பொறியின் அல்லலெனும் அந்ததர சிவனை, ஐம்பொறியை விட்டங்கணை சகலன் — ஐம்பொறியின், நீங்கான்நீர்ப் பாசிபோல் நீங்கிமல கன்மம் வரின், நீங்கானை நீகுறு நினைந்து." எனவும்; "ஊசல்கயிறற்றால் தாய்தரையே யாம்" எனவும்; ஒழிவிலொடுக்கம்: "போதம் பதைப்பறவே பூரணமாம் பூரணமும், போதம் பதைத்தெழலே பொய்யாகும்" எனவும் கண்டுகொள்க.

இந்நிலையதனின் எழையேற்கிரங்கி நின்னை வெளிப்படுத்து ஒளிப்பை நீயேல் என்பதற்கு இப்பொழுது இங்ஙனம் நின்ற நிலை தன்னில் கொச்சையாய் இருக்கப்பட்ட அடியேனுக்காகக் கிருபை செனித்து அடியேனிடத்திலே எழுந்தருளி மீளவும் மறைந்து நிற்குமாயின் என்று பொருள் கூறியதற்குப் பிரமாணம்:— சித்தியார்: "இருஞ்சுரபிக் கெங்கும், உருக்காண வொண்ணாத பான் முலைப்பால் விம்மி ஒழுகுவது போல் வெளிப்பட் டருளுவன் அன்பர்க்கே." என்பது கண்டுகொள்க.

இங்ஙனம் தத்துவாதீதனாய் இருக்கிற தேவரீர் அடியேனுக்கு இந்த மாயா கருவிகளை உண்டாக்கி அடியேன் அதனோடும் கூடியிருந்தும் கூடாமல் நின்றும் வருகைக்கு வினா மேல் அருளிச்செய்கின்றது.

நேரிசைவெண்பா

**இறந்தோய் கரணங்கள் எல்லாம் எனக்குச்**
**சிறந்தோய் எனினுமெய்த் தேவே !—பிறந்துடனும்**

**காயம் கொளவும் கொளாமலும் கண்டதுநீ**
**ஆயன்கொல் பாதவத் தற்று.** (13)

என்பது :— இறந்தோய் கரணங்கள் எல்லாம்—கருவிகாரணங்களைக்கொண்டு அறியும் அறிவுக்கு எட்டாமல் அகன்று நிற்கிற நீ,—

எனக்கு சிறந்தோய் – அவையிற்றை எனக்கு உண்டாக்கிஞய்,—

எனினும்—அப்படி உண்டாக்கவும்,—

மெய் தேவே பிறந்து உடன் ஆம் காயம் கொளவும் கொளாமலும் கண்டது நீ—மெய்கண்டதேவரே! அடியேன் பிறந்து உடனுய் மெய் போலப் பொருந்தியிருக்கிற சரீரம் இது பொய் என்று பொருந்தாமலும் பண்ணினது தேவரீர்,—

ஆயன் கொல் பாதவத்து அற்று—இடையன் வெட்டின மரம் போலப் பாதி பச்சையும் பாதி உலர்ந்ததும்போல மெய்யாய் இருந்த சரீரம் பொய் என்று அறிவித்து நீங்கியும் நீங்காமலும் இருந்தது என்பதாம்.

சரீரத்திலே பொருந்தியிருக்கையிலே காய நீக்கம் எப்படி? என்னில், சரீரம் பொய் என்று அறிவித்துத்தீக்ஷாக்கிரமங்களினுலே மலங்களைப் போக்கினபடியினுலேயும், அருளிலே பொருந்தின படியினுலேயும் சிவனிடத்திலே சம்பந்தம் இல்லாமல் காயத்திலே சம்பந்தம் இல்லை. இதற்குப் பிரமாணம் :—சித்தியார் : "தெரிவரிய மெய்ஞ்ஞானம் சேர்ந்தவாறே சிவம்பிரகாசிக்கும் இங்கே சீவன் முத்தனுகும், உரியமலம் ஔடதத்தால் தடுப்புண்ட விடமும் ஒள்ளெரியின் ஒளிமுன்னர் இருளும் தேற்றின், வருபால்சேர் நீர் மருவு கலங்கலும் போலாகி மாயாதே தன் சத்தி மாய்ந்து காயம், திரியுமள வும்முளதாய்ப் பின்பு காயம் சேராத வகைதானும் தேயுமன்றே" என்பது கண்டுகொள்க. மெய்போல் இருந்த சரீரம் பொய் என்றதற்குப் பிரமாணம் :— சித்தியார் : "மண்டனில் வாழ்வும் வானத் தரசயன் மாலார் வாழ்வும், எண்டரு பூதபேத யோனிகள் யாவும் எல்லாம், கண்டஇந் திரமாசாலம் கனக்கழு

*திரதம் காட்டி, உண்டுபோல் இன்றும் பண்பின் உலகினை அசத்தும் என்பர்" எனவும்; "கணத்திடைத் தோன்றி மாயும் காயமென் றறிந்தொ ருக்கால், வணக்குறீர் ஆனை என்றும் வானவர் வணங்க வைப்பன்" எனவும்; தேவாரம் : "வாழ்வாவது மாயம் இது மண் ணாவது திண்ணம்" எனவும்; "இன்றுளேன் நாளை இல்லேன் என்செய்வான் தோன்றினேனே" எனவும் வரும் ஏதுக்களைக் கண்டுகொள்க.* (13)

அடியேனுக்குப் புண்ணியபாவங்கள் உண்டு என்கைக்கு வழி ஏது? என்னும் வினு மேல் அருளிச்செய்கின்றது.

நேரிசையாசிரியப்பா.

அற்றதென் பாசம் உற்றதுன் கழலே
அருட்டுறை யுறையும் பொருட்சுவை நாத!
வேறென் றிருந்த என்னை யான்பெற
வேறின்மை கண்ட மெய்கண்ட தேவ!
5 இருவினை யென்ப தென்னைகொல்? அருளிய
மனமே காயம் வாக்கெனும் மூன்றின்
இதமே அகிதம் எனுமிவை ஆயில்
கணத்திடை அழியும் தினைத்துணை யாகா
காரணம் சடமதன் காரியம் அஃதால்
10 ஆரணங் காம்வழி அடியேற் கென்னைகொல்?
செயலென தாயினும் செயலே வாரா
தியமன் செய்தி யதற்கெனின் அமைவும்
பின்னையின் றுகும் அன்னது மிங்குச்
செய்திக் குள்ள செயலவை அருத்தின்
15 மையல்தீர் இயமற்கு வழக்கில்லை மன்ன!
ஒருவரே யமையும் ஒருவா ஒருவற்கு
இருவரும் வேண்டா இறைவனும் நின்றனை
நின்னது கருணை சொல்லள வின்றே
அமைத்தது துய்ப்பின் எமக்கணை வின்றும்
20 உள்ளது போகா தில்லது வாரா

துள்ளதே யுள்ள தெனுமுறை யதனல்
கொள்ளும் வகையால் கொளுத்திடு மாயின்
வள்ளன் மையெலாம் உன்னிட அமையும்
ஈய வேண்டும் எனும்விதி யின்றும்
25 ஆயினும் என்னை அருந்துயர்ப் படுத்த
நாயி னேற்கு நன்றுமன் மாயக்
கருமமும் கரும பந்தமும்
தெருள அருளு சிவபெரு மானே! (14)

என்பது: *அற்றது என் பாசம் உற்றது உன் கழல் ஏ-தேவரீர் அநுக்கிரகத்தினலே அடியேனுக்கு உண்டாயிருக்கப்பட்ட பாச பந்தங்களை நீக்கினதும் தப்பாது, உம்முடைய திருவடியிலே கூடினதும் தப்பாது,—*

*அருட்டுறை உறையும் பொருள் சுவை நாத – திருவருட்டுறை ஆகிய திருவெண்ணெய் நல்லூரிலே எழுந்தருளியிருக்கப்பட்ட அடியேனுக்கு இனிமைப்பயனாய் இருந்துள்ள தம்பிரானே!*

*வேறு என்று இருந்த என்னை யான் பெற வேறு இன்மை கண்ட மெய்கண்ட தேவ – தேவரீரை விட்டு அந்நியமாய் இருப்பன் என்று கண்டிருந்த அடியேனை அடிமை என்கிற முதலும் கெடாமல் தேவரீரை விட்டு அந்நிய மாகாத முறைமையும் கடாக்ஷித்தருளின மெய்கண்டநாதரே!*

*இரு வினை என்பது என்னை கொல் – அடியேனுக்குப் புண்ணிய பாவம் உண்டு என்றது ஏது காரணம் கொண்டு?,—*

*அருளிய மனமே காயம் வாக்கு எனும் மூன்றின் இதமே அகிதம் எனும் இவை ஆயில் – தேவரீர் அருளிச் செய்யப்பட்ட மனத்தின் நினைவாலும் வாக்கின் சொல்லாலும் காயத்தின் தொழிலாலும் உண்டாகப்பட்ட விருப்பு வெறுப்பினலே இருவினையாகிய புண்ணிய பாவங்கள் உண்டாமாகில்,—*

*கணத்திடை அழியும் நினை துணை ஆகா – அப்படி உண்டாகப்பட்ட நினைவும் சொல்லும் தொழிலும் தோன்றினவுடனே அழிந்துபோம், அவையிற்றுக்கு ஒருநினை அளவு கண்டிப்பும் இல்லையாம்: அன்றியும்,—*

காரணம் சடம் அதன் காரியம் அஃதால் — அந்த மனவாக்குக் காயங்களாகிய கன்மத்தின் காரணம் சடமாய் இருப்பது ஒன்று ; அதன் காரியங்களும் அப்படிச் சடமேயானால் ,—

ஆர் அணங்கு ஆம் வழி அடியேற்கு என்னை கொல் – அப்படிச் சடமாய் இருக்கப்பட்ட கன்மகாரியங்கள் அடியேன் மேல் எடுக்கிற சனனங்களிலே வந்து பொருந்தி வருந்துகைக்குச் செயலுண்டாம் வழி எதுதான் ?

அப்படி அந்தக்கன்மங்கள் சடமாய் இருந்தாலும் நீ அறிவாயுள்ளவன் ஆகையாலே உன்னோடு கூடும் அவதாரத்தில் செயல் உண்டாயிருக்கும் ,—

செயல் எனது ஆயினும் செயலே வாராது — அப்படி அடியேனுக்குச் செயல் உண்டென்று சொல்லுகைக்கு வழியில்லை ; அப்படி அறிவுண்டாமாகில் அடியேன் இச்சைப்படியே முடியக் கண்டதுமில்லை, அன்றியும் ,—

இயமன் செய்தி அதற்கு என்–(அடியேனுக்கு அப்படி வேண்டின காரியங்கள் செய்து கொள்ளுகிறதற்குச் செயல் உண்டாமாகில்) அடியேனுக்கு இயமதண்டம் உண்டாக்கத்தக்க பொல்லாங்குகள் செய்துகொள்வதில்லை; அது அன்றியும்,—

நின் அமைவும் பின்னை இன்று ஆகும்–(அப்படி அடியேனுக்கு வேண்டும் காரியம் செய்து கொள்ளத்தக்க செயலுண்டாமாகில்) தேவரீர் செய்விக்கிறதும் இல்லையாய் முடியும்,—

அன்னதும் இங்கு செய்திக்கு உள்ள செயல் அவை அருத்தின் —அப்படித்தேவரீர் செய்விக்கிறதும் இப்பொழுது அடியேன் செய்த கன்மத்துக்குத்தக்கது மேலைக்குப் புசிப்பும் ஆகில்,—

மையல் தீர் இமயற்கு வழக்கு இல்லை மன்ன—தம்பிரானே! மயக்கமற்ற இயமன் அடியேனைத்தண்டப்படுத்துகைக்கு வழக்கில்லையாம் அப்படியானாலும், நீ செய்ததற்குத்தக்கது நாமும் செய்விப்போம், இயமனும் தண்டப்படுத்துவன் என்னில்,—

ஒருவரே! அமையும் ஒருவா ஒருவற்கு இருவரும் வேண்டா—ஒப்பற்ற தனிமுதலாய் உள்ளவரே! அடியேன் ஒருத்தனுக்கு ஒருத்தரே அமையும், தேவரீரும் இயமனும் கூடித்தண்டிக்க வேண்டுவதில்லை; ஆகையால்,—

இறைவனும் நின்றனை—சர்வமும் தேவரீர் செயற்படும் என்று இருக்குமிடத்தும் வேறேயும் ஒருவரைக் கூடித்தேவரீர் செயற்படுத்துகில் தேவரீர் சர்வகர்த்தா என்கிறதும் இன்றே நின்றது, அது ஏன்? என்று கேட்டருளுகில்,—

நின்னது கருணை சொல்லளவு இன்றே—தேவரீர் காருண்ணியத்தின் பகுதியை அடியேனால் விண்ணப்பம் செய்து அளவுபடுத்தத்தக்கது அல்லவே! அப்படியிருக்க,—

அமைத்தது துய்ப்பின் எமக்கு அணைவு இன்றாம், உள்ளது போகாது இல்லது வாராது, உள்ளதே உள்ளது எனும் உரை அதனால்—அடியேனுக்கு உண்டாகியகன்மம் யாதொன்றுஉண்டு அது போகாது, இல்லாத கன்மங்கள் வாரா, ஆகையால் யாதொன்று ஊழிலே உண்டாக்கப்பட்டது அதுவே இப்பொழுது உண்டாம் என்று தேவரீர் அருளிச்செய்த திருவாக்கினால் அடியேனுக்கு உண்டான பிராரத்தம் புசிக்கிற தொழிய மேலைக்கு உற்பத்தியாக ஆகாமியம் உண்டாகைக்கு வழக்கு இல்லையே,—

கொள்ளும் வகையால் கொளுத்திடும் ஆயின்—பிராரத்தம் புசிக்குமிடத்து ஆகாமியம் உண்டாம் என்று அருளிச்செய்யில்,—

வள்ளன்மை எலாம் உன்னிட அமையும்—தேவரீருக்கு உண்டாகிய வளப்பாடுகள் எல்லாம் நினைந்திருந்தாற் போதும்; அன்றியும்,—

ஈய வேண்டும் எனும் விதி இன்று ஆம்—அப்படிப்பிராரத்தம் புசிக்குமிடத்து ஆகாமியம் ஏறுமாகில் கொடுத்துப் புண்ணியம் பெறவேணும் என்று நூல்களை விதிக்க வேண்டுவதில்லையாம்,—

ஆயினும்—அடியேன் கேட்ட வினவுக்குத் தேவரீர் புலப்பட அருளிச் செய்ததில்லையாகிலும் இன்னமும் தேவரீர் அருளிச் செய்யாமல் அடியேன் அறியும் பகுதியில்லை,—

'என்னை அரு துயர் படுத்த நாயினேற்கு நன்று மன் மாய கருமமும் கருமபந்தமும் தெருள அருளு சிவபெருமானே' அந்நுவயம்: என்னை அரு துயர் படுத்த கருமமும் கரும பந்தமும் நாயினேற்கு நன்று மன் மாய தெருள அருளு சிவபெருமானே—அடியேனுக்கு அரிய துக்கங்களை உண்டாக்கப்பட்ட கருமம் ஆகிய புண்ணியபாவங்கள் உண்டாகிறதும், அந்தப் புண்ணியபாவங்கள் அநுபவிக்குமிடத்துச் செனனத்துக்கு ஏதுவாகிய ஆகாமியகன்மம் ஆன கருமபந்தங்கள் உண்டாகிறதும் நாயாயிருக்கப்பட்ட அடியேனுக்குத் தேவரீர் திருவுளம் வாழ்ந்தருளி விளங்க அருளிச் செய்தருளவேணும், சிவமுதலாயிருக்கப்பட்ட தம்பிரானே! என்பதாம்.

'அருளிய மனமே காயம் வாக்கு எனும் மூன்றின் இதமே அகிதம் எனும் இவை ஆயில்' என்பதற்குத் தேவரீர் அருளிச்செய்யப்பட்ட மனத்தின் நினைவாலும், வாக்கின் சொல்லாலும், காயத்தின் தொழிலாலும் உண்டாக்கப்பட்ட விருப்பு வெறுப்பினாலே இருவினையாகிய புண்ணியபாவங்கள் உண்டாமாகில் என்று பொருள் கூறியதற்குப் பிரமாணம்:— சிவப்பிரகாசம்: "உற்ற தொழில் நினைவுரையில் இருவினையு முளவாம்" எனவருவது கண்டுகொள்க.

இருவினையாகிய மனவாக்குக்காயங்களினாலே தோன்றப்பட்ட கன்மமும் சடம், அதன்காரணமும் சடம்; ஆகையால், அந்தக்கன்மங்கள் சனனமரணத்திலேவந்து பொருந்துகைக்கு வழி ஏது? என்று கேட்க, அதற்கு அறிவாய் உள்ள ஆன்மாவோடு பொருந்தின இடத்திலே செயல் உண்டு என்ன, அப்படிச்செயல் உண்டாகில் இயம தண்டம் வருவானேன்? என்ன, அதுவும் நீ செய்த கன்மத்துக்கு ஏற்றபடிசெய்வோம் என்ன, அதற்குத்தேவரீர் போதும் இயமனைக் கொண்டு தண்டிக்கவேணுமோ? என்ன, இயமனும் தண்டிப்பான் நாமும் தண்டிப்போம் என்றதற்குப் பிரமாணம்:—சிவப்பிரகாசம்: "படைத்ததொருபடி" என்ற விருத்தம் முழுவதும். போற்றிப் பஃறொடை: "தான்மாள, வெற்றிக் கடுந்தூதர் வேகத் துடன்வந்து, பற்றித்தம் வெங்குருவின் பாற்காட்ட—இற்றைக்கும், இல்லையோ

பாவி பிறவாமை என்றெடுத்து, நல்லதோர் இன்சொல் நடுவாகச்- சொல்லியவர், செய்திக்குத் தக்க செயலுறுத்து வீரென்று, வெய் துற் றுரைக்க விடைகொண்டு-மையல்தரும், செக்கி னிடைத்திரித தும் தீவாயி லிட்டெரித்தும், தக்கநெருப் புத்தூண் தழுவுவித்தும்- மிக்கோங்கும், நாராசம் காய்ச்சிச் செவிமடுத்தும் நாவரிந்தும், ஈரா வுன் ஊனைத்தின் என்றடித்தும்-போரமல், அங்காழ் நரகத் தழுத் துவித்தும் பின்னும்தம், வெங்கோபம் மாறாத வேட்கையராய்-இங் கொருநாள், எண்ணிமுதற் காணாத இன்னற் கடுநரகம், பன்னெடு நாள் செல்லும் பணிகொண்டு-முன்நாடிக், கணடு கடன்கழித்தல் காரியமாம் என்றெண்ணிக், கொண்டு வரும்நோயின் குறிப்ப றிவார்-மண்டெரியில், காய்ச்சிச் சுடவறுக்கக் கண்ணூரிக்க நன்னி தியம், ஈய்த்துத்தாய் தந்தைதமர் இன்புறுதல்" போல அப்படிச் செய்கிறதும் கருணையே எனவும் வரும் ஏதுக்களைக் கண்டு கொள்க. 'கொள்ளும் வகையாற் கொளுத்திடு மாயின்' என்பதற்குப் பிராரத் தம் புசிக்குமிடத்து ஆகாமியம் உணடாம் என்று அருளிச்செய்யில் என்று பொருள் கூறியதற்குப் பிரமாணம்: சிவப்பிரகாசம்: "மேலைக்கு வருவினையே தென்னில் அங்கண் விருப்புவெறுப் பென வறியவ் வினையு மெல்லாம்,மூலத்த வினைப்பயில்வாம் என்னின நாமேல் முற்றியதன் பயனுக்கு முளைக்கு மென்பர்" எனவருவது கண்டுகொள்க. (14)

## நேரிசை வெண்பா.

**மானமரும் செங்கை மதில்வெண்ணெய் வாழ்மன்ன !**
**போனவினை தானே பொருந்துமோ ? – யானதனில்**
**ஆவனே ? ஆக்காய் அமலனும் நின்னருள்தான்**
**தேவனே ! யாதுக்கோ ? தேர். (15)**

என்பது: மான் அமரும் செங்கை மதில் வெண்ணெய் வாழ் மன்ன – செந்தாமரை மலர் போன்ற ஸ்ரீ அத்தத்திலே மான்மறி யைத்தரித்துக் கொண்டு திருமதிலின் உயர்ச்சியாலே சிறப்பினை யுடைத்தாகிய திருவெண்ணெய் நல்லூரிலே எழுந்தருளியிருக்கப் பட்ட தம்பிரானே !

*போன வினை தானே பொருந்துமோ — முன்செனனத்திலே அடியேன் செய்த புண்ணிய பாவங்களான வினைகள் தானே வந்து அடியேனைக் கூடுமோ ?*

*யான் அதனில் ஆவனே — அடியேன்தான் அந்த வினைகளைக் கூடுவேனே ?*

*ஆக்காய் —இவை இரண்டும் இன்றித் தேவரீர் கூட்டி முடியாத பொழுது ,—*

*அமலன் ஆம் நின் அருள் தான் தேவனே யாதுக்கோ தேர் — நின்மலராகிய தேவரீருடைய அருளானதுதான் எதுக்கு ? உண்டானதென்று திருவுளத்திலே விசாரித்து அருளிச் செய்தருள வேண்டும் என்பதாம்.*

(கருத்து] *கன்மமும் அநாதி, ஆன்மாவும் அநாதி, சிவமும் அநாதி, ஆகையினாலே : அவரவர் ஆர்ச்சித்த கன்மத்தைக் கர்த்தா கூட்டி முடிப்பன் என்க. இதற்கு உதாரணம் :— சிவஞானபோதம் : "அவ்வினைஞர் தாஞ்சென்றங், கவ்வினையைக் காந்த பசாசம்போல் — அவ்வினையைப், போாமல் ஊட்டும் பிரானின் றுகராரேல், ஆர்தாம் அறிந்தணைப்பார் ஆங்கு" என்பது கண்டுகொள்க.*
(15)

இங்ஙனம் சொல்லப்பட்ட கன்மங்கள் தேவரீர் தீக்ஷைகளினாலே சுத்திபண்ணியிருக்கவும் மீளவும் புசிக்கைக்கு வழி ஏது? என்னும் வினா மேல் அருளிச் செய்கின்றது.

நேரிசை ஆசிரியப்பா.

**தேரா துரைப்பன் தெருமர லுளத்தொடு**
**பேரா தருளுதல் பெரியோர் கடனே**
**நின்னைக் கலப்ப தென்னுண் மையெனின்**
**நின்னது நேர்மை சொல்மனத் தின்றே**
**5 எழுவகைத் தாதுவின் எழுதுளை இரண்டும்**
**பெருமுழைக் குரம்பையிற் பெய்தகத் தடக்கி**
**நீக்கி என்றனைப் போக்கற நிறுத்தி**

இச்சை முதலிய எழுப்பி நடத்திடும்
விச்சை சாலவும் வியப்பது நிற்க
10 வாக்கும் மனமும் போக்குள தனுவும்
சொல்லும்நினைவும் செய்யும செயலும்
நல்லவும் தீயவும் எல்லாம் அறிந்து
முறைபிற ழாமற் குறைவுநிறை வின்றுய்க்
காலமும் தேசமும் மாலற வகுத்து
15 நடுவுநின் றருத்தலின் நடுவனு குதியே
சான்ருேர் செய்தி மான்றிருப் பின்றே
சாலார் செயலே மாலா குவதே
அத்துவா மெத்தி அடங்கா வினைகளும்
சுத்திசெய் தனையே ஒத்தகன் மத்திடை
20 நீங்கின தென்னை ஊங்கூழ் வினைகளும்
ஆங்கவை அருத்துவ தாரைகொல்? அதனுல்
கருமம் அருத்தும் கடனது இன்ரும்
தருமம் புரத்தல் பெருமைய தன்றே
கண்ணினுள் மணிய! கருத்தினுள் கருத்த!
25 வெண்ணெய் வேந்த! மெய்கண்ட தேவ!
இடர்ப்படு குரம்பையுள் இருத்தித்
துடைப்பதில் லாஅருள் தோன்றிடச் சொல்லே. (16)

என்பது: *தோராது உரைப்பன் தெருமரல் உளத்தொடு — தேவரீர் சந்நிதியில் ஒரு வினு விசாரியாமல் விண்ணப்பம் செய்கின் றேன் அடியேன் விதனத்தை யுற்றவன் ஆகையினுலே; அன்றியும்,—*

*போாது அருளுதல் பெரியோர் கடனே — பேதையாய் இருக் கப்பட்டவர்கள் தங்கள் தாகத்தின் மிகுதியாலே தங்களுக்கு வேண் டின தொன்றை எழுந்தது புத்தியாக விண்ணப்பம் செய்தாலும் அவர்கள்தாகம் கண்டு உடனே கடாக்ஷித்தருளுகிறது பெரியோர் களுக்கு முறைமை ஆகையாலும் விசாரியாமல் விண்ணப்பம் செய் தேன் அது ஏது? என்று கேட்டருளுகில்,—*

*நின்னை கலப்பது என் உண்மை எனின் — தேவரீரைக்கூடி அநுபவிக்கிறது அடியேனுடைய அற்ப போதமாம் என்று தேவரீர் திருவுளம் பற்றுகில்,—*

நின்னது நேர்மை சொல் மனத்து இன்றே — தேவரீருடைய நுட்பத்தை விசாரிக்கு மிடத்து வாக்குக்கும் மனத்துக்கும் எட்டப் பட்டதல்லவே! அப்படியிருக்கிற தேவரீருக்குள்ளே அடங்கி யிருக்கப்பட்ட அடியேனைத் தேவரீர்,—

எழுவகை தாதுவின் எழு தூளை இரண்டும் பெரு முழை குரம்பையில் பெய்து அகத்து அடக்கி — நரம்பு எலும்பு மூளை தசை தோல் இரத்தம் சுக்கிலம் என்னப்பட்ட தாதுக்கள் ஏழும் கண் மூக்குச் செவி உபத்தம் என்னப்பட்ட அற்பத்துவாரங்கள் ஏழும், வாய் அபானம் என்னப்பட்ட பெரியதுவாரம் இரண்டும் ஆகத் துவாரம் ஒன்பதுமாய் இருக்கப்பட்ட சரீரத்திலே இட்டு உள்ளே ஒடுக்கி வைத்து,—

என்றனை போக்கு அற நிறுத்தி நீக்கி — அடியேன் அந்தச் சரீரத்தைவிட்டுப் போகாமலும் நிறுத்தி, அதனை விட்டுப்போம் அவதரத்து விடுவிப்பதும் செய்து,—

இச்சை முதலிய எழுப்பி நடத்திடும் விச்சை சாலவும் வியப்பு — அடியேனுக்கு உண்டாயிருக்கப்பட்ட இச்சா ஞானக் கிரியை களையும் பிரேரிப்பித்துக் காரியப்படுத்துகின்ற வித்தை மிகவும் கொண்டாட்டமாய் இருந்தது,—

அது நிற்க—இங்ஙனம் தேவரீர் செய்தருளின காரியம் அடியே னுலேயோ புகழப்பட்டிருப்பது அது நிற்கட்டும்,—

வாக்கும் மனமும் போக்கு உள தநுவும் சொல்லும் நினைவும் செய்யும் செயலும் நல்லவும் தீயவும் எல்லாம் அறிந்து — அடியேன் வாக்கினுற் சொல்லுகிறதினுலும் மனத்தினுல் நினைக்கிறதினுலும், காயத்தாற் செய்கிற தொழிலினுலும் உண்டாக்கப்பட்ட நன்மை தீமைகளாய் உள்ள புண்ணிய பாவங்கள் எல்லாம் தேவரீர் திரு வுளத்து அடைத்தருளி,—

முறை பிறழாமல் குறைவு நிறைவு இன்றுய் காலமும் தேச மும் மால் அற வகுத்து நடுவு நின்று அருத்தலின் நடுவன் ஆகுதி எ— அடியேன் செய்துவந்த அடைவுக்குத் தவறு வாராமல் அதற்கு

ஏற்றக் குறைச்சலற அந்தப் புண்ணிய பாவங்களை அநுபவிக்கத்தக்க காலங்களையும், அவையிற்றைப் புசிக்கைக்கு இருப்பிடமான தேசங்களையும் மயக்கமற வகுத்து அடியேனையும் அந்தக்கன்மங்களையும் கூட்டித் தேவரீர் நடுவனாக நின்று புசிப்பிக்கையினாலே தேவரீரை நடுவன் என்கிறதும் உண்டே! ஆகையாலே ,—

சான்றோர் செய்தி மான்று இருப்பு இன்றே—நடுவாய் இருக்கப்பட்ட பெரியோர்கள் இயல்புக்கு மயக்கம் உண்டாகாதே,—

சாலார் செயலே மால் ஆகுவதே—சான்றோரல்லாத அறிவீனராய் உள்ளவர்கள் செயல்களே மயக்கம் உண்டாவது: அப்படியிருக்க,—

அத்துவா மெத்தி அடங்கா வினைகளும் சுத்தி செய்தனையே-மந்திரங்கள் பதங்கள் வன்னங்கள் புவனங்கள் தத்துவங்கள் கலைகள் என்று சொல்லப்பட்ட ஆறுவகையாலும் நிரம்பி மிஞ்சிக்கிடக்கிற கன்மங்களை எல்லாம் தீக்ஷைகளினாலே தேவரீர் சோதனை செய்து அடியேனுக்குச் சுத்தி வருத்தினதுண்டே! அது உண்டு என்று அருளிச்செய்யில்,—

ஒத்த கன்மத்திடை நீங்கினது என்னை-அடியேனுக்கு இருவினையொப்பிலே போனது என்ன?

ஊங்கு ஊழ்வினைகளும் ஆங்கு அவை அருத்துவது ஆரை-இவ்விடத்து உண்டான ஊழ் வினைகள் தேவரீர் செய்யப்பட்ட தீக்ஷைகளினாலே சுத்தி செய்தவிடத்து அந்தக் கன்மங்கள் புசிக்கிறது ஆரையாம்? அதனால்,—

கருமம் அருத்தும் கடன் அது இன்றாம்-தேவரீர் சுத்தி செய்தவர்கள் தம்மை என்று அருளிச்செய்யில் தேவரீர் சுத்தி செய்த வழக்கினால் மீளவும் கன்மங்கள் நின்று புசிப்பிக்கைக்குக் கடன் இல்லையாம்? அப்படிப் புசிப்பிக்கும் என்று அருளிச்செய்யில்,—

தருமம் புரத்தல் பெருமையது அன்று ஏ-தேவரீர் தரும கர்த்தா என்று எழுந்தருளியிருக்கிறது பெருமைக் கர்த்தரோ என்று விண்ணப்பம் செய்யப்படும்,—

கண்ணின் உள் மணிய—கண்ணுக்கு மணிபோலக் காட்டாக உள்ளவரே!

கருத்தினுள் கருத்த—அறிவுக்கு அறிவாக உள்ளவரே!

வெண்ணெய் வேந்த—திருவெண்ணெய்நல்லூருக்குக் கர்த்தாவாக உள்ளவரே!

மெய்கண்ட தேவ—மெய்கண்ட நாதரே!

இடர் படு குரம்பையுள் இருத்தி துடைப்பது இல்லா அருள் தோன்றிட சொல் எ—துக்கத்துக்கு ஏதுவாய் உள்ள சரீரத்துக்குள்ளே அடியேனை இருத்திவைத்து அடியேனுக்கு உண்டான கன்மங்களைத் துய்ப்பதாகப் போகாத அந்த அனுக்கிரகத்தை அடியேனுக்கு விளங்க அருளிச்செய்தருளும் என்பதாம்.

(கருத்து) தேவரீரைக் கலந்திருக்கிறது என் உண்மையானல், தேவரீருடைய நட்பமானது வாக்குக்கு எட்டாதது என்று சொல்ல வேண்டுவதில்லையாம். ஏன்? எனில், சிவனும் ஆன்மாவும் எக்காலமும் இடைவிடாமல் இருக்கையிலேயும் ஆன்மா மலத்திலே பற்றினபடியினலே சிவனிடத்திலே கூடி நின்றும் பற்றில்லை ஆகையால் அச் சிவன் பெத்தத்திலும் ஒத்திருப்பர் என்க.

இதற்கு உதாரணம்:— போற்றிப்பஃறெடை: "உள்ளமென்று நீங்கா தொளிததிருந்து தோன்றநின்ற, கள்ளமின்று காட்டும் கழல் போற்றி" என்பது கண்டுகொள்க.

எழுவகைத் தாதுக்களினலும் நவத்துவாரங்களினலும் இந்தச் சரீரத்திலே பொருந்தவைத்துச செனன மரணமும் படுத்தி அடியேனுக்கு உண்டாயிருக்கப்பட்ட இச்சா ஞானக் கிரியைகளையும் பிரேரிப்பித்து நடப்பித்ததும் கொண்டாட்டமாய் இருந்ததென்று சொல்லுவானேன்? என்னில், சிவனைப் பொருந்தியும் சரீர பெந்தத்திலே வைப்பானேன்? என்பதற்கு. அது மல சம்பந்தம் ஆகையாலே மலக்குருடனுக்கு மலம் நீங்கவேண்டி மாயையாகிய கோல் கொடுத்தது என அறிக என்க. இதற்குப் பிரமாணம்:—போற்றிப்பஃ

றொடை : "கட்புலனால் காணார்தம் கைக்கொடுத்த கோலேபோல், பொற்புடைய மாயைப் புணர்ப்பின்கண்" எனவருவது கண்டு கொள்க. மனவாக்குக் காயங்களினாலே ஆர்ச்சிக்கப்பட்ட புண்ணியபாவங்களைத் தேவரீர் திருவுள்ளத்திலே அடைத்தருளிக் கன்மங்களை நடுவனாக நின்று புசிப்பிக்கையினாலே நடுவன் என்று சொல்லப்பட்டிருக்கவும் பெரியோர்கள் இயல்புக்கு மயக்கமும் உண்டாகாதே! ஆறு அத்துவாவும் சுத்திபண்ணினதுண்டே! கன்ம சமத்துவத்திலே போனது என்ன? எனில், கன்ம சமத்துவம் வந்தவிடத்துச் சத்திநிபாதம் உண்டாய் அதினாலே கர்த்தா ஆசாரிய மூர்த்தமாகத் திருமேனி கொண்டுவந்து தீக்ஷாக்கிரமங்களினாலே அத்துவாசுத்தி பண்ணி மலத்தைப் போக்கி இரட்சிப்பன் என்கிறதற்குப்பிரமாணம் :— சித்தியார் பரபக்கம் : "அநாதிமுத்தனாய்ப் பரனாய் அசலனாய் எல்லா அறிவு தொழில் அநுக்கிரகம் உடையவரன் கன்ம, நுனாதிகமற் றொத்தவிடத் தேசத்தி நிபாதம் நுழைவித்து மலங்களெல்லாம் நீங்க நோக்கி, மனாதிகா ணங்களெல்லாம் அடக்கித் தன்னை வழிபடுதல் லறிவருளி மாக்கருணைக் கையால், இனதபிறப் பினில்நின்றும் எடுத்து மாறா இன்பமுத்திக் கேவைப் பன் எங்கள் முத்தி இதுவே." எனவும்;

போற்றிப்பஃறொடை : "நாடும்வினை எல் லை இரண்டும் இடையொப்பில்—பல்பிறவி, அத்தமதில் அன்றோ அளவென்று பார்த்திருந்து, சத்தி பதிக்கும் தரம்போற்றி—முத்திதரும், நன்னெறி விஞ் ஞானகலர் நாடுமலம் ஒன்றினையும், அந்நிலையே உண்ணின் றறுத்தருளிப்—பின்அன்பு, மேவா விளங்கும் பிரளயா கலருக்குத், தேவாய் மலகன்மம் தீர்த்தருளிப்—பூவலயம், தன்னின்று நீங்காச் சகலர்க் கவர்போல, முன்னின்று மும்மலம்தீர்த் தாட்கொள்கை" எனவும் வருவது கண்டு கொள்க. இப்படிச் சுத்திபண்ணியிருக்குமிடத்தும் பிராரத்தமாகிய வினை புசிக்க வந்தது யாரை? சுத்திபண்ணின ஆன்மாக்களை; அதெப்படி? என்னில், சஞ்சிதம் ஆசாரியர் ஞான திருட்டியினாலும், ஆகாமியம் ஆசாரியர் வைத்த ஞானத்தினாலும், பிராரத்தம் சரீரத்தோடேயும் நீங்கும். இதற்குப் பிரமாணம்:-

சிவப்பிரகாசம் : "நீங்குற மாயை சேரா வகைவினை திரிவிதத் தால், நீங்கிட" எனவும்; திருவாதவூரருக்கு அநுக்கிரகம் பண்ணி னதில் : "விரிந்த சஞ்சித வினைகள் அன்பில்நாம் விழிக்க வெந்தது விரும்புமிப் பிறப்பில், புரிந்த வல்வினை உடலுடன் அகலும் புந்தி சேர் அருள்வரு வினைபோக்கு" எனவும் ; திருவருட்பயன் : "ஏன்ற வினையுடலோ டேகுமிடை ஏறுவினை, தோன்றில் அருளே சுடும்" எனவும்; சித்தியார் : "அரும்பருவம் அடைதலுமே ஆசான் ஆகித், தோன்றிநுக ராதவகை முற்செய் கன்மத் துகளறுத்தங் கத்துவா தொடக்கறவே சோதித், தேன்றவுடற் கன்மமநு பவத்தினால் அறுத்திங் கினிச்செய்கன்ம மூலமலம் ஞானத்தால் இடிப்பன்" எனவும் சொன்னது கண்டுகொள்க. ஆகையினாலே, ஆசாரியர் கடாக்ஷத் தினாலே மோக்ஷத்தை அடைந்தாலும் பிராரத்தம் புசிக்கும் அளவும் சரீரம் நிற்கும் என்றது.

ஆனால், ஞானவான்கள் புசிக்கிறது பிராரத்தமுமாய் அவர்கள் தேகமும் பிராரத்ததேகமானால் அவர்களை அர்ச்சனை பண்ணின தினாலேயும், நிவேதித்ததினாலேயும் ஆன்மாக்கள் கதியடைவார்கள் என்று சொல்லவேண்டுவதில்லை : என்னின், அவர்கள் போகம் சிவனே ஏற்றுக் கொள்கையினாலே சிவபோகம் ஆச்சுது. மாயா பதார்த்தம் சிவபோகம் ஆமோ? என்னின், மாயாபதார்த்தம் சுத்திப்பட்டு மந்திரமயமாம்; மந்திரமும் ஞானதிருஷ்டியினாலே பார்க்கப்பட்டு ஆன்மாவைச் சிவன் உடலாகக் கொண்டு புசிக்கையி னாலே சிவபோகம் ஆச்சுது. இதற்குப் பிரமாணம் :— உண்மை நெறிவிளக்கம் : "பாதகங்கள் செய்திடினும் கொலைகளவு கள்ளுப் பயின்றிடினும் நெறியல்லா நெறிபயிற்றி வரினும், சாதிநெறி தப்பி டினும் தவறுகள் செய் திடினும் தனக்கெனவோர் செயலற்றுத் தானதுவாய் நிற்கின், நாதனவன் உடலுயிராய் உண்டுறங்கி நடந்து நானுபோ கங்களையும் தானாகச் செய்து, பேதமற நின்றிவனைத் தானாக்கி விடுவன் பெருகுசிவ போகமெனப் பேசும்நெறி இதுவே." எனவருவது கண்டுகொள்க. அவர்கள் திருமேனி பிராரத்த தேக மல்ல என்றதற்குத் திருட்டாந்தம் :—"திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் கடாக்ஷம் பெற்ற, கலியாணத்துக்கு வந்த ஞாதாக்கள்

*திருமேனி அடங்கலும் ஞானத்திலே பொருந்துகையினுலும்; அப்பர்சுவாமிகள் திருமேனி சர்வான்மாக்களும் காண ஞானப் பிழம்பாகிய மகாலிங்கத்திலே அடைதலினுலும்; பட்டினத் துப்பிள்ளையார் ஞானமயமாகிய இலிங்கமாய் முளைக்கையிறு லும்; திருவாதவூரர் சர்வான்மாக்களும் காண, திருவாசகத்து க்கு உண்மைப் பொருளைக் கேட்க, 'பொருள்இது' என்று ஞாஞகாசத்திலே பொருந்தினபடியினுலும்" பிராரத்ததேக மாகிய மாயா தேகத்துக்கும் ஞானத்துக்கும் சம்பந்தம் இல் லாத படியினுலே அவர்கள் திருமேனியும் ஞானமென்றே கண்டுகொள்க.* (16)

சர்வான்மாக்களும் தேவரீருக்கு அடிமையாக இருக்கையிலே யும் சிலருக்குத் திருவருள் கடாக்ஷித்தும் சிலருக்குத் திருவருள் கடாக்ஷியாமலும் இருப்பானேன்? என்று கேட்கும் வினு மேல் அருளிச்செய்கின்றது.

நேரிசைவெண்பா

**சொற்ருெழும்பு கொள்ளநீ சூழ்ந்ததுவும் நிற்செயல்கள்**
**மற்றவர்கள் நின்னோக்கின் மாய்ந்தவுயிர்க்—குற்றங்**
**கொளித்தியாங் கைய உயர்வெண்ணெய் நல்லூர்க்**
**குளித்தமதுக் கொன்றையெங் கோ.** (17)

என்பது: *தொழும்பு கொள்ள நீ சூழ்ந்ததுவும் — சர்வான் மாக்களும் தேவரீருக்கு அடிமையாக இருக்கவும் சிலர் தேவரீர் திருவருளைப் பெறத்தக்கதான அடிமைத்திறங்கள் செய்துவரும் உபாயம் கொடுத்தருளினீர்,—*

*நின் செயல்கள் மற்றவர்கள் -மற்றுள்ள பெத்தான்மாக்களையும் தேவரீர் சேட்டைப்படுத்துகையினுலே செயற்பட்டுவருகிறவர்கள்: இங்ஙனம் இரண்டு வகையிலுமுள்ள ஆன்மாக்களும் தேவரீராலே செயற்பட்டு வருமிடத்தும்,—*

*நின் நோக்கின் மாய்ந்த உயிர்க்கு உற்று அங்கு—தேவரீர் திருக் கண் சாத்தினாலே செயல் அறுகை வந்த ஆன்மாக்களிடத்திலே அநுக்கிரகம் செய்து பிரகாசித்து நின்றும்,—*

*ஒளித்தி ஆங்கு—மற்றுள்ள பெத்தரிடத்திலே கூடி நிற்குமி டத்து மறைந்து நின்றும்; இங்ஙனம் வருகிற முறைமையை,—*

*ஐய—அடியேனுக்குச் சுவாமியாய் உள்ளவரே!*

*உயர் வெண்ணெய்நல்லூர் குளித்த மது கொன்றை எம்கோ— சிறப்பினால் உயர்ந்திருக்கப்பட்ட திருவெண்ணெய்நல்லூரிலே மதுக் களினால் முழுகப்பட்ட கொன்றைமாலையைச் சாத்தி எழுந்தருளி யிருக்கப்பட்ட கர்த்தாவாய் உள்ளவரே!*

*சொல் — அடியேன் விண்ணப்பம் செய்த காரியம் இரண்டை யும் அருளிச் செய்யவேண்டும் என்பதாம்.*

*(கருத்து) சிவன் கர்த்தா என்கிறதும் ஆன்மாக்கள் அடிமை என்கிறதும் பொது. இனி, சிறப்பாவது கர்த்தாவை ஆண்டவன் என்று அறிந்து இரண்டற்ற அன்பினாலே வழிபடுகின்ற ஞான வான்களுக்குத் தயிரில் நெய்போலத் தோன்றியிருப்பன். ஆண்ட வன் அடிமை என்று அறியாத பெத்தான்மாக்களிடத்திலே பாலில் நெய்போலத் தோன்றாது நிற்பன். இதற்கு உதாரணம்:— சிவ ஞானபோதம்: "தன்னுணரும், நேசத்தர் தம்பால் நிகழும் ததி நெய்போல், பாசத்தார்க் கின்றாம் பதி." எனவும்; திருவாசகம்: "அரசே பொன்னம் பலத்தாடும்" என்னும் செய்யுளில் "பிறை சேர் பாலில் நெய்போலப் பேசா திருந்தால் ஏசாரோ' எனவும்; தேவாரம்: "விறகிற் றீயினன் பாலிற் படுநெய்போல், மறைய நின்றுளன் மாமணிச் சோதியான்" எனவும் வரும் எதுக்களைக் கண்டுகொள்க.* (17)

இங்ஙனம் உயிர்க்கு உயிராய்நின்று காரியப்படுத்துகிற சிவன் பெத்தத்தில் மறைந்து நின்று காரியப்படுத்துகிற முறைமையும், முத்தியில் பிரகாசித்துத் தான் மேலிட்டு நின்று உபகரிக்கும் முறை மையும் மேல் அருளிச்செய்கின்றது.

## நேரிசை ஆசிரியப்பா

கோலங் கொண்ட வாறுண ராதே
ஞாலம் காவலன் யானெனக் கொளீஇப்
பொய்யை மெய்யெனப் புகன்று வையத்
தோடாப் பூட்கை நாடி நாடா
5 என்னுட் கரந்தென் பின்வந் தருளி
என்னையும் தன்னையும் அறிவின் றியற்றும்
என்னது யானெனும் அகந்தையும் கண்டு
யாவர் யாவையும் யாங்கணும் சென்று
புக்குழிப் புக்குப் பெயர்த்துழிப் பெயர்ந்து
10 மிக்க போகம் விதியால் விளைத்திங்கு
ஏற்பணி யாளாய் எனைப்பிரி யாதே
ஓடி மீள்கென ஆடல் பார்த்திட்
டென்வழி நின்றனன் எந்தை அன்றே !
அருள்மிக வுடைமையின் அருட்டுறை வந்து
15 பொருள்மிக அருள்தலும் பொய்ப்பகை யாதலும்
கைகண்டு கொள்ளெனக் கடலுல கறிய
மெய்கண்ட தேவன் எனப்பெயர் விரீஇத்
தன்னுட் கரந்து தான்முன் னாகித்
தன்னதும் தானுமாய் என்னையின் றாக்கித்
20 தன்னையும் என்னையும் தந்து தனது
செய்யா மையும் எனதுசெய லின்மையும்
எம்மான் காட்டி யெய்தல்
அம்மா ! எனக்கே அதிசயந் தருமே. (18)

என்பது : *கோலம் கொண்ட ஆறு உணராதே ஞாலம் காவலன் யான் என கொளீஇ—துக்கத்துக்கு ஏதுவாய் இருக்கப்பட்ட சரீரத்தை எடுத்தோமே! என்கிறதை விசாரியாமல், பூமிக்கு இராசாவாய் இருக்கிறவன் நாம் அல்லவோ? என்று கருதிக்கொண்டு,—*

*பொய்யை மெய் என புகன்று—அசத்தியமாய் இருக்கப்பட்ட தேகாதிப் பிரபஞ்சத்தைச் சத்தியம் என்று சொல்லிக்கொண்டு,—*

வையத்து ஓடா பூட்கை நாடி நாடா என்னுள் கரந்து—பிரபஞ்ச வியாத்தி பண்ணுகிறதே மேற்கோளாக இருப்பதைச் செய்து நமக்கு ஒரு கர்த்தா உண்டு என்று விசாரியாதபடி எனக்குள்ளே மறைந்துநின்று,—

என்பின் வந்தருளி—நான் செய்யும் செயலுக்கெல்லாம் ஒத் தொழுகி நின்று,—

என்னையும் தன்னையும் அறிவின்று இயற்றும் என்னது யான் எனும் அகந்தையும் கண்டு—நாம் ஓர் அடிமை என்றும் தான் ஒரு நாயன் என்றும் அறியாமற் செய்கிற யான் எனது என்னும் அகந்தையும் கண்டு,—

யாவர் யாவையும் யாங்கணும் சென்று—உயர்திணை அஃறிணை ஆகிய யோனிபேதங்களினும் பூமி அந்தர சுவர்க்கம என்கிற உலகங் களினும் என்னோடு ஒக்கச்சென்று,—

புக்குழி புக்கு—நான் சென்று சென்று செனிக்கிற இடங் களிலே தானும் ஒக்கப் புகுந்து,—

பெயர்த்துழி பெயர்ந்து—நான் விட்டுப்போகுமிடத்துத் தானும் ஒக்கப்பேர்ந்து,—

மிக்க போகம் விதியால் விளைத்து—வெகுவித போகங்களையும் எனக்குள்ள முறைமையின்படியே உண்டாக்கி,—

இங்கு என் பணி ஆள் ஆய்—இவ்விடத்து என்னை ஊட்டி உறக்கி நிற்கிற பண்ணை ஆளுமாய்,—

எனை பிரியாதே—என்னைவிட்டு நீங்குவதும் செய்யாமல்,—

ஓடி மீள்க என ஆடல் பார்த்திட்டு என்வழி நின்றனன் எந்தை அன்னே—நான் செனனமரணப்பட்டுப் போக்குவரவு செய்கிற நாட கத்தையும் பார்த்துத் தன் முதன்மையும் விட்டு என் வசத்திலே நின்றார் எம்முடைய சுவாமியாய் உள்ளவர்: இஃது ஆச்சரியம்! இந்தநிலை பெத்தம்: மேல் முத்தி.

அருள் மிக உடைமையின்—தமக்குக் கிருபை மிகுந்திருக்கை யினலே,—

அருட்டுறை வந்து—திருவெண்ணெய்நல்லூராகிய திருப்படை வீட்டிலே திருவவதாரம் செய்தருளி,—

பொருள மிக அருள்தலும்—சிவாநுபவம் ஆகிய பொருளானது மிகுதியாக நின்று அநுக்கிரகிக்கிறதையும்,—

பொய்ப்பகை ஆதலும்—அந்தப் பொருள் பிரபஞ்சமாகிய பொய்யைக் கடிந்து தீர்க்கிற வழக்கையும்,—

கை கண்டு கொள் என—பிரத்தியக்ஷமாகக் கண்டுகொள் எனக் காட்டியருளி,—

கடல் உலகு அறிய மெய்கண்டதேவன் என பெயர் வி.இ—சமுத்திரம் சூழ்ந்த வையகத்தார் அறியத்தக்கதாக மெய்கண்ட நாதன் என்கிற திருநாமத்தினையும் பரப்பியருளி,—

தன்னுள் கரந்து தான் முன் ஆகி—தன்னுடைய பேரறிவி னுள்ளே என்னுடைய சிற்றறிவை அடக்கிக்கொண்டு தன் செயலே மேலீடாக,—

தனனதும தானும ஆய என்னை இன்று ஆக்கி—தன்னுடைய அருளும் தானுமாய் என்னையும் என்னுடைய ஞானத்தோற்றத்தை யும் அடக்கி,—

தன்னையும் என்னையும் தந்து—தான் ஒரு முதல் உண்டு என் கிறதும் கெடாமல் எனக்குப் புலப்பட அறிவித்து,—

தனது செய்யாமையும் எனது செயல் இன்மையும்—தான் சர் வமும் காரியப்படுத்தி நிற்குமிடத்தும் தான் ஒன்றினும் சுட்டியறி யாமல் தோய்வற நிற்கிற முறைமையினையும், நான் சர்வமும் செய்து நிற்குமிடத்தும் என்னல் ஒன்றும் முடியாது என்கிற செயல் அறு தியையும்,—

எம்மான்காட்டி எய்தல்—எம்முடைய சுவாமியாய் இருக்கிறவர் எனக்குத் தரிசனப்படுத்தி நின்ற முறைமையைப்பார்த்தவிடத்து,-

*அம்மா! எனக்கே அதிசயம் தரும் ஏ—மிகவும் கொண்டாடப் பட்டு எனக்குத்தானே ஆச்சரியத்தையும் தாரா நிற்கும் என்பதாம்.*

*பரமசிவன் பெத்தத்தில் மறைந்துநின்று காரியப்படுத்துகிற முறைமையும் முத்தியில் பிரகாசித்துநின்று உபகரிக்கிற முறைமையும் கண்டு கொள்க.* (18)

இங்ஙனம் பாசக்ஷயம் பண்ணின ஆச்சரியத்தை மேல் அருளிச்செய்கின்றது.

நேரிசைவெண்பா

**தருமா தருமத் தலைநின்றாழ் வேனைக்**
**கருமா கடலவிடமுண் கண்டப்—பெருமான்**
**திருவெண்ணெய் நல்லூர்ச் சுவேத வனத்தான்**
**உருவென்ன வந்தெடுத்தா னுற்று.** (19)

என்பது: *தரும அதரும தலை நின்று ஆழ்வேனை—தன்மமாகிய பசு புண்ணியத்தையும் அதன்ம மாகிய பாவத்தையும் செய்து துக்க சாகரத்திலே கிடந்து அழுந்துகின்ற என்னை,—*

*கரு மா கடல் விடம் உண் கண்டம் பெருமான்—கருமை பொருந்தின மகத்தான சமுத்திரத்திலே உண்டாக்கப்பட்ட நஞ்சினை அமுதுசெய்து அடக்கப்பட்ட கண்டத்தினையுடைய கர்த்தாவாய் உள்ளவரே,—*

*திருவெண்ணெய்நல்லூர் சுவேதவனத்தான்—திருவெண்ணெய் நல்லூராகிய திருப்படை வீட்டிலே எழுந்தருளியிருக்கப்பட்ட சுவேதவனப் பெருமாள் என்னும் பிள்ளைத்திருநாமத்தையுடையவராய்,—*

*உரு என்ன வந்து எடுத்தான் உற்று—சரீர தொந்தனைப்பட்டு நிற்கிற என்னைப்போலே உருப்பட்டுவந்து நான் செனனக்குழியில் அழுந்தாமல் எடுத்துத் தனது திருவடியிலே கூட்டிக்கொண்டருளினர் என்பதாம்.* (19)

கர்த்தா இங்ஙனம் ஆசாரிய மூர்த்தியாகத் திருமேனிகோண் டெழுந்தருளிப் பாசச்சேதனம் பண்ணித் தனது காருண்ணியமா கிய உண்மை ஞானத்தைக் கடாக்ஷித்த முறைமையை வியந்துரை யாகப் புகழ்ந்த முறைமை மேல் அருளிச்செய்கின்றது.

நேரிசை ஆசிரியப்பா.

உற்றவர் பெற்றவர் அற்றவர் முற்றும்
அற்றவாக் கற்றவன் அல்லவர்க் கல்லவன்
அந்த மாதி இல்லவன் வந்து
குரக்கு மனத்துக் கொடியேன் பரக்கும்
5 பரப்பைக் குவித்து நிறுத்திப் பிடித்திட்
டிருள்வெளி யாகு மருளினை அறுத்து
வந்து புகுதலும் சென்று நீங்கலும்
இன்றி ஒன்றாய் நின்றவந் நிலையில்
ஒன்று காமல் இரண்டா காமல்
10 ஒன்று மிரண்டு மின்று காமல்
தன்னது பெருமை தாக்கா தாயினும்
என்னது பெருமை எல்லாம் எய்தித்
தன்னை எனக்குத் தருவதை அன்றியும்
என்னையும் எனக்கே தந்து தன்னது
15 பேரா னந்தப் பெருங்கடல் அதனுள்
ஆரா இன்பம் அளித்துத் தீரா
உள்ளும் புறம்பும் ஒழிவின்றி நின்ற
வள்ளன்மை காட்டி மலரடி அருளிய
மன்னன் எங்கோன் வார்புனற் பெண்ணை
20 வெண்ணை காவலன் மெய்கண்ட தேவன்
அண்ணல் அருளா லயத்தன் நண்ணிய
மலமுத லாயின மாய்க்கும்
உலக வுயிர்க்கெல் லாமொரு கண்ணே. (20)

*என்பது : உற்றவர் பெற்றவர் அற்றவர் முற்றும் அற்றவர்க்கு அற்றவன்—தனது உறவின் முறையாய் உள்ளவர்கள் மாதாபிதாக் கள் தனக்கு வேற்றுமையற்றிருக்கப்பட்ட ஸ்திரீ மற்றுமுண்டான*

தனதானிய க்ஷேத்திரங்கள் முதலாயுள்ள சர்வ உபாதியாய் இருக்கப்பட்ட தேகாதிப் பிரபஞ்சத்தை நீங்கினவர்களுக்கு இரண்டற்றுப்பிரிவற நிற்கப்பட்டவர்,—

அல்லவர்க்கு அல்லவன்—அப்படிச் சர்வ உபாதிகளையும் நீங்காதவர்களுக்கு வேருய் நிற்கப்பட்டவர்,—

அந்தம் ஆதி இல்லவன்—தனக்கு முடிவும் முதலும் இல்லாதவர்,—

வந்து—ஆசாரியமூர்த்தமாகத் திருமேனிகொண்டு எழுந்தருளி வந்து,—

குரக்கு மனத்து கொடியேன் பாக்கும் பாப்பை குவித்து—குரக்குப் போதம் போல ஒன்றிலும் தரிப்பில்லாமல் எழுந்தது புத்தியாகத் திரிகிற பாவியாய் இருக்கிற என்னைப் பிரபஞ்சப்பரப்பில் திரிகிற வியாத்தியை ஒடுக்குவித்து,—

நிறுத்தி பிடித்திட்டு இருள் வெளி ஆகும் மருளினை அறுத்து—தனது திருவடி ஞானத்திலே நிறுத்திப் பழைய பிரபஞ்ச வாதனையிலே போகாமற் பிடித்துக்கொண்டு கேவல சகலம் என்கிற மயக்கத்தையும் நீக்கி,—

வந்து புகுதலும் சென்று நீங்கலும் இன்றி—தான் வந்து என் உள்ளத்தில் புகுதுகிறதும் நான் சென்று தன்னுேடே கூடி எனக்கு உண்டான பாசங்களை நீக்குகிறதும் இல்லாமல்,—

ஒன்ருய் நின்ற அ நிலையில்—அநாதியே தானும் நானும் நீங்காமல் நின்ற நிலையிலே,—

ஒன்று ஆகாமல் இரண்டு ஆகாமல்—தானும் நானும் ஒன்றுபடுவதும் செய்யாமல் இரண்டு படுவதும் செய்யாமல்,—

ஒன்றும் இரண்டும் இன்ருகாமல்—தானும் யானும் ஒன்றுபட்டு நிற்கிறதும் பெறுவானும் பேறுமாய் இரண்டுபட்டு நிற்கிறதும் இல்லையாகாமல்,—

பேதமும் அபேதமும் பேதாபேதமும் ஆகாமல் எனப்பொருள் உரைப்பினுமாம்.

தன்னது பெருமை தாக்கான் ஆயினும் என்னது பெருமை எல்லாம் எய்தி—தனக்கு உண்டான சர்வஞ்ஞானமும் பஞ்சகிருத்தி யமும் எனக்கு உண்டாக்கினன் இல்லை; ஆயினும், எனக்கு உண் டாயிருக்கப்பட்ட இச்சா ஞானக் கிரியைகளையும் வியாத்தி வியா பகங்கள் ஆகிய பெருமையையும் இவைகளெல்லாம் தன்னுடைய பூரணத்திலே அடக்கிக்கொண்டு,—

தன்னை எனக்கு தருவதை அன்றியும் என்னையும் எனக்கே தந்து—தன்னுடைய ஆனந்த சொரூபத்தை எனக்குக் கடாக்ஷித் ததும் அன்றியே அந்தப் பேரின்பத்தோடும் கூடி அநுபவித்திருக் கிற ஆன்மபோதம் ஆகிய சிற்றறிவு கெடாமல் கெட்டு நிற்கிற முறைமையும் எனக்குக் கடாக்ஷித்தருளி,—

தன்னது போானந்தப் பெருங்கடல் அதனுள் ஆரா இன்பம் அளித்து—தன்னுடைய பரிபூரணம் ஆகிய ஆனந்த வெள்ளமான பெரிய அருட் சமுத்திரத்திலே விளையப்பட்டிருப்பதாகிய ஒரு காலத்தினும் உவட்டாத இன்பத்தை எனக்குக் கடாக்ஷித்தருளி,—

தீரா உள்ளும் புறம்பும் ஒழிவு இன்றி நின்ற வள்ளன்மை காட்டி—ஒருகாலத்தினும் விடப்படாமல் அகம்புறம் எங்கும் பூர ணமாய் நின்று அனவரதமும் அறிவித்து நிற்கிற வளப்பாட்டையும் தரிசிப்பித்து,—

மலர் அடி அருளிய மன்ன—தாமரைமலர்போன்ற ஸ்ரீபாதத் தைத் கடாக்ஷித்தருளின தம்பிரானே!

எம் கோன்—எமக்குக் கர்த்தாவாய் உள்ளவர்,—

வார் புனல் பெண்ணை வெண்ணெய் காவலன்—மேன்மேலும் வருகிற புனலினாலே பெருகப்பட்ட பெண்ணையாற்றையுடைய திருவெண்ணெய் நல்லூருக்குக் கர்த்தாவாய் இருக்கப்பட்டவர்,—

மெய்கண்ட தேவன்—மெய்கண்டதேவர் என்கிற திருநாமத் தினையுடையவர்,—

அண்ணல்—எனக்குச் சுவாமியாய் இருக்கிறவர்,—

அருள் ஆலயத்தன்–தனது அருளே கோயிலாக எழுந்தருளி யிருக்கப்பட்டவர்,—

நண்ணிய–என்னை வந்து பொருந்திய,—

மலம் முதலாயின மாய்க்கும் உலக உயிர்க்கு எல்லாம் ஒரு கண்ணே–ஆணவமலம் முதலாயுள்ள மலங்களை எல்லாம் சேதனம் பண்ணினவர், சர்வலோகங்களினும் உள்ள ஆன்மாக்களுக்கெல்லாம் ஓர் அறிவாக நின்று அநுக்கிரகம் செய்தருளுகிறவர் என்பதாம்.

'அற்றவர்க்கு அற்றவன்' என்கிறதற்குத் தேகாதிப் பிரபஞ்சங்களை நீக்கப்பட்ட தபோதனர்க்குக் கர்த்தா இரண்டற்று நிற்பன் என்று பொருள் கூறியதற்குப்பிரமாணம் :—தேவாரம்:"...உலகினியற்கையை ஒழிந்திட், டற்றவர்க்கற்ற சிவனுறைகின்ற ஆலவாயாவதும் இதுவே" எனவும்; தேகாதி என்றது உடம்பு முதலானவற்றை நீங்கவே தவமாம் என்பது கருத்தாகையால் என அறிக. இதற்குப் பிரமாணம்:— திருவாசகம்: "பாவியேற்கு முண்டாமோ பரமாநந்தப் பழங்கடல் சேர்ந், தாவியாக்கை யானெனதென்றி யாதுமின்றி யறுதலே" எனவும்; திருவள்ளுவப் பயன்: "மற்றும் தொடர்ப்பா டெவன்கொல் பிறப்பறுக்கல்–உற் றூர்க் குடம்பு மிகை" எனவும் வருவது கண்டுகொள்க. 'அந்தம் ஆதி இல்லவன்' என்பதற்கு முடிவும் முதலும் இல்லாதவன் என்று பொருள் கூறியது எது? என்னில், சிவன் தோற்றமும் ஈறும் இல்லாதவன் ஆகையாலே அப்படிச்சொன்னது என அறிக. இதற்குப் பிரமாணம் :—திருவெம்பாவை: "ஆதியும் அந்தமும் இல்லா அரும்பெருஞ் சோதியை" என்பது கண்டுகொள்க. இனி, 'வந்து' என்பதற்கு ஆசாரிய விக்கிரகமாக எழுந்தருளி என்று பொருள் கூறியதற்குப் பிரமாணம் :—திருவெம்பாவை: "இங்கு நம் இல்லங்கள்தோறும் எழுந்தருளிச் செங்கமலப் பொற்பாதம் தந்தருளும் சேவகனை" எனவருவது கண்டுகொள்க. 'குரக்கு மனத்துக் கொடியேன் பரக்கும் பரப்பைக் குவித்து' என்பதற்குப் பிரபஞ்சவியாத்தியை ஒடுக்குவித்து என்று பொருள் கூறியதற்குப் பிரமாணம்:— சிவஞானபோதம்: "சிறைவிட், டலைகடலிற் சென்றடங்கு மாறு

போன் மீளா, தலைவிலான் பாதத்தை யுற்று'' என்பது கண்டு கொள்க 'இருள் வெளியாகும் மருளினை அறுத்து' என்பதற்குக் கேவல சகலம் இரண்டினையும் நீங்கி என்று பொருள் கூறியது ஏது? என்னில், கேவலத்தில் ஆணவத்தால் மறைப்புண்டு கிடக்கையால் இருள் என்றது என அறிக. சகலத்தில் கலையாதி தத்துவங் களோடும் கூடிச்சீவிக்கையால் ஒளி என்றது என அறிக. இதற்குப் பிரமாணம் :—சிவப்பிரகாசம் : "புகலுமல மொழித்தற்கு" என் னும் செய்யுளில் 'இகலிவரும் இவையுணரில் இருள் வெளியாம் தன்மை எய்தும்' எனவருவது கண்டுகொள்க.

'இனி வந்து புகுதலும் சென்று நீங்கலும் இன்றி ஒன்றாய் நின்ற அந்நிலையில்' என்பதற்குச் சிவன் ஆன்மாவை வந்து கூடவும் இல்லை. ஆன்மாச் சென்று சிவனைக் கூடவும் இல்லை. என்று பொருள் கூறியதற்குப் பிரமாணம் :—போற்றிப்பஃறொடை: "உள் ளமென்றும் நீங்கா தொளித்திருந்து தோன்றி நின்ற, கள்ளமின்று காட்டும் கழல்போற்றி" எனவருவது கண்டுகொள்க. 'ஒன்றாகாமல் இரண்டாகாமல் ஒன்றுமிரண்டும் இன்றாகாமல்' என்பதற்கு ஆன் மாவும் சிவனும் இரண்டு முதலாயிருக்குமிடத்து ஒன்றுபட்டு நில் லாதென்றும் இரண்டுபட்டு நில்லாதென்றும் ஒன்றும் இரண்டும் இல் லாமல் இராதென்றும் பொருள் கூறியற்குப் பிரமாணம் :—சிவப் பிரகாசம்: "உடலுயிர்கண் அருக்கனறி வொளிபோல் பிரிவரு மத்துவிதமாகும்" எனவும்; திருக்காளத்தியந்தாதி : "உரையும் பொருளும் உயிரும் உடலும், விரையும் மலரும்போல் விம்மிச்- சிதைவின்றிச், சென்றவா றெங்ஙன் திருக்கயிலை எம்பெருமான் நின்றவா றெங்கும் நிறைந்து" எனவும் வருவது கண்டுகொள்க.

இனி, 'தன்னதுபெருமைதாக்கான் ஆயினும்' என்பதற்குத் தனக்குண்டாகிய சர்வஞ்ஞத்துவமும், பஞ்சகிருத்தியமும் எனக்கு உண்டாக்கின்றில்லை ஆயினும் என்றும் பொருள் கூறியது ஏது? என்னில், ஆன்மா முத்தியைப் பெற்றவிடத்தும் சிவனுக்குண்டான தன்மை உண்டாகாது என்பது கருத்து.

இதற்குப் பிரமாணம்:— சிவப்பிரகாசம்: "இன்று நோக்குறை நடக்கும் இயல்பிலோர்க் கிளைய வாய்ந்து, நின்றதோர் அலகை நேர்ந்தால் நிகழ்வதென் அதுபோல் உள்ளத், தொன்றிய உணர்வு தம்பால் உள்ளது நிகழ்த்தும் ஈசன், தன் தொழில் நடத்தும் மேனி தனக்கெனக் கொண்டுதானே." எனவும்; சித்தியார்: "உயிர்தானும் சிவாநுபவம் ஒன்றினுக்கும் உரித்தே" எனவும்; சங்கற்பநிராகரணம்: "நாழி கொள்ளா தாழியின் அலைபுனல் அதனால் கருத்து முதலுள தாகவேண்டும்" எனவும் வருவது கண்டு கொள்க. 'என்னது பெருமை எல்லாம் எய்தி' என்பதற்கு ஆன்மாவுக்குள்ள இச்சா ஞானக் கிரியைகளையும் வியாத்தி வியாபகங்களையும் சிவன் உள்ளே அடக்கிக்கொள்ளுவன் என்று பொருள் கூறியதற்குப் பிரமாணம்:—சித்தியார்: "விரும்பிப் பொன்னினைக் குளிகை ஒளிப்பதுபோல் அடக்கி" எனவருவது கண்டுகொள்க. இனி, 'தன்னை எனக்குத் தருவதை அன்றியும்' என்பதற்குப் பிரமாணம்:— சித்தியார்: "இந்தனத்தின் எரிபாலில் நெய்" என்னும் செய்யுளிலே 'தானாக்கித் தன்னுருவப் பரப்பெல்லாம் கொடுபோந்து பதிப்பனிவன் பாலே' எனவும்; திருவாசகம் "தந்ததுன் றன்னைக் கொண்டதென் றன்னைச் சங்கரா ஆர்கொலோ சதுரர், அந்தமொன்றில்லா ஆனந்தம் பெற்றேன் யாதுநீ பெற்றதொன் றென்பால்" எனவும் வருவது கண்டு கொள்க. 'என்னையும் எனக்குத்தந்து' என்பதற்கு அர்தச்சிவாநுபவத்தை அநுபவிக்கின்ற சிற்றறிவும் கெடாமல் என்று பொருள் கூறியது ஏது? என்னில், சிற்றறிவு கெட்டால் அநுபவிப்பார் இலர் ஆகையால் அப்படிச் சொன்னது என அறிக. முத்தியில் ஆன்மா நின்று அநுபவிக்கும் என்பதற்குப் பிரமாணம்:— உண்மை விளக்கம்: முத்திதனில் மூன்று முதலும் மொழியக்கேள்" என்ற பாட்டும்; சித்தியார்: "உயிர தானும் சிவாநுபவம் ஒன்றினுக்கு முரித்தே" எனவும் சொன்னது இப்பொருள்பற்றி என அறிக. 'தன்னது பேரானந்தப் பெருங்கடலதனுள், ஆரா இன்பம் அளித்து' என்பதற்கு அருட்சமுத்திரத்திலே விளையப்பட்ட இன்பத்தை எனக்குக் கடாக்ஷித்து என்று பொருள் கூறியதற்குப் பிரமாணம்:— சித்தியார்: "சித்தாந்தத்

தேசிவன்றன் திருக்கடைக்கண் சேர்த்திச் செனனமொன்றி லே சீவன் முத்த ராக. வைத்தாண்டு மலங்கழுவி ஞான வாரி மடுத்தா னர் தம்பொழிந்து" என வருவது கண்டு கொள்க.

'நீரா உள்ளும் புறம்பும் ஒழிவின்றிநின்ற வள்ளன்மை காட்டி' என்பதற்கு ஒருகாலத்திலும் விடப்படாமல் சிவன் உள்ளும் புறம்பு மாய் நிறைந்து நிற்பன் என்று பொருள் கூறியதற்குப் பிரமாணம்:- திருவாசகம் : "உம்பர்கட் கரசே ஒழிவற நிறைந்த யோகமே" என வருவது கண்டு கொள்க. 'மலரடி அருளிய மன்னன் எங்கோன்' என்பதற்குத் தாமரை மலர்போன்ற ஸ்ரீ பாதத்தைக் கடாக்ஷித்தருளி னவன் என்று பொருள் கூறியதற்குப்பிரமாணம் :- திருவெம்பாவை "செங்கமலப் பொற்பாதம் தந்தருளும் சேவகனை" என வருவது கண்டு கொள்க. 'அருளாலயத்தின்' என்பதற்கு அருள் கோயிலாக எழுந்தருளியிருக்கப்பட்டவன் என்று பொருள் கூறியது எது? என் னில், சிவன் தனது அருளாகிய சத்தி உடம்பாக எழுந்தருளியிருக் கையால் என அறிக. இதற்குப்பிரமாணம்:— சிவப்பிரகாசம் : "நீடுபரா சத்திநிகழ் இச்சா ஞானம் நிறைகிரியை தரஅதனை நிமலன் மேவி, நாடரிய கருணைதிரு வுருவமாகி" எனவும் ; சித்தியார் : "காயமோ மாயை யன்று காண்பது சத்தி தன்னால்" எனவும்; திருவாசகம்: "உடையாள் நடுவுள் நீயிருத்தி" எனவும் வரும் எதுக் களைக் கண்டு கொள்க.

இனி, 'மலமுதலாயின மாய்க்கும்' என்பதற்கு ஆணவமலம் முதலான எல்லாவற்றையும் சேதனம் பண்ணினவன் என்று பொ ருள் கூறியதற்குப் பிரமாணம் :— போற்றிப்பஃறொடை "முன் னின்று மும்மலம்தீர்த் தாட்கொள்கை" எனவும்; தத்துவவிளக்கம் "கதிதரு காழிமன் காட்டிடும் பாசங்கள் மூன்றவைதாம், பொதிதரு மாணவம் போகஞ்செய் கன்மமும் மாயையுமாம், முதி யது தானென்று முன்பினில் லாதது சேதனன்கண், அதிக மறைப்பன ஆயிர கோடி விருத்திகளே" எனவும் வருவது கண்டுகொள்க. 'உலக உயிர்க்கெல்லாம் ஒரு கண்ணே என்பதற்குச் சர்வான்மாக்களுக்கும் ஓர் அறிவாக நின்று அறிவிக்கிறவன் என்றது எது?

என்னில், ஆதித்தன் ஒன்றாய் இருந்தும் பலகண்களுக்கும் காட்டா நின்றதுபோல் என அறிக. இதற்குப்பிரமாணம்:— சித்தியார்: "கண்கட், கிருளினை ஒளியால் ஓட்டும் இரவியைப் போல ஈசன்" எனவருவது கண்டு கொள்க.

இங்ஙனம் வியாக்கியை செய்யப்பட்ட இந்த இருபாஇருபஃது என்னும் நூலுக்குச் செய்யுட்கள் தோறும் ஆசாரியரைச் சீடன் கேட்கும் வினாவுக்கு விடையாக ஆசாரியரால் அருளிச் செய்யப் பட்ட தெல்லாம் கீழ்ப்பட்டுச்சீடன் சொல்லே மேற்பட்டு வருவதைப் பொருள் எனக் கொள்வாரும் உளர். அது சித்தாந்தப் பொரு ளுக்கு விரோதம் என அறிக. அப்படியானால் வேறு பொருள் கொள்ளுமிடத்து மற்றுமுண்டான நூல்களை ஓதி அறிந்தும், குரு முகாந்தரமாகக் கேட்டறிந்தும், சம்பிரதாயம் ,கைவந்த சித்தாந்தி களுக் கொழியத் தற்போதம் கொண்டு அறிவார்க்கு அறியப்படா தென அறிக. அப்படி ஆசாரியர் சொல் சத்தியமும், சீடன் சொல் அசத்தியமும் என்னும் கருத்துப்பற்றி இநநூலுக்கு வியாக் கியை எழுதினது ஏது ?என்னில் 'கண்ணகன் ஞாலத்து' என்னும் முதல் அகவலிலே 'சிறியருளல் சிறுமையுடைத்தால்' என்று சீடன் கூறியதற்கு உத்தரமாக, ஆசாரியர் 'அபக்குவ பக்குவக் குறிபார்த் தருளினம் குருமுதலாய்' என்பதற்குப் பொருள் நாம் சொன்ன அர்த்தங்களை மாறுபாடாகக் கொள்ளுகையாலே நாம் கோபித்துக் கொண்டோம் என்று ஆசாரியர் திருவுளம்பற்றுகையாலே ஆசாரி யர் திருவுளம் பற்றினதே சத்தியம். அந்த ஆசாரியர் வாக்கியத் துக்குச் சாத்திரசம்மதி எழுதினதினுலும், ஆசாரியர் திருவுளம் பற்றினது சத்தியம் என்கிறதைக் குருமுகாந்தரமாகக் கேட்டு அநுபவத்தால் கண்டுகொள்க.

திருச்சிற்றம்பலம். திருச்சிற்றம்பலம். திருச்சிற்றம்பலம்.

திருத்துறையூர் – ஸ்ரீ அருணந்தி தேவநாயனார் அருளிச்செய்த

**இருபாவிருபது மூலமும்,**

திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனத்து

**ஸ்ரீ நமசிவாயத்தம்பிரான் செய்தருளிய உரையும்**

முற்றுப்பெற்றன.

ஸ்ரீ மெய்கண்ட தேவநாயனுர் மிளிர்கழல் வாழ்க.

ஸ்ரீ அருணந்தி தேவநாயனுர் அடிமலர் வாழ்க.

ஸ்ரீ மாதவச் சிவஞான யோகிகள் மலரடி வாழ்க.

திருச்சிற்றம்பலம்

"வாழ்க அந்தணர் வானவர் ஆனினம்
வீழ்க தண்புனல் வேந்தனும் ஓங்குக
ஆழ்க தீயதெல் லாமரன் நாமமே
சூழ்க வையக முந்துயர் தீர்கவே."

திருச்சிற்றம்பலம்